# நொடிப்புநிலைச் சட்டவியல்

[LAW OF INSOLVENCY]

அ. ர. சனகன்




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த.பா.நி. (க.வெ.) வரிசை எண்—656

# நொடிப்புநிலைச் சட்டவியல்

(பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்
**அ. ர. சனகன்,** பி.எஸ்ஸி., பி.டி., எம்.ஏ., எம்.எல்.,
இளநிலைப் பேராசிரியர்,
சட்டக் கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—October, 1975

T.N.T.B.S. (C.P.) No. 656



# LAW OF INSOLVENCY

A. R. JANAKAN

Price Rs. 4-60

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and Literature in regional languages at the University level of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

*Printed by :*
M/s, MANI PRINTERS,
7, Muthial Naicken Street,
Madras-7.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந்தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகமும், சென்னைப் பல்கலைக் கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'நொடிப்புநிலைச் சட்டவியல்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 656ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 691 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும், கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ், எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்


| இயல் | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | வரலாறும் தத்துவமும் | ... | 1 |
| 2. | ஆள்வரை அதிகார வரம்பு | ... | 9 |
| 3. | நொடிப்புநிலை ஆக்குவினைகள் | ... | 22 |
| 4. | நொடிப்புநிலை கோரிக்கை மனுக்களும் அவற்றின் விசாரணைகளும் | ... | 33 |
| 5. | நீதித் தீர்ப்பாணை உத்தரவும் அதன் விளைவுகளும் | | 49 |
| 6. | நீதித் தீர்ப்பாணையினால் ஏற்படும் நடவடிக்கைகள் | | 54 |
| 7. | நொடிப்புநிலையரின் கடமைகள் | ... | 61 |
| 8. | நீதித் தீர்ப்பாணை உத்தரவைச் செல்லாநிலையாக்குதல் | ... | 65 |
| 9. | கடன் தீர்வு உடன்பாடுகளும் ஏற்பாட்டு ஆவணங்களும் | ... | 69 |
| 10. | நொடிப்பு நிலையரின் விடுப்பு | ... | 75 |
| 11. | கடன்கள் குறித்து எண்பித்தல் | ... | 83 |
| 12. | தோற்ற அளவு உடைமை | ... | 105 |
| 13. | முன்மேவு உரிமைக் கோட்பாடு | ... | 109 |
| 14. | நொடிப்புநிலையும் முன்நடவடிக்கைகளும் | ... | 113 |
| 15. | சொத்துப் பெறுதலும் பகிர்ந்தளித்தலும் | ... | 121 |
| 16. | சொத்தாட்சி அதிகாரிகளும் பேணுநர்களும் | ... | 130 |
| 17. | வழக்கு நடைமுறை பற்றிய விதிகள் | ... | 135 |
| 18. | நொடிப்புநிலைக் குற்றங்கள் | ... | 137 |
| 19. | சிறிய நொடிப்புநிலைகள் | ... | 140 |
| 20. | மேன்முறையீடுகள், சீராய்வு, மறுஆய்வு | ... | 143 |
| | பயன்படுத்தப்பட்ட வழக்குகளின் பட்டியல் | ... | 147 |
| | மேற்கோள் நூற்பட்டியல் | ... | 151 |
| | சட்டச் சொல் அகராதி | ... | 152 |

இயல் 1

# வரலாறும் தத்துவமும்

' அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்'

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப உலகம் தோன்றிய நாளி லிருந்து தம் பொருளாதார அளவறிந்து அளவோடு வாழாதார் நொடிப்புநிலை எய்தினர். வணிகர் வியாபாரத்தில் இழப்புநிலை அடைவதனால் நொடிப்புநிலைக்கு உள்ளாவர். ஏனையோரும் பல காரணங்களால் இந் நிலையை அடைகிறார்கள். கடன்தீர்க்க இயலா நிலையை வெளிப்படுத்தும் செயல் அல்லது சூழ்நிலையின் காரணமாக இந் நிலைக்கு உள்ளானவர் என அதிகாரமுள்ள நீதி மன்றத்தால் தீர்மானிக்கப்பட்டவரே நொடிப்புநிலையர் (Bankrupt) அல்லது இன்சால்வென்ட் (Insolvent) என்று கூறப் படுவர். 'Bankrupt' என்ற சொல் இங்கிலாந்தில் வழங்கும் சட்டங்களில் கையாளப்பட்டு வந்தது. அதன் பொருள், 'முறிந்த விசிப்பலகை அல்லது மேசை' என்பதாகும். வாணிகம் செய்பவர் முறிவு அடைந்தபொழுது, தம் வேலைக்குப் பயன்படு கின்ற விசிப்பலகையை முறித்துவிடும் வழக்கத்தில் பிறந்தது இச் சொல். வேறாகவும் கூறுவதுண்டு. வாணிகம் செய்யாது நொடிப்பு நிலையை அடையும் ஏனையோரை 'இன்சால்வெண்ட்' என்று அழைப்பது வழக்கம். நொடிப்புநிலையில் உள்ளவர்களை, நீதி மன்றம் அவ்வாறு தீர்மானிப்பதற்கு முன், 'இன்சால்வென்ட்' என்றும், அதற்குப்பின் 'பான்க்ரப்ட்' (Bankrupt) என்றும் கூறும் ஒரு வழக்கம் உண்டு. இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் (Constitution of India) ஏழாவது இணைப்பட்டி, மூன்றாவது நிரல், ஒன்பதாவது எண்ணில் இவ்விரண்டு பதங்களும் இடம் பெறு

கின்றன. ஆனால், இந்தியச் சட்டமன்றங்கள் இயற்றிய நொடிப்பு நிலைச் சட்டங்களில் 'இன்சால்வென்ட்' என்ற சொல்லே கையாளப்படுகிறது. தம் கடன் முழுவதையும் செலுத்துவதற்குப் போதிய சொத்தில்லாமை எனத் தீர்மானிக்கப்பட்டவரின் நிலையே நொடிப்புநிலை (Insolvancy). அரசியல் ஒழுங்கமைவு பெற்ற இந்திய சமுதாயத்தில், நீதி நிர்வாக நடவடிக்கைகளுக்கு அடிப் படையாக அல்லது வழிகாட்டியாக அன்னாரின் நிலையைச் சீர்படுத்துகின்ற நெறியமைப்பு 'நொடிப்புநிலைச் சட்டம்' என்கிற பெயருடன் இலங்குகின்றது.

அடிப்படைக் கருத்துகள் இரண்டினை இணைத்து ஒழுங்கு படுத்தும் முக்கிய நோக்கத்திலேயே, அனைத்து நாடுகளின் நொடிப்புநிலைச் சட்டங்கள் அமைந்துள்ளன. கடனாளிகளின் அதாவது கடன்பட்டவர்களின் உடைமைகளைச் சீரிய சிக்கன முறையில், விரைந்து சரிவிழுக்காட்டில் கடனாளர்களுக்கு அதாவது கடன்காரர்களுக்குப் பகிர்ந்தளித்தல் என்பது முதல் கருத்தாகும். கடனாளி தன் சொத்துகள் முழுவதையும் ஒப்படைத்துச் சரணடைந்த நிலையில் கடனாளர்களின் கோரிக்கைகளினின்றும் உரிமைகளையும் கடமைகளையும் (Rights and Duties) அன்னாரின் நபர் திறனையும் (person) விடுத்தல் இரண்டாவது கருத்தாகும். பிளாக்ஸ்டோன் என்ற ஆங்கிலேயச் சட்டப் பேரறிஞர் தாம் வாழ்ந்த நாளில் நொடிப்புநிலையர் குற்றவாளி நிலையில்தான் வைத்து எண்ணப்பட்டனர் என்று கூறுகின்றார். ஆனால், இந் நாளில் நியாயத்தின் அடிப்படையிலும் மனிதப் பண்பாட்டு உணர்வுடனும், தொழில்வளர்ச்சியைக் கருத்தில் கொண்டும் நொடிப்புநிலைச் சட்டம் அமைந்துள்ளது. இதன் அடிப்படையில் கடனாளர்களுக்கு மட்டுமல்லாமல் கடனாளிகளுக்கும் (நொடிப்பு நிலையர்) சில சிறப்புரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. நொடிப்பு நிலையர் எந்தவிதமான மோசடி மறைவின்றித் தம் உடைமைகள் அனைத்தையும் ஒப்படை செய்வதால் கடனாளர்கள் பயனடை வதும், கடனாளியின் நபர் உரிமையை பாதிக்கும் பொதுச் சட்டத்தின் கொடுமையினின்றும் அன்னார் விடுபடுவதும், இருசாரார் பெறும் நன்மைகளாகும். இவை முழுச் சொத்தி னையும் கடனாளர்களிடையே பகிர்ந்தளித்துத் துணைசெய்கின்றன. எதிர்பாராமல், தவிர்க்கவியலாத சங்கடங்களுக்குள்ளாகும் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களின் நிலையைக் கருதியே நொடிப்பு நிலைச் சட்டம் வகுக்கப்பட்டுள்ளது. அத்தகையோரின் நபர் உரிமையைப் பாதுகாக்கவும் அவர்களின் இன்றியமையாத தேவை களுக்கான வருமானத்தை அவர்களுக்கு அளிக்கவும் நொடிப்பு நிலைச் சட்டம் வழிசெய்துள்ளது. முன்னாள் நொடிப்புநிலைச்

சட்டம், குற்றவியல் சட்டத்தின் சாரமாக இருந்து, நொடிப்பு நிலையரைக் குற்றம் புரிந்தவர்களாகக் கருதியது. மனிதத் தன்மைக்கு அப்பாற்றப்பட்ட, கொடுமையான தண்டனைகளை அச் சட்டம் வழங்கியது. பிளாக்ஸ்டோன் காலத்துச் சட்டத்தை விட, மனிதத்தன்மை கொண்டதாக இக் காலத்திய நொடிப்பு நிலைச் சட்டம் காணப்படுகிறது.

பண்டைக்காலங்களில், நம் நாட்டில், கடனாளியின் சொத்தினைப் பறிமுதல் செய்து கடனாளர்களின் நன்மைக்கெனப் பகிர்ந்தளிக்கும் முறை எந்தச் சட்டத்தின் பிரிவிலும் குறிக்கப்படவில்லை. சமுதாயப் பழக்கவழக்கங்களில் காணப்பட்ட முறைகேடுகளின் மூலமாகக் கடனாளர்கள் தனித்தனியாகக் கடன் கொடுத்த பணத்தைப் பெறத் தீர்வு கண்டனர். பின், தருமசாத்திரக் காலத்தில், இந்துச்சட்டம் முழுமையான நிறைவுடன் காணப்பட்டிருந்தும், நொடிப்புநிலைக்கான தீர்வு வழிகளைக் கண்டிலது. மனுமுறையில், கடனை மீட்டுப்பெறுவதற்கான விதிகள் காணப்படுகின்றன. கடனாளர், கடனை மீட்டுப்பெற, கடனாளியின்மீது புகார் சுமத்தினால் அரசர் புகாரின் உண்மைநிலை தெரிந்து, கடனாளியிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கடனாளருக்குக் கொடுத்துதவுவார். அங்ஙனமின்றிக் கடனாளரே நன்முறையில் கடனாளியை இணக்கம் தெரிவிக்க உறுதி செய்யும்படி வற்புறுத்தலாம் அல்லது, பத்திரம் செய்து கொடுத்த பணத்தைச் செலுத்தச் செய்தோ, கடனாளியின் மகனைச் சிறைப்படுத்தியோ, வன்முறைத் தாக்குதல் நடத்தியோ பணத்தைப் பெறலாம். அன்னாரின் அத்தகைய நடவடிக்கைகளுக்காக, அரசர், அத்தகைய கடனாளரின்மீது பழிசுமத்த இயலாது. உற்ற கடனை முழுமையாகத் தீர்க்காமல் விட்டுவிடுவது பாவமென்றும், ஒழுங்குமுறைக்குப் புறம்பல்லாத அக் கடன்களை, உற்றவரோ, அவருடைய மகனோ, மகனுடைய மகனோ தீர்க்கக் கடமைப்பட்டவரென்றும் இந்து தரும நூல்கள் கூறுகின்றன. ஆகவே, இந்துச் சட்டத்தில், நொடிப்புநிலைச் சட்டம் ஒரு பகுதியாக அமையாதது வியப்பிற்கிடமில்லை.

உரோமாபுரியின் சட்டத்தில், கடனாளிகளை நடத்தியமுறை காட்டுமிராண்டித் தன்மையதாக இருந்தது. கொடுத்த கடனை மீட்டுப்பெறக் கடனாளியின் சொத்தின்மீது உரிமைகொண்டாடக் கடனாளருக்கு வழி இல்லை. உரோம் நாட்டைச் சார்ந்தவரின் சொத்தினை அந் நபரினின்றும் பிரித்துப் பறிமுதல் செய்ய இயலாது. எனவே, கடனாளியின் நபர் உரிமை (partner) மீதே உரிமை கொண்டாடவேண்டியிருந்தது. குறித்த நாள்களுக்

குள்ளாகக் கடனாளி கடனைத் தீர்க்கவில்லையாயின், கடனாளர்கள், கடனாளியின் உடலைப் பல துண்டுகளாக வெட்டிக் கூறுபோட்டுக் கொள்ள உரிமை பெற்றிருந்தனர். பிற்காலத்தில் உரோம் சட்டத்திலும், கடனாளியின் சொத்தின்மீது உரிமை கொண்டாடிக் கடனைத் தீர்த்துக்கொள்ள வழிமுறைகள் வகுக்கப் பட்டன. கி.மு. 48-ல் 'Cessio Bonorum' என்ற புதிய முறையில் கடனாளி, தன் சொத்து முழுமையையும் கடனாளர்களிடம் ஒப்பு வித்துச் சரணடைந்து, நொடிப்புநிலையர் என வெளிப்படுத்திக் கொள்ளலாம். இம் முறையினால் கடனாளி சிறைப்படுத்தப் படுவதனின்றும் தப்பிக்க முடிந்தது. இன்றைய எந்த நாட்டின் நொடிப்புநிலைச் சட்டமும் இந்த 'நன்மைக்கான ஒப்படை' என்பதனை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

இங்கிலாந்துச் சட்டமும் முற்காலத்தில் பெரும்பாலும் உரோம் சட்டத்தின் அடிப்படையிலேயே அமைந்திருந்தது. உரோம் நாட்டில், முன்னர் எப்படிக் கடனாளருக்குக் கடனாளியின் சொத்தின்மீது உரிமை கொண்டாட இயலாமல் இருந்ததோ, அதே போன்று இங்கிலாந்திலும் கடனாளியின் தனிநபர் உரிமைமீது உரிமை கொண்டாடக் கடனாளருக்கு வழியில்லாமல் இருந்தது. கடனைத் தீர்க்கின்ற வரையில், கடனாளியைச் சிறையில் இருக்கச் செய்யவேண்டிய கட்டாயத்தினைப் பின்னர், அந் நாட்டினர் உணரத் தலைப்பட்டு, அதற்கேற்பச் சட்ட விதிகளை ஏற்படுத்தினர். இம் முறை பரவப்பெற்றுப் பெரும்பாலான கடனாளர்களால் பின்பற்றப்பட்டது. கவனக் குறைவினால் அல்லது மோசடியினால் அல்லது வறுமையினால் கடனைத் திருப்பச் செலுத்த இயலாத கடனாளிகள் எவராயிருப்பினும், அவர்கள் சிறைப்படுத்தப்பட்டுக் கடன் தீர்க்கப்படும்வரை கடனாளர்கள் கண்காணிப்பில் இருந்தார்கள். கடனைத் தீர்க்க வழியற்ற கடனாளி ஒருவர், சிறையில் பட்டினியால் இறக்காமலிருக்க, தம் நண்பர்கள் செய்யும் அற உதவியினை எதிர்பார்க்கவேண்டிய நிலையில் இருந்தார். இந் நிலையில் சிறைக்காளாக்கிய கடனாளர்களின் கொடுமையைத் தவிர்க்கவும், மோசடியான நயவஞ்சகத் தன்மை கொண்ட கடனாளரின் திட்டங்களைத் தவிர்க்கவும், இரு சட்டங்கள் கி.பி. 1542-லும், 1572-லும் இயற்றப்பட்டன. இவற்றை நொடிப்புநிலைச் சட்டங்கள் எனக் கூறலாம். எனவே, பொதுச் சட்டத்தினையொட்டி, உருவான ஒன்றே நொடிப்புநிலைச் சட்டமாகும். கி.பி. 1542-ல் நாடாளுமன்றத்தில் இயற்றப்பட்ட முதல் நொடிப்புநிலைச் சட்டம் பெரும்பாலும் மோசடி எண்ணங் கொண்ட கடனாளிகளின் நிலையைக் கருத்தில் கொண்டதாக இருந்தது. வணிகக் கடனாளிகளுக்கு மட்டுமன்றி, மற்றைய

கடனாளிகளுக்கும் இச் சட்டம் அளாவியது. இருபத்தெட்டு ஆண்டு களுக்குப் பின்னர்க் கி.பி. 1570-ல் ஏற்பட்ட நொடிப்புநிலைச் சட்டத்தின் அடிப்படையில்தான் இன்றைய சட்டம் உருவாயி ருக்கிறது. இச் சட்டம் நிறைவேற்றப்பட்டு ஆணையாளர் பலர் நியமிக்கப்பட்டனர். ஆனால், இச் சட்டம் வணிகர்களுக்கு மட்டுமே பொருந்துவதாக இருந்தது. கி.பி. 1623-ல் நிறைவேறிய நொடிப்புநிலைச் சட்டம் வணிகக் கடனாளிகளின் நொடிப்புநிலை, எதிர்பாராத நிலையினாலன்றி, வேறு தவறான செயல்களினால் ஏற்பட்டிருப்பின், ஆணையாளரின் தீர்ப்பின்படி, அத்தகைய நொடிப்பு நிலையர் பொது இடத்தில் உள்ள தூணில் இரண்டு மணி கால அளவு நிறுத்தப்பட்டு, அன்னாரின் காது ஒன்றினை ஆணி கொண்டு தூணுடன் அறைவதோடு, அக் காதினை வெட்டி எடுப்பதற்கும் வழிசெய்தது. கி.பி. 1705-ல் இயற்றப்பட்ட நொடிப்புநிலைச் சட்டத்தின்படி கடனாளி தன் சொத்து முழுவதையும் சட்டப்படி ஒப்புவித்துப் பின் 'விடுப்புக் கட்டளை' (Discharge) ஒன்றைப் பெறல் ஆகும். இத்தகைய, உறுதியாக்கச் சான்றிதழ் (Certificate of Confirmity) பெற்றவர், கடனாளரின் பிடியினின்றும் விடுபட்டுப் புதிய வாழ்வினைத் தொடங்க முடிந்தது. மாறாகக் கடனாளி, ஆணை யாளரிடத்தில் சொத்தினை ஒப்புவிக்கத் தவறினாலும், சொத் தினைப் பதுக்க முயன்றாலும் மரண தண்டனை அடைய வேண்டும் என்ற விதி முதன்முறையாக இதில் காணப் பட்டது. கி.பி. 1820-ல் இதன் கடுமை மாற்றப்பட்டு ஆயுள் தண்டனை அல்லது குறைந்தது ஏழு ஆண்டுத் தண்டனையாகக் குறைக்கப்பட்டது. கி.பி. 1706-ல் இயற்றப்பட்ட சட்டத்தால் விடுப்புக்கட்டளைச் சான்றிதழ் பெறுவதன் முன்னர், கடனாளர்கள் இசைவு வேண்டும் என்ற விதிமுறை புகுத்தப்பட்டது. இச் சட்டத்தினால் கடனாளர்கள், உரிமை மாற்றம் பெறுபவர்களை (Assignees) நியமிக்க முடிந்தது. கடனாளியின் ஒப்புவிக்கப்பட்ட சொத்தினைக் கடனாளர்களின் நன்மையைக் கருதி ஆணையாளர் இத்தகைய உரிமை மாற்றம் பெறுபவர்களிடம் ஒப்படைத் தார். அவர்கள், நொடிப்புநிலையரின் கடனாளிகளுடன் உடன்பாடு செய்துகொள்ளவும் முடிந்தது. கி.பி. 1732-ல் உண்டான சட்டம் நொடிப்புநிலையரின் மோசடியைத் தடுக்கும் சட்டம் என்றழைக்கப்பட்டது. கி.பி. 1806-ல் சர் S. உரொமில்லி (S. Romilly) இதன்மீது திருத்தங்கள் சில கொணர்ந்தார். அவ்வாறே சர் W.D. இவான்ஸ் (W.D. Evans) என்பவர் வெளியிட்ட, 'A Letter on a revision of the Bankrupt Laws' என்ற நூலில் நடைமுறைக்கு ஒத்த, அறிவியல் அடிப்படையிலான கருத்துகளைத் தெரிவித்தார். அன்னார்தாம்

முதன்முதலில் தம்மிச்சையான அளிப்புக் (Voluntary Cession) கொள்கையை வகுத்துத் தந்தார். கி.பி. 1825-ல் ஏற்கெனவே இருந்த, இயற்றிய சட்டங்கள் அனைத்தும் நீக்கம் செய்யப்பட்டு, அவற்றிலுள்ள இன்றியமையாத கட்டுவாசகங்கள் ஒன்றாகச் சேர்க்கப்பட்டுப் புதியதொரு சட்டம் இயற்றப்பட்டது. முதன் முறையாகக் கடனாளி, தன் நொடிப்புநிலையினை அறிவித்ததன் பின்னர், கடனாளரின் வேண்டுகோளின்படி, 'ஆணைக்குழு' நிய மிக்கும் முறையை இச் சட்டம் அமைத்தது. மிக முக்கிய நொடிப்புநிலைச் சட்டங்கள் முறையே 1849, 1869, 1883, 1914ஆம் ஆண்டுகளில் இயற்றப்பட்டவையாகும். 150 ஆண்டு களில், 38 சட்டங்கள் இயற்றப்பட்டன. 1926ஆம் ஆண்டுச் சட்டத்தில், முன்னர் இருந்த சட்டங்களில் திருத்தங்கள் மேற் கொள்ளப்பட்டும், பின்னரும் சில திருத்தங்கள் செய்யப்பட்டன. கம்பெனிச் சட்டம் 1947-லும் மேற்கொள்ளப்பட்டது. பிறகு உறுதியாக்கச் சான்றிதழ் (Certificate of Conformity) என்பது நீக்கப்பட்டு, விடுப்புக் கட்டளை (Order of Discharge) என்ற வகை ஏற்பட்டது. வணிகரல்லாத நொடிப்புநிலைக் குள்ளான மற்றவரின் நிலையை நிர்ணயிக்க கி.பி. 1838-ல் இயற்றப்பட்ட சட்டத்தின்மூலம் தனி வழக்குமன்றம் ஏற்படுத் தப்பட்டது. கி.பி. 1844-ல் இயற்றப்பட்ட சட்டத்தினால் கடனாளி சிறைப்படுத்தப்படுவதனின்றும் பாதுகாக்கப்பட்டார். ஆயினும் அவருடைய நொடிப்பு நிலைக்குப் பின்னர்க் கிடைத்த சொத்துகளும் (After-acquired Property) கடன்களுக்குச் சம்பந் தப்பட்டவை என்று ஏற்றுக்கொள்ளப்பட்டது. கி.பி. 1861-ல் நொடிப்புநிலைச் சட்டமானது வணிகர், வணிகரல்லாத அனைத்து நொடிப்புநிலையருக்குமாக இயற்றப்பட்டு முன்னர் உருவான நீதி மன்றங்கள் நீக்கப்பட்டன.

இந்தியாவில், கிழக்கிந்தியக் கம்பெனி, வியாபாரத்திற்காக ஏற்படுத்திய இடங்களை ஆட்சிசெய்யக் குழுக்கள் அமைக்கப் பட்டன. அதன் தலைவரின் ஆட்சிக்குட்பட்டிருந்த கல்கத்தா (Fort Williams), சென்னை (Fort St. George), பம்பாய் முதலான நகரங் களில் முதன்முதலாக கி.பி. 1828-ல் நொடிப்புநிலை வழக்கு மன்றங்கள் அமைக்கப்பட்டன. இந் நகரங்களே மாநகரங்கள் (Presidency Towns) என்றழைக்கப்பட்டன. இந் நீதிமன்றங் களின் அதிகாரிகள் தலைமை நீதிமன்றத்தினால் நியமிக்கப் பட்டனர். பொது உரிமை மாற்றம் பெறுபவர் (Common Assignee) அத்தகைய அதிகாரிகளில் ஒருவராக இருந்தார். கடனாளர் ஒருவர், கடனாளியை நொடிப்புநிலையராக அறிவிக்கக் கோரி நீதித் தீர்ப்பு (Adjudication) கோரினால், அதன்மீது

கட்டளை பிறப்பிக்கப்பட்ட உடனேயே, கடனாளியின் சொத்து மேற்சொன்ன அதிகாரியின் அதிகாரத்துக்குட்பட்டுவிடும். இந்தியச் சட்டம் ஆங்கிலச் சட்டத்தின் வழியில் அமைந்துள்ளது. கி.பி. 1848-ல், முன்னர் இயற்றப்பட்ட சட்டங்கள் நீக்கம் செய்யப்பட்டுப் புதியதோர் 'இந்தியர் நொடிப்புநிலைச் சட்டம்' (Indian Insolvancy Act) இயற்றப்பட்டது. இச் சட்டம் வணிகர், வணிகரல்லாதார் என இருவேறுபட்ட நொடிப்பு நிலையர்க்கிடையே காணப்பட்ட மாறுபாடுகளை உள்ளடக்கிக் காணப்பட்டது. கி.பி. 1861-ல் ஏற்படுத்தப்பட்ட சட்டத்தினால் தலைமை நீதிமன்றங்கள் (Supreme Court) நீக்கப்பட்டு உயர்நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டன. இதனால் உயர்நீதிமன்ற நீதிபதிகள் நொடிப்புநிலை வழக்குகட்குத் தீர்வு கண்டனர்.

கி.பி. 1848-ல் நொடிப்புநிலைச் சட்டம் கடனாளர்களின் நன்மையை விட, கடனாளிகளின் நன்மைக்கே முக்கியத்துவம் அளித்தது. எனவே 1909-ல் இங்கிலாந்து நாட்டு நொடிப்புநிலைச் சட்டத்தின் அடிப்படையில் மாநகரங்கள் நொடிப்புநிலைச் சட்டம் (Presidency Towns Insolvancy Act III of 1909) உண்டாயிற்று. இச் சட்டம் இந்திய நாடாளுமன்றத்தில் இயற்றப்பட்டது. கி. பி. 1907-ல் மாநில வழக்குமன்றங்கள் கடைப்பிடிக்க உருவான மாநில நொடிப்புச் சட்டமானது, கி.பி. 1920-ல் Act III of 1909 நீக்கம் செய்யப்பட்டு, இப்பொழுது அமலில் உள்ள மாநில நொடிப்புச் சட்டம் (Act V of 1920) இயற்றப்பட்டது. மா நகரங்கள் நொடிப்புச் சட்டம், மாநில நொடிப்புச் சட்டம் ஆகிய இரண்டுமே ஆங்கில நொடிப்புச் சட்டத்தின் அடிப்படையில் அமைந்துள்ளன. இரண்டில் மாநிலச் சட்டம் காலத்தால் பிந்தியது என்பதனால் சில நல்ல வகையங்களைக் கொண்டிருக்கின்றது. குறிப்பிட்ட சில மாறுபாடுகளைத் தவிர இரண்டு சட்டங்களும் பெரும்பாலும் ஒத்து அமைகின்றன. இரண்டு சட்டங்களுடன், நீதிமன்றங்களால் தங்கள் நடைமுறைக்காக வகுக்கப்பட்ட விதிகளும் இருக்கின்றன. மாநகர்ச் சட்டம் பிரிவு 12-ம், மாநிலச் சட்டம் பிரிவு 79-ம் இதற்கு வகை செய்கின்றன. இந்தியா முழுவதற்கும் நொடிப்புநிலைச் சட்டம் ஒன்று மட்டுமே இருத்தல் நலம் என்று கருதுகிறார்கள். சரித்திரப் போக்கினால், இதனை இன்றும் செய்ய இயலவில்லை. இரண்டு சட்டங்களின் முக்கியக் கூறுகளைக் கண்ணோட்டம் கொள்ளலாம்.

கடனாளியை நொடிப்புநிலைக்குள்ளாக்க வேண்டிய நீதிமன்றத் தீர்ப்பினைக் கோரி, கடனாளியோ, கடனாளரோ நீதிமன்ற நடவடிக்கை எடுப்பது தொடக்க நிலையாகும். அதற்கு அடிப்படை,

கடனாளியின் ஒரு செயல் அதை நொடிப்புநிலை ஆக்குவினை எனலாம். அத்தகைய கோரிக்கையின்மீது நீதிமன்றம் குறிப்பிட்ட கட்டு வரம்புகள்பற்றித் திருப்தி கொண்டிருந்தால் கடனாளியை நொடிப்புநிலையர் என்று தீர்ப்பளிக்கும். சில சந்தர்ப்பங்களில் இந்தத் தீர்ப்பை ரத்து (Annul) செய்யலாம். தீர்ப்பின் விளைவாகக் கடனாளியின் சொத்து முழுமையும், அதற்கென அரசினால் நியமிக்கப்பட்ட அலுவலரின் மாநகர்ச் சட்டம் (Official Assignee) அல்லது மாநிலச் சட்டம் (Official Receiver) ஆட்சிக்குட்படும். மேலும் கடனாளர்கள், கடனாளிக் கெதிராக உரிமை இயல் வழக்குத் தொடரவோ, தீர்ப்பாணை (Decree) பெறவோ நீதிமன்றத்தின் இசைவின்றி முடியாது. கடனாளி தன் சொத்திருப்பு (Assets), கடன் நிலுவைகள் (Outstandings) முதலானவை பற்றிய பட்டியல் (Schedule) ஒன்றினைத் தொகுத்து அளிக்க வேண்டும்.

பின்னர், சொத்தாட்சி அலுவலர் மூலமாக நீதிமன்றம் நொடிப்புநிலையரின் நிலையினை ஆராய்ந்து, அவரையும், விவரம் தெரிந்த மற்றவரையும் விசாரித்து, கடனாளர்களின் கோருரிமைகளையும் (Claims) கவனத்தில் கொண்டு கடனாளியின் அசைபொருள், அசையாப்பொருள் இரண்டினின்றும் பெற்றவற்றைக் கடனாளர்க்கிடையே கோருரிமை விகிதத்தில் பகிர்ந்தளிக்கும். கடனாளிகளும் கடனாளர்களும் இசைந்து, கடனைத் தீர்க்கும் உடன்பாடு (Composition) செய்துகொள்ளலாம். இந்த ஏற்பாடு முடிவடைவதற்குள்ளேயே நொடிப்புநிலையர் சட்டத்தின் விதிகளை மீறுது, சட்ட முரணான அல்லது தவறான நடத்தைகளினால் குற்றவாளியாக நீதிமன்றம் கருதப்படாமலிருந்தால் அவர் விடுப்புப் (Discharge) பெற உரிமை உடையவராவார். விடுப்புப் பெறுவதன்மூலம், நொடிப்புநிலையர் மீண்டும் உரிமைகொண்ட மனிதராக (Free-man) ஆவார். அதுவரை நீதிமன்றத்தால் அனுமதிக்கப்பட்ட அன்னாரின் கடன்களும் பொறுப்புகளும், அவரையோ, விடுப்புத் தேதிக்குப் பின் அவருக்குக் கிடைக்கின்ற சொத்துகளையோ கட்டுப்படுத்தாது. விடுப்பிற்கு முன், நொடிப்புநிலையரால் செய்யப்பட்ட பராதீனங்கள் விநியோகங்களைத் தக்க காரணங்களுக்காக நீதிமன்றம் ரத்து செய்யலாம்.

இயல் 2

# ஆள்வரை அதிகார வரம்பு

## (Jurisdiction)

இவ்விரண்டு சட்டங்களில், வரையறுக்கப்பட்ட பதங்களின் பொருளையும், நடவடிக்கைகள் எடுக்கவேண்டிய நீதிமன்றங்கள் எவை என்பதையும், அவற்றின் அதிகாரங்களையும், இந்த இயல் விவரிக்கிறது. இவை மாநிலச் சட்டத்தின் பிரிவுகள் 1 முதல் 5 வரையிலும், மாநகரங்கள் சட்டத்தின் பிரிவுகள் 1 முதல் 7 வரையிலும் அடங்குகின்றன. உரிமையியல் நடைமுறைச் சட்டத்தில் (Civil Procedure Code) காணப்படும் வரையறைகள் (definitions) பெரும்பாலும் நொடிப்புநிலைச் சட்டங்களுக்கும் பொருந்துகின்றன. அத்தகைய வரையறைகளில் கொண்ட முடிவான பொருள்கள், குறிப்பிட்ட பொருள் கொண்டவையாக அல்லது நிலைக்கு முரணானதாக இல்லாத நிலையில் கீழ்க்காணும் வரையறைகள் கொண்டதாகச் சொற்கள் கையாளப்பட்டுள்ளன. கடனாளர் (Creditor) என்ற சொல் தீர்ப்பாணை பெற்றவரையும் (Decree Holder) குறிக்கும். கடன் (Debt) என்பது தீர்ப்புக் கடனையும் (Judgement-Debt) உள்ளடக்கியது. கடனாளி (Debtor) என்ற சொல் தீர்ப்புக் கடனாளியையும் (Judgement Debtor) இணைத்து நிற்கும். சொத்து (property) என்பது தன் நலனுக்காக, சொத்துகளை அல்லது அதன் பயன்களைச் (profits) செலவிடும் உரிமை யினையும் (Disposing power) குறிக்கிறது. ஆகவே, பொறுப்பான சொத்து (trust property) பிரிவு 2-ன்படி சொத்து ஆகாது. ஏனெனில், அதைத் தன் நன்மைக்காக விநியோகம் (dispose) செய்யும் அதிகாரம் trustee-க்குக் கிடையாது. கடனாளர் ஒருவர் தமக்கு வரவேண்டிய கடனுக்காக அடைமானம் (mortgage), பொருட்பிணைப் பொறுப்பு (charge) அல்லது கடனாளியின் சொத்தின்மீது பற்றுரிமை (lien) இவற்றை வைத்திருந்

தால் அவர் பிணைக்கடனாளர் (Secured Creditor) எனப்படுவார். மாநகர் நொடிப்புச் சட்டத்தின் 2ஆவது பிரிவு (g) துணைப்பிரிவின் படி நிலக் குத்தகையின்பொருட்டு, காலச் சூழ்நிலையில் உள்ள சட்டத்தின்கீழ், நிலத்தின்மீது பொருட்பிணைப் பொறுப்பு வைத்துள்ள நிலச் சொந்தக்காரரையும், 'பிணைக் கடனாளர்' என்ற சொல் உள்ளடக்கும். சொத்துரிமை மாற்றம் (Transfer of property) என்பது சொத்தின்மீதுள்ள உரிமை (interest) மாற்றத்தையும் அதன்மீதுள்ள பொருட்பிணைப் பொறுப்பு ஏற்படுத்துவதையும் (creation) குறிக்கின்றது.

**மாநகர்ச் சட்டத்தின் ஆள்வரை அதிகார வரம்பு :** மாநகரங்களாகிய கல்கத்தா, சென்னை, பம்பாய் இங்கு ஆள்வரை கொண்ட நீதிமன்றம், அங்குள்ள உயர்நீதிமன்றம் ஆகும். அந் நகரங்களுக்கு வெளியே உள்ள பிரதேசங்களுக்கு அந்த ஆள்வரை கிடையாது. இந்தியாவின் தலைநகராகிய தில்லிக்கும், மற்ற மாநிலங்களின் தலைநகரங்களுக்கும், மாநகர்ச் சட்டம் அளாவுதல் செய்யாது. இது எதனால் என்றால், முதன்முதலாக 1829-ல் நொடிப்புநிலை நீதிமன்றங்கள் இந்த மூன்று நகரங்களில் மட்டும் நிறுவப்பட்டன. கல்கத்தா, சென்னை, பம்பாய் இந்த நகரங்களைத் தலைநகரங்களாகக் கொண்ட மாநிலங்களை மட்டுமே 'Presidencies' என்று அழைத்தனர். பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள இதரப் பகுதிகளை மாநிலங்கள் (Provinces) என்று வேறாக அழைத்தனர். மற்றத் தலைநகரங்களில் மாநிலச் சட்டமே நிலவியுள்ளது.

**மாநிலச் சட்டத்தின் ஆள்வரை அதிகார வரம்பு :** 1-11-1956-க்கு முன் 'ஙா' பகுதி (B) ஆயிருந்த மாநிலங்களையும், பட்டியல் மாவட்டங்களையும் தவிர, மாநகரங்கள் அல்லாத இந்தியா அனைத்திற்கும் மாநிலச் சட்டம் அளாவுதல் செய்கிறது. இந்தியா, பிரிட்டிஷ் ஆட்சியில் இருக்கும்போது, பிரிட்டிஷ் இந்தியா என்றும், சுதேச மன்னர்களால் ஆளப்பட்ட இந்தியா என்றும் பிரிக்கப்பட்டிருந்தது. பின்னதே இப்பொழுது பகுதி 'ஙா' மாநிலங்கள் என்று கூறப்படுகின்றது. பிரிட்டிஷார் காலத்தில் ஆளுநர்கள் (Governors) ஆட்சிக்குட்பட்டிருந்த மாநிலங்களே பகுதி 'கா' (A) மாநிலங்கள் என்றும், தலைமை ஆணையாளர்கள் (Chief Commissioners) ஆட்சியில் இருந்த மாநிலங்கள் பகுதி 'சா' (C) மாநிலங்கள் என்றும் கூறப்படுகின்றது. பட்டியல் மாவட்டங்கள் எவை என்பது 1874-ன் 14ஆவது இந்தியச் சட்டத்தில் கூறப்பட்டிருக்கிறது.

மாநில நொடிப்புநிலைச் சட்டம் 3ஆவது பிரிவின்படி மாவட்ட நீதிமன்றங்களும் அரசினரால் அறிவிக்கப்பட்ட ஏனைய, அவற்றின்

கீழான நீதிமன்றம் அல்லது நீதிமன்றங்களும், நொடிப்புநிலை அதிகாரத்தை அமல்படுத்துகின்றன. கீழ் நீதிமன்றங்கள், மாவட்ட நீதிமன்றங்களுடன் சேர்ந்து செயல்படுகின்ற (Concurrent Jurisdiction) அதிகார வரம்பினைக்கொண்டுள்ளன. மேலும், அப் பிரிவில், சிறு வழக்கு நீதிமன்றம் (Small causes Court) நொடிப்பு அதிகார வரம்பினைப்பொறுத்து மாவட்ட மன்றத்தின்கீழ்க் செயல்படும் என்று கூறப்பட்டுள்ளது. (இலாகூர் வழக்கு ஒன்றில், நொடிப்புநிலையின் சாதாரண அதிகார வரம்பு, மாவட்ட நீதிமன்றத்துக்குட்பட்டு இருப்பினும், கீழ் வழக்கு மன்றத்திலுள்ள நொடிப்புநிலை நடவடிக்கையைத் தன்னிடத்திற்கு மாற்றிக்கொள்ளுகின்ற உயர்நீதிமன்றத்திற்குள்ள தனி அதிகார வரம்பினை உள்ளடக்கியே, 3ஆம் பிரிவு காணப்படுகிறது என்று தீர்ப்பளிக்கப்பட்டது.)

மாநகர், நொடிப்புநிலைச் சட்டம் 4ஆம் பிரிவின்படி, அனைத்து உயர்நீதிமன்ற நீதிபதிகளும், சமநிலையும் ஒரே மாதிரியான அதிகாரவரம்பும் கொண்டுள்ளார்கள். ஆயினும், நீதி நிர்வாகத்திற்காக, ஒவ்வொரு நீதிபதிக்கும், பல்வேறு வகையான வழக்குகளை ஆராய்ந்து தீர்க்க, சமவாய்ப்பளிக்க வேண்டி, தலைமை நீதிபதிக்குப் பல்வகையான நீதிப் பணிகளையும் வெவ்வேறு நீதிபதிகளிடம் பகிர்ந்தளிக்கும் பணி ஒப்புவிக்கப்பட்டுள்ளது. தலைமை நீதிபதியின் எண்ணத்திற்கிணங்க, மாற்றமேதுமில்லாமல், ஒரு நீதிபதியேகூட, நொடிப்புநிலை அதிகார வரம்புடையவராக இருக்கலாம். நொடிப்புநிலை விவகாரங்களைப் பொறுத்தும், அத்தகைய பணியினை அவர் செயல்படுத்துகின்ற நிலையிலும் அவர் நொடிப்புநிலை நீதிபதி (Insolvancy Judge) என்றழைக்கப்படுகின்றார்.

5ஆம் பிரிவில், இவ்வாறு நொடிப்புநிலை அதிகார வரம்பு மேற்கொண்ட நீதிபதி பொதுமக்களுக்கு வருகை வாய்ப்புள்ள மன்றத்திலோ (Open Court) தன் அறையிலோ (Chambers) அத்தகைய தன் அதிகாரத்தை முழுமையாகவோ பகுதியாகவோ செயல்படுத்துவது அன்னாரின் விருப்பத்தைப் பொறுத்ததாகும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. தன் ஆள்வரையிலுள்ள எல்லாவற்றையுமோ சிலவற்றை மட்டுமோ, இச் சட்டத்திற்கும் அதன் கீழான விதிகளுக்கும் உட்படும் தம் அறையிலோ, திறந்த மன்றத்திலோ அவர் விசாரிக்கலாம். உரிமையியல் வழக்கு மன்றத்தினால் உத்தரவளிக்கப்பட்ட வாழ்க்கைப் பொருளுதவியினைத் (Maintenance) தரத் தவறிய கணவன்மீது, மனைவியால் கொண்டு வரப்பட்ட நொடிப்புநிலைக் கோரிக்கை சில வேளைகளில் விசாரணைக்கு

வரக்கூடும். வேறு சில வேளைகளில் பொதுமக்கள் மிகவும் ஆர்வம் காட்டும் சிலர் சம்பந்தப்பட்ட நொடிப்புநிலை விவகாரங்கள் விசாரணைக்கு வரலாம். இத்தகைய சமயங்களில், நீதிபதி, சட்டத்தின் 5ஆவது பிரிவின்கீழ், அவற்றைத் தம் அறையிலேயே விசாரிக்கலாம்.

ஆயினும் 38ஆவது பிரிவின்கீழ் விடுப்பிற்கான மனுவை வழக்கு மன்றத்திலேயே விசாரிக்கவேண்டும். பொதுவாக, எந்த ஒரு கோரிக்கையையோ மனுவையோ அதற்கென உத்தரவு இடப்பட்டிருந்தாலொழிய திறந்த வழக்கு மன்றத்திலேயே நடத்துதல் வேண்டும்.

மாநில, நொடிப்புநிலைச் சட்டம் பிரிவு 3-ல் காணப்படும் கட்டு வாசகம், கீழ்நீதிமன்றம் ஒன்றிற்கு, நொடிப்புநிலை பற்றிய மனுக்கள், கோரிக்கைகள் என்பதற்கான அதிகார வரம்பினை மாநில அரசு, அறிக்கையின்மூலம் அளிக்கலாம் என்று தெரிவிக்கின்றது. அச் சமயம் மாவட்ட நீதிமன்றத்துடன் சேர்ந்து செயல்படுகின்ற (Concurrent) அதிகாரம் கொண்டதாக அந்த நீதிமன்றம் இலங்கும். அதே சமயம் குறிப்பிட்ட வழக்குகளையே விசாரிப்பதற்குமட்டும் அம் மன்றங்களை மாநில அரசு அறிவிக்கலாம்.

நொடிப்புநிலைக் கடனாளரின் (Petitioning creditor) கோரு உரிமையினை (claim), இச் சட்டத்தின் 9ஆவது பிரிவில் கூறப்படுகின்ற கடன் வரையறைக்குட்பட்டதா என்பதனை விசாரிக்கின்ற அதிகார வரம்பினை, இத்தகைய நொடிப்புநிலை நீதிமன்றம் உடையதாக உள்ளது. ஒருவர், மற்றவருக்குச் செலுத்தவேண்டிய தொகை நிர்ணயிக்கப்பட்ட கடனாக இருக்க வேண்டும். ஒப்பந்த மீறுகையினால் மற்றவர் சார்த்துரை (Allegation) செய்வதனால் ஏற்படுகின்ற உரிமை (claim) இதனுள் அடங்காது.

### அதிகார அளிப்படைவு (Delegation of Powers)

மாநகர்கள், நொடிப்புநிலைச் சட்டம் 6ஆவது பிரிவின்கீழ், தலைமை நீதிபதி, நொடிப்புநிலை நீதிமன்றத்திலுள்ள அதிகாரங்கள் சிலவற்றை, அவரால், அதற்கென நியமிக்கப்பட்ட நீதிமன்ற அதிகாரி ஒருவரால் செயல்படுத்த உத்தரவிடலாம். அத்தகைய அதிகாரி, அத்தகைய அதிகாரங்களைச் செயல்படுத்துவதற்கான நீதிமன்றமாகக் கருதப்படுவார். அவ்வாறு அளிப்படைவு பெற்ற அதிகாரங்களாவன:

(i) கடனாளிகளின், நொடிப்புநிலை மனுக்களைக் விசாரித்து அவற்றின்மீதான நீதித்தீர்ப்பு (Adjudication) உத்தரவிடல்.

(ii) நொடிப்புநிலையருக்குப் பொது விசாரணை வைத்தல் (Public Examination).

(iii) நீதிபதியின் அறையில் தீர்மானிக்கலாம் என்று விதிக்கப்பட்ட அல்லது அமலாக்கப்படலாம் என்றுள்ள உத்தரவுகள் அல்லது அதிகார வரம்புகளை அமல்படுத்தல்.

(iv) எதிர்ப்பில்லா (unopposed) அல்லது மறுதரப்பினர் முன்னிலையாகாத (exparte) கோரிக்கையினைக் கேட்டு முடிவு செய்தல்.

(v) 36-ஆவது பிரிவின்கீழ் நீதிமன்றத்தின் அழைப்பாணையின்படி (summons) தருவிக்கப்பட்ட எந்த ஒரு நபரையும் விசாரித்தல்.

(vi) அந்த அலுவலர் அவமதிப்பிற்காக (contempt) எந்த நபரையும் மேல் விசாரணைக்கனுப்பும் அதிகாரம் உள்ளவரல்லர். இத்தகைய அதிகாரம் நொடிப்புநிலை அதிகார வரம்பினை அமலாக்கும் நீதிபதிக்குத்தான் உண்டு.

மாநில, நொடிப்புநிலைச் சட்டம் இத்தகைய அதிகார அளிப்படைவுபற்றி எத்தகைய வழிவகையும் செய்யவில்லை. ஆயினும், சொத்தாட்சி அதிகாரி (Official Receiver) ஒருவர் நியமிக்கப்படுகின்றபோது, இத்தகைய அதிகாரங்களில் சில அளிப்படைவு செய்ய வழிசெய்துள்ளது. மாநிலச் சட்டத்தின் 80ஆவது பிரிவில் இதுபற்றிய வரையறை காணப்படுகின்றது. இச் சட்டத்திற்கு முன்பு, முந்தைய கட்டத்தில் பெரும்பான்மையான அதிகாரங்கள் சொத்தாட்சி அலுவலருக்குக் கொடுக்கப்பட்டிருந்தன. விடுப்பிற்கான (discharge) அனுமதி வழங்கும் அதிகாரம், கடன் தீர்வு உடன்பாடு (composition), ஏற்பாடு (arrangement) போன்றவற்றுக்கான திட்டங்களை ஒப்புதல் முதலான அதிகாரங்கள் பழைய சட்டத்தின்கீழ், சொத்தாட்சி அதிகாரிக்களிக்கப்பட்டிருந்தன. இத்தகைய அதிகாரங்கள் பலவும் கட்டுப்படுத்தப்பட்டு, புதிய திருத்தச் சட்டத்தின்படி, வழக்கு மன்றத்தின் கட்டளைக்குட்பட்டு அமலாக்கக்கூடிய அதிகாரங்களாகக் கீழ்வருவன உள்ளன:

(1) கடனாளர்களின் பட்டியல் (Schedule) தயாரிக்கவும், அவர்களின் எண்பித்தலை ஏற்க அல்லது மறுக்கச் செய்யவும்;

(2) அவசர வழக்குகளில் இடைக்கால உத்தரவுகள் பிறப்பிக்கவும்;

(3) எதிர்ப்பில்லாத அல்லது மறுதரப்பினர் முன்னிலையாகாத கோரிக்கைகள் கேட்டு முடிவு செய்யவுமான அதிகாரங்கள். மேலும் 68ஆவது பிரிவில் கூறப்பட்டுள்ள மேன் முறையீட்டிற்கு (Appeal) உட்பட்டு, அந்தப் பிரிவின்கீழ் அளிக்கப்பட்ட அதிகாரத்தின்படி சொத்தாட்சி அதிகாரி செய்கின்ற செயல் எதுவாயினும், அது நீதிமன்றத்தின் செயல் அல்லது உத்தரவாகக் கருதப்பட இந்தப் பிரிவு வழி வகுத்துள்ளது.

**நொடிப்புநிலை வழக்கு மன்றங்களின் அதிகாரங்களும் அதிகார வரம்பும்**

**மாநகரங்கள் சட்டம், பிரிவு 7-ன் கருத்து:** நொடிப்பு நிலை நேர்வில், யார் முந்துரிமை பெற்றவர் என்ற வினா எழக்கூடும். அதுபோன்றே பல சிக்கல்கள், பொருண்மையைச் (fact) சார்ந்தோ, சட்டத்தைச் சார்ந்தோ எழக்கூடும். அப்படி எழாது போயினும், நியாயம் வழங்குதல் பரிபூரணமாக இருக்க வேண்டும் என்பதற்காகவோ சொத்தை பகிர்ந்தளித்தல் பரிபூரணமாக இருத்தல் வேண்டும் என்பதற்காகவோ சில பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பது இன்றியமையாதது என்று நீதிமன்றத்திற்குத் தோன்றலாம். அம் மாதிரியான பிரச்சினைகளைத் தீர்க்க நொடிப்பு நிலை நீதிமன்றத்திற்கு முழு அதிகாரம் உண்டு.

மாநிலச் சட்டத்தில் இதேபோன்ற வகையம் பிரிவு 4-ல் அடங்கி இருக்கிறது. பிரிவு 4 (1)-ன் கீழ் உரிமை மூலப் பிரச்சினைகளையும் தீர்க்க நொடிப்புநிலை நீதிமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கப்பட்டு இருக்கிறது. நொடிப்புநிலையர், அவர் சொத்து, அவருக்கும், அவருக்கு எதிராகக் கட்சி சொல்லும் தரப்பினர் அனைவரையும், கட்டுப்படுத்தித் தீர்ப்பளிக்க நீதிமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. எப்பொழுது அந்த அதிகாரங்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பது நீதிமன்றத்தின் உளத்தேர்வைப் பொறுத்தது. ஆகவே, இந்தக் காரியங்களில் நொடிப்புநிலை நீதிமன்றங்களுக்கு மட்டுமே அதிகார வரம்பு உள்ளது என்பதில்லை.

இத்தகைய வகையம் முதன்முதலாக 1920ஆம் ஆண்டு சட்டத்தில் செய்யப்பட்டது. அதற்கு முன்னர் பல்வேறு உயர்நிதி மன்றங்களிடையே இது குறித்து முரண்பாடு இருந்தது. அலகாபாத் உயர்நீதி மன்றம், உரிமைமூலப் பிரச்சினைகள்மீது நீதித் தீர்ப்பளிக்க (Adjudicate) நொடிப்புநிலை வழக்கு மன்றங்கள் அதிகார வரம்புடையன என்று தீர்ப்புக் கூறியுள்ளது. கல்கத்தா

உயர்நீதி மன்றம் மாறுபட்ட கருத்தினைக் கொண்டிருந்தது. இப்போதைய சட்டம் அலகாபாத் தீர்ப்பை ஒட்டிக்கொண்டிருக்கின்றது. மாநிலச் சட்டத்தின் பிரிவில் மேலும் இரண்டு பிரச்சினைகளுக்கு வகை காணப்படுகிறது. அவையாவன :

(1) சட்டத்தின்கீழ், நொடிப்புநிலை வழக்கு மன்றங்கள் அளித்த தீர்ப்புகள் இறுதியாகக் கட்டுப்படுத்தக்கூடியவை (Fina'). அவை, ஒரு பக்கத்தில் கடனாளியையும் அவருடைய நிலச் சொத்தினையும் (Estate) கட்டுப்படுத்தவும், மறுபக்கத்தில் அவற்றின்மூலம் கோரும் உரிமையாளர்கள் (Claimants), அவர்களின் மூலம் உரிமை அடையும் நபர்களைக் கட்டுப்படுத்தவும் கூடியவை.

(2) நொடிப்புநிலை மன்றத்தால், கடனாளியின் சொத்தின் உரிமை மூலம் பற்றிய பிரச்சினை உடனே தீர்க்கவேண்டியதாகக் கருதப்படாமல், ஆனால், கடனாளி சொத்தை விற்கும் உரிமை உடையவர் என்று எண்ணப் போதுமான காரணமிருந்தால், எந்த ஒருவிதமான விசாரணையுமின்றி நீதிமன்றம் அத்தகைய உரிமைச் சொத்தினை ஏதேனும் தகுந்த விலைக்கு விற்றுவிடத் தகுதியுடையதாகும். அப்பொழுது, நொடிப்புநிலையருக்கெதிராகக் கோருகிறவர்களின் உரிமை மூலத்தை, இந்தத் தீர்ப்புக் கட்டுப்படுத்தாது. ஆனால், அப் பிரச்சினைக்குத் தீர்வு காணவேண்டுமென்று நீதி மன்றம் எண்ணங்கொண்டு தீர்ப்பளித்தால், பின்னர் அந்தப் பிரச்சினையினை உரிமையியல் நீதிமன்றம் விசாரிக்க இயலாது.

மேற்கண்ட வாய்ப்புகள் உள்ளதன் காரணமாக, நொடிப்புநிலை வழக்கு மன்றங்கள், உரிமை மூலம் அடங்கிய ஏனைய பிரச்சினைகள் எதுவாயினும், கடனாளி, கடனாளர்களிடையே ஏற்பட்டவையாயினும், மூன்றும் நபருடன் ஏற்பட்டவையாயினும் தீர்ப்பளிக்க முழு அதிகார வரம்புடையனவாக உள்ளன.

'Haji Abdul Latiff *v* Official Assignee, 40. Mad. 1173', என்கின்ற சென்னை வழக்கு ஒன்றில், நொடிப்பு ஏற்படும் தருணத்தில், மோசடியாகவும் சூழ்ச்சியுடனும் கடனாளியால் விற்கப்பட்டு, மூன்றும் நபர் வைத்திருந்த பொருள்களைச் சொத்தாட்சி அதிகாரி பறிமுதல் செய்தார். சாட்டுரைக்கப்பட்ட வாங்கியவர் (Alleged purchaser) சொத்தாட்சி அதிகாரியின் தீர்ப்பினைச் செல்லாதாக்கவும், பொருள்கள்மீதான தம் உரிமை மூலத்தை நிலைக்கச் செய்யவும், உரிமை இயல் வழக்குத் தொடர்ந்தார். தீர்ப்பில், உரிமை இயல் வழக்கு நிற்கக்கூடியதன்று என்றும், நொடிப்புநிலை மன்றம் உரிமை மூலம்பற்றித் தீர்மானிக்கும் தகுதி பெற்றதென்றும், அத்தகைய நொடிப்புநிலை

வழக்கு மன்றத்தின் தீர்ப்பினைத் தள்ளிவைக்கக் கோருகின்ற தனி யான உரிமை இயல் வழக்கு ஏற்கத் தகுந்ததன்று என்றும் கூறப் பட்டுள்ளது. எனவே, சொத்து மாற்றச் சட்டம் 53ஆவது பிரிவின்கீழ் கடனுளி ஒருவரால் செய்யப்பட்ட, குறிப்பிட்ட சொத்து மாற்றம்பற்றிய தீர்ப்புக் கூறுகின்ற தகுதி படைத்ததாக நொடிப்புநிலே வழக்குமன்றம் உள்ளது என்று நிர்ணயிக்கப் பட்டுள்ளது. பொதுவாக, நொடிப்புநிலே வழக்கு மன்றங்கள், நொடிப்புநிலே நடவடிக்கைகளின் அதிகார வரம்பினுல் மூன்ரும் மனிதர்கள் பாதிக்கப்படுவதாயின் தாமாக அத்தகைய அதிகார வரம்பினே மேற்கொள்ளுகின்றன.

நொடிப்புநிலே நீதிமன்றம் இத்தகைய பிரச்சினேகளே எப்பொழுது தீர்விற்கு எடுத்துக்கொள்ளும், எப்பொழுது உரிமை இயல் நீதி மன்றத் தீர்ப்பினுக்கு விட்டுவிடும் என்பதற்கு ஆங்கிலேய 'Bankruptcy' சட்டத்தைப் பின்பற்றிய நீதிமன்றத் தீர்ப்புகள் வழிகாட்டுகின்றன. இப் பிரச்சினேகள் நொடிப்புநிலேயுடன் சம்பந் தப்பட்டதாகவும், அப்படி இல்லாமலும் இருக்கலாம். முன் கூறியபடி இருந்தால் சொத்தாட்சி அதிகாரி நொடிப்புநிலேய ருக்குப் பதிலாளாக மட்டுமே அல்லாமல் அவரைவிடச் சிறந்ததும் மேலானதுமான உரிமை மூலம் கொண்டவராகின்ருர். கடனுளர் களுக்குப் பகிர்ந்து அளிக்கக் கூடிய சொத்து எது என்பதை நிச்ச யிப்பது மிக அவசியம் ஆகிறது. அந் நிலேயில் நீதிமன்றம் சாதா ரணமாக இப் பிரச்சினேகளுக்குத் தீர்வு காண முயலும். சொத் தாட்சி அதிகாரிக்கு எதிராகக் கோருரிமை கொண்டவர், மூன்ரும் மனிதராக இருந்தாலும்,அத் தீர்ப்பு அவர் உட்பட அனேவரையும் கட்டுப்படுத்தும், ஆனுல், அப்பொழுதும் கட்டாயமாகத் தீர்வு காணவேண்டியது என்று இல்லே. அது நீதிமன்றத்தின் உளத் தீர்வைப் பொறுத்தது. நொடிப்பு நிலேயருக்கும், மூன்ரும் மனித ருக்கும் இடையில் எழுகின்ற சிக்கல், அவர்களே மட்டும் பாதிக்கக் கூடியதாய் இருந்தால், நொடிப்புநிலே நீதிமன்றம் அந்தப் பிரச் சினேக்குத் தீர்வு காணவேண்டியதில்லே. ஆனுல், அம் மூன்ரும் மனிதர் விருப்பப்பட்டால், அவர் நீதிமன்ற அதிகாரத்திற்குத் தம்மை உட்படுத்திக் கொள்ளலாம். அப்பொழுது அப் பிரச்சினே யைத் தீர்வு காணல் ஆகாது என்று சொத்தாட்சி அதிகாரி கூற இயலாது. உதாரணமாக, சில தீர்ப்புகளே ஆராயலாம்.

பின்வரும் தீர்ப்பு மாநகர்ச் சட்டத்தின்கீழ் ஏற்பட்டது :

*(1)* Gnanedra Bala Devi *v*. fficial Assignee, 30 Ca'. W.N. 346 நொடிப்புநிலேயரின் மனேவி உரிமை கொண்டாடிய குறிப்பிட்ட சொத்தினே, மனேவி மீது பெயரிரவலாக (Benam') ஏற்பட்ட

சொத்தென்பதால், நொடிப்புநிலையரின் சொத்தாகத் தீர்ப் பளிக்கச் சொத்தாட்சி அதிகாரி, நொடிப்புநிலை நீதிமன்றத்தில் கோரியிருந்தார். கல்கத்தா உயர்நீதிமன்றம், மேற்சொன்ன காரணத்திற்காகத் தொடக்கத்தில், நொடிப்புநிலை வழக்கு மன்றத்தில் எடுக்கப்பட்ட நடவடிக்கை முறையானதன்று என்றும், சொத்தாட்சி அதிகாரியை, அதற்கான உரிமையியல் வழக்கினை முதலேற்பு வழக்குமன்றப் பகுதியில் (Original Side of the Court) தொடரவேண்டி உத்திரவிடுகின்ற, பிரிவு எண் 7-ன் கீழுள்ள, விருப்பத்தேர்வினை (Discretion) அமுலாக்கியிருக்க வேண்டுமெனவும் தீர்ப்பளிக்கப்பட்டது.

கோருரிமை, ஒன்று நொடிப்புநிலையின்கீழ் உண்டாகி, நொடிப்புநிலைச் சட்டத்தின் காரணமாகச் சொத்தாட்சி அதிகாரி நொடிப்புநிலையரினும் மேலான உரிமைமூலம் பெற்று பாத்தியதைகள் கோரினல் 56ஆவது விதியின்கீழ் ஓரவஞ்சகச் சொத்துரிமை மாற்றம் அல்லது, 55ஆவது விதியின்கீழ் நொடிப்புநிலை எய்திய இரண்டாண்டிற்குள்ளான சொத்துரிமை மாற்றம், அல்லது 9ஆவது விதியின்கீழ் நொடிப்புநிலைச் செயலாகக் கருதப் படுகின்ற, சொத்துரிமை மாற்றம், அல்லது 52ஆவது பிரிவின் கீழ் நொடிப்புநிலை துவக்கத்திலிருந்து நீதித்தீர்ப்பான நாளுக்குள்ளாக நடைபெறும் சொத்துரிமை மாற்றம், அல்லது நொடிப்புநிலையரின் தோற்றச் சொத்துரிமை (reputed ownership) ஆகிய அனைத்தும் இயற்றிய சட்டத்தின் (statute) கீழ் உண்டாக்கப்பட்டதாக இருப்பதனுல், மேற் கூறியவற்றுள் மூன்ரும் நபர்கள் சம்பந்தப்பட்டிருப்பினும் அதிகார வரம்பினை மேற்கொண்டு வழக்குமன்றம் தீர்ப்பளிக்கும். இத்தகைய நடைமுறை விதி பம்பாய் நீதிமன்றத்தினுல் கடைப்பிடிக்கப் படுகிறது. எனினும் சென்னை உயர்நீதிமன்றம், இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டைப் பின்பற்ற மறுத்து, நொடிப்புநிலைக் கப்பாற்பட்டு எழுந்த, கோருரிமை, நொடிப்புநிலையருக்கு மேலான உரிமைமூலம் சொத்தாட்சி அதிகாரி பெற்றிராமல், சம உரிமைமூலம் பெற்றிருப்பினும், அதிகார வரம்பினை ஏற்றுக் கொண்டது.

*(2)* Abdul Kadar *v*. Official Assignee 40 Mad. 810 நொடிப்புநிலையருடைய மனைவியின் பெயரில் இருந்த அசையா சொத்து ஒன்று, உண்மையில் அது நொடிப்புநிலையருடையதா எனத் தீர்மானிக்க, சொத்தாட்சி அதிகாரி கோரியபொழுது, சென்னை உயர்நீதிமன்றம் அதிகார வரம்பினை ஏற்றுக் கொண்டது. அதேபோன்று பின்னரும் முழு ஆய (Full Bench) வழக்கிலும் (Re Kancherala Krishnarao 51, Mad, 540) சென்னையிலுள்ள

நொடிப்புநிலையருடன் கல்கத்தா நபர் மேற்கொண்ட ஒப்பந்தம் ஒன்றினை ஒப்பந்த மீறுகையில், அதிகார வரம்பு மேற்கொள்ளப் பட்டு, அதனுல், ஏற்பட்ட இழப்பீடு கோருரிமை குறித்து ஆராய்ந்து சென்னையிலுள்ள நொடிப்புநிலைமன்றம் ஒன்றில், நொடிப்புநிலையரின் சார்பில் முடிவெடுக்கப்பட்டது.

[Jnanendra Bala Devi v. Official Assignee of Calcutta, (1925) 30. C.W.N. 346. 93 IC. 834 26 AC 597] Rankin நீதிபதி பின்வருமாறு கருத்து தெரிவித்துள்ளார். பழக்கத்தினுல் ஏற்படுத்தப்பட்ட விதியினைக் கீழ்க்காணும் முறையில் ஆராய்வது அவசியமாகும். அத்தகைய வழக்கினை ஏற்று நடத்தும் அதிகாரம் நொடிப்புநிலை நீதிமன்றத்திற்கு இல்லை. எனவே, நொடிப்பு நிலையரைவிட உயர்ந்த உரிமைமூலம் கொண்ட சொத்தாட்சி அதிகாரி, இந்த அதிகார வரம்பினைத்தான் நாடவேண்டும் என்கிற விதியினைச் சட்டத்தின் ஒரு விதியாகக் கருதுவதற்கில்லை. மேலும் இந்தக் கருத்து சட்டத்தின் 55, 56 விதிகளுக்கு மட்டுமே பொருந்திவரும் என்கிற எண்ணமும் தேவையில்லை. ஆனுல், தங்கள் கடனுளர்கள், கடனுளிகள் அல்லது பொறுப் புரிமை பயனுளிகள் நொடிப்புநிலையாவதனின்றும் தடுக்க இயலாத கல்கத்தாவினின்றும் வெகுதொலைவில் வாழுகின்ற மூன்றும் நபர்களின் நன்மையைக் கருதினுல் இவ் விதி தேவையாகிறது. கடுமையானதாக இல்லாமல் இருப்பின் இந்த விதி நன்ருகப் பயன் படும். வழக்கமான உரிமையியல் வழக்கினைத் தவிர்த்து வேறு வழியில் அத்தகைய மூன்றும் நபர்களின் உரிமையினை அறுதியிட முடியாது. மேலும், நொடிப்புநிலையர் ஒருவரோ, அவரின் சொத்திருப்போ வழக்கில் ஈடுபட்டிருக்கின்ற காரணத் தினுலேயே, வழக்கு மன்றமானது, தன்னுடைய நொடிப்புநிலை அதிகார வரம்பின்கீழ் இந்தியா முழுவதும் உள்ள கடன்களை வசூலிக்கவோ இடைக் கோரிக்கை ஒன்றின்மீது அனைத்து வழக்கு களின்மீது முடிவு கூறவோ முடியாது. எனவே, இந்த வழக்கு மன்றங்களின் நலனைக் கருதுகின்ற போதும் இந்த விதி தேவையான தொன்ருகின்றது. இந்தத் தீர்ப்பு, மாநகரங்கள் சட்டம், பிரிவு 7-ஐ திருத்துவதற்கு முன்பு அளிக்கப் பட்டது என்பதை மனதில் கொள்ள வேண்டும். விதி 7-க்குத் திருத்தம் ஏற்பட்ட பின்னர், நொடிப்புநிலை மன்றத்தில் தன்னுடைய உரிமை மூலத்திற்கு முடிவு காண மூன்றும் நபர் இசைவு தெரிவித்தாலொழிய சொத்தாட்சி அதிகாரி, நொடிப்பு நிலை நீதிமன்றத்தின் அதிகாரப் பூர்வமாகவே அன்னர்மீது தனி உரிமையியல் வழக்கு தொடர வேண்டிய நிலையிலுள்ளார். அதே போன்று சென்னை உயர்நீதிமன்றத்தின் முழுஆய (Full Bench)

வழக்கொன்றில் [Official Assignee v. Narasimha Mudr. (1929) 52 Mad. 717] ''நொடிப்புநிலையரை விட உயர்ந்த உரிமை மூலம் கொண்ட சொத்தாட்சி அதிகாரி, விதி 7-ன்கீழ் இடைக்கோரிக்கை (Motion) ஒன்றின் மூலம் நொடிப்புநிலைக்கு மூன்றும் நபர்களுக்கெதிராக உள்ள பணபாத்தியதை கொண்டாடத் தகுதிபெறுகின்ளுர். ஆயினும் விதி 7-க்கு அண்மையில் ஏற்பட்ட திருத்தம் காரணமாகச் சொத்தாட்சிச் சட்டத்தின் 36ஆவது விதியின்கீழ் ஒருவரை சாட்சியம் சொல்ல அழைத்திருப்பினும் அத்தகைய சாட்சி தன்னுடைய கடப்பாட்டினைப் பொறுத்து, மறுப்பு தெரிவித்திடின், சொத்தாட்சி அதிகாரிக்கு உரிமையியல் வழக்குக்குச் செல்வத்தைத் தவிர வேறுவழி இல்லை,'' என்பது தெளிவாயிற்று. இந்தத் தீர்ப்பாலும், Ramachandra Iyer v. Official Assignee of Madras 54 Mad. 739, Chinnappa Mudaliar v. Official Asssignee of Madras 55 Mad. 380, Krishnamoorthy Iyer v. Sundaramoorth Iyer 55 MAD. 551 முதலான வழக்குகளினுலும், நொடிப்புநிலை நீதிமன்றத்தின் அதிகாரத்தை மிகவும் பரந்ததாகச் சென்னை உயர்நீதிமன்றம் கொண்டிருக்கின்றது. இக்கருத்தினை மற்ற நீதிமன்றங்கள் முழுமையாக ஒப்புக்கொள்ளவில்லை.

Mohamad Siddiq v. Official Assignee of Cal. 47, Bom. LR 522 பிரிவு கவுன்சில் வழக்கில், நொடிப்புநிலை நீதிமன்றம் ஒன்றில், குறிப்பிட்ட சொத்துரிமை மாற்றம், ஓரவஞ்சகக் கடனடைப்பாக இருந்தமையால், நொடிப்புநிலை செயலாகும் என்று தீர்மானித்து நீதித் தீர்ப்புக்கான அடிப்படையாகக் கருதிய முடிவு, உரிமைமாற்றம் பெறுபவருக்கெதிராக முடிந்த முடிவாகத் தீர்மானித்தது. சொத்துமாற்றம் இல்லாநிலை என்று தீர்மானித்த அவ்வழக்கின் நடவடிக்கைகளில் உரிமைமாற்றம் பெறுபவர் ஒரு தரப்பினரல்லர். எனினும் அத்தகைய நடவடிக்கைகள் பற்றிய எந்தவிதமான அறிவிப்பும் அன்னுருக்கில்லை என்று தீர்ப்பு வழங்கப்பட்டது. இத்தகைய நிலை முரண்பாடானது என்பதில் ஐயமில்லை. ஆயினும் பிரிவு 7-ல் காணப்படும் கட்டு வாசகம், தனிக் குடிமகனின் தொல்லைகளுக்கப்பாற்பட்டது. ஆயினும் அத்தகையோருக்குத் தீர்வு இல்லாமலில்லை. பிரிவு 8-ல் அன்னுர், பாதிக்கப்பட்ட நபர் (aggrieved person) எனக் கருதப்பட்டு, நீதித் தீர்ப்புக்கெதிராக மேன் முறையீடு செய்துகொள்வதற்கு உரிமை பெறுகிருர்.

**7ஆம் பிரிவில் காலத் திருத்தம்**

1927ஆம் ஆண்டு 29ஆவது மாநகர்கள் நொடிப்புநிலைச் சட்டத்தில் கீழ்க்காணும் திருத்தம் கொண்டுவரப்பட்டது.

'36ஆவது பிரிவில் உள்ள எதனையும் தீர்மானிக்க, சம்பந்தப் பட்ட நபர்கள் அனைவரும் சம்மதித்தாலன்றி, இவ்விதம் கொடுக் கப்பட்ட அதிகாரம், அந்தப் பிரிவில் கொடுக்கப்பட்ட அளவில், முறையிலேயே செலுத்தப்படும்'.

தொகுத்துரைக்கபடுமானால், நொடிப்புநிலை நீதிமன்றங் களுக்கு, முற்றிலும் புதியவர்களைச் சம்பந்தப்படுத்துவதாலும் நொடிப்புநிலைச் சம்பந்தப்பட்ட வழக்குகளுக்குத் தீர்வு காணும் அதிகாரவரம்பினை உடையது என்பது தெளிவு. கோருபாத்தியதை (Claim) நொடிப்புநிலையினால் ஏற்பட்டதாக இல்லாமல் இருப்பின் சான்றாக நொடிப்புநிலையரின், மூன்றாம் நபருக்கு எதிரான பணம் கோருபாத்தியதை (Money Claim), அன்னார் 36ஆவது பிரிவின் கீழ் விசாரிக்கப்பட்டிருப்பின், சொத்தாட்சி அதிகாரி, நொடிப்பு நிலை நீதிமன்றத்தினை அத்தகைய கோருபாத்தியதையைப் புலன் ஆய்வுசெய்யக் கோரி, 7ஆவது பிரிவின் துணையைப் பயன்படுத்த முடியாது. ஆனால், உரிமையியல் வழக்குத் தொடரவேண்டும். அன்னார், 36ஆவது பிரிவின்கீழ் விசாரிக்கப்படாமலிருப்பின் 7ஆவது பிரிவின்கீழ் புலன் ஆய்வுசெய்ய, நொடிப்புநிலை நீதி மன்றம் அதிகார வரம்பினையுடையது. எனினும் அத்தகைய நீதி மன்றம், அவற்றை ஏற்றுக்கொள்வது அதன் விருப்பத்தின் பாற் பட்டது. நிராகரித்து, தனி உரிமையியல் வழக்குத் தொடர சம்பந்தப்பட்ட நபர்களுக்குக் குறிப்பு வழங்கலாம்.

பிரிவு 7 இயல்பு அளிக்கும் பிரிவு (Enabling Section) எனக் கருதப்படுகிறது. இப் பிரிவினால், சாதாரண உரிமையியல் நீதி மன்றங்களின் அதிகார வரம்பினை நீக்கம் செய்யவில்லை என்பது உறுதி. சொத்தாட்சி அதிகாரியின் செயலினால் பாதிக்கப்பட்ட எந்த நபரும், பிரிவு 7 தலைநகர்கள் சட்டத்திற்கப்பாற்பட்டு, சாதாரண உரிமையியல் வழக்கு மன்றங்களில், தன் உரிமையை நிலைநாட்ட, தனி உரிமையியல் வழக்கு தாக்கல் செய்யத் தகுதி உடையவராவார்.

மேற்கண்டவை அனைத்தும் தேவையான மாறுதல்களுடன் (mutatis mutandis) மாநில நொடிப்புநிலைச் சட்டம் (Provincial Insolvency Act) பிரிவு 4-ல் காணப்படும் அதிகார வரம்பினுக்குப் பொருந்துகின்றது.

**நொடிப்புநிலை வழக்கு மன்றங்களின் முறையும், பொது அதிகாரங் களும்.**

சாதாரண முதலேற்பு உரிமையியல் வழக்குமன்றங் களுக்குள்ள அதே அதிகாரங்களும் அதே முறைகளுமே, அதிகார

வரம்பினைச் செலுத்தும் நீதிமன்ற நடவடிக்கைகளில், நொடிப்பு நிலைச் சட்டத்தின்கீழ் உருவாக்கப்பட்ட வழக்குமன்றங்களும் உடையன என்று மாநில நொடிப்புச் சட்டம் பிரிவு 5 கூறுகின்றது. உயர்நீதிமன்றத்தினைப் பொறுத்து இத்தகைய அதிகாரம் கொண்டது என்பது மாநகர் நொடிப்புநிலைச் சட்டம் 90ஆவது பிரிவில் கண்டுள்ளது. மேலும், அப் பிரிவில், சட்டத்தின் கீழ் சார்த்தப்பட்ட அதிகார வரம்பு எதனையும் கட்டுப்படுத்தும் வகையில் எதுவும் இல்லை என்றும் அறுதியிட்டுள்ளது. நொடிப்பு நிலைச் சட்டத்தில் தனித்து வகை செய்யப்பட்டவைகளே அன்றி, மற்றவை அனைத்தும் உரிமையியல் நடைமுறைச் சட்டத்தில் கண்டுள்ள வழிமுறைகளே நொடிப்புநிலை வழக்கு மன்றங்களிலும் கடைப்பிடிக்கப்படும். இக் கொள்கைகளின் அடிப்படையிலேயே, நீதிமுறைக் கட்டளையைத் (Process of Court) தவறாகப் பயன்படுத்த, நீதித்தீர்ப்பு வேண்டி மனு செய்துகொண்ட கோரிக்கைகளைத் தள்ளிவிடும் உள்ளிட்ட அதிகாரம் (inherent power) கொண்டவைகளாக நொடிப்புநிலை நீதிமன்றங்கள் இலங்குகின்றன. அதேபோன்று உறுத்துக் கட்டளை (Injunction) பிறப்பிக்கும் அதிகாரத்தினையும் இம் மன்றங்கள் கொண்டுள்ளன.

இயல் 3

# நொடிப்புநிலை ஆக்குவினைகள்

## (Acts of Insolvency)

நடைமுறையிலுள்ள சட்டங்களின்படி ஒருவகை நொடிப்பு நிலையர் என்ற தீர்ப்பிற்கு உட்படுத்தும் யாதேனும் ஒரு செயல் நொடிப்புநிலை ஆக்குவினை (Act of insolvency) எனப்படும். நொடிப்புநிலை கோரிக்கை ஏற்படுவதற்குக் காரணமாயிருக்கும் நொடிப்புநிலை ஆக்குவினைகள்பற்றி மாநகர் நொ. நி. சட்டம் பிரிவு 9-ம் மாநில நொ. நி. சட்டம் பிரிவு 6-ம் கூறுகின்றன. இரண்டு சட்டங்களிலும், ஒருசில மாறுபாடுகள் தவிர ஏனையவை அனைத்தும் ஒன்றுபோலுள்ளன. இரண்டிலும் ஒரு கடனாளி கீழ்க்காணும் செயல்களில் ஏதேனும் ஒன்றினைச் செய்தால் நொடிப்புநிலை ஆக்குவினை செய்தவராகக் கருதப்படுவார்.

(அ) இந்தியாவில் அல்லது வேறு எங்கேனும், கடனாளி தன் சொத்து முழுமையையும் அல்லது கணிசமான அனைத்தையும், கடனாளர்களின் நன்மைக்காக மூன்றும் நபரிடம் பொதுவாக உரிமைமாற்றம் செய்தல்.

(ஆ) இந்தியாவில் அல்லது வேறு எங்கேனும், கடனாளர்களை ஏமாற்றும் அல்லது தாமதிக்கச் செய்யும் எண்ணத்துடன் தன் சொத்தினை அல்லது சொத்தின் ஒரு பகுதியினை உரிமைமாற்றம் செய்தல்.

இ) இந்தியாவில் அல்லது வேறு எங்கேனும், நொடிப்பு நிலைச் சட்டங்களில் அல்லது நடைமுறையில் உள்ள எந்த ஒரு சட்டப்படி அன்னர் நொடிப்புநிலையர் என்று தீர்மானிக்கப் பட்டால் ஓரவஞ்சக முந்தளிப்பு (pre'erence) இல்லா நிலையாகக் கூடிய, எந்த ஒரு சொத்துரிமை மாற்றம் அல்லது ஏதேனும் ஒரு பகுதி சொத்துரிமை மாற்றம் செய்தல்.

(ஈ) கடனுளர்களை ஏமாற்றும் அல்லது தாமதிக்கச் செய்யும் எண்ணத்துடன், கடனுளி (1) இந்தச் சட்டம் ஆள்வளாயினை மாநிலங்களை விட்டுப் போய்விடுதல் அல்லது அம் மாநிலங்களில் இல்லாதிருத்தல், (2) குடியிருக்கின்ற வீட்டினின்று அல்லது வழக்கமான தொழில் நடைபெறுமிடத்தினின்றும் போய் விடுதல் அல்லது மற்றவகையில் அவ் விடங்களில் இல்லாதிருத்தல். (3) கடனுளர்களைத் தன்னுடன் தொடர்பு கொள்ளமுடியாதவாறுத் தன்னைத் தனிமை ஒதுக்கிக்கொள்ளல் (secludes).

(உ) பணம் செலுத்தப்படுவதற்கான, நீதிமன்றத்தின் தீர்ப்பாணை நிறைவேற்றம் செய்வதில் கடனுளியின் சொத்து விற்கப்பட்டுவிடல் அவ்வாறான தீர்ப்பாணையின் நிறைவேற்றம் செய்வதில் அன்னாரின் சொத்து 21 நாட்களுக்குக் குறையாமல் பற்றுகை (attachment) செய்யப்பட்டு இருத்தல் இவ் ஆக்குவினை மாநகர சட்டத்திற்கு மட்டும் பொருந்தும். (மாநில நொ. நி. ச. கீழ், கடனுளியின் சொத்துப் ''பற்றுகை'' எத்துணைக்கால நீட்டிப்பிற்குச் செய்யப்பட்டிருப்பினும், அச்செயல் நொடிப்புநிலை ஆக்குவதற்கு அடிப்படையாக அமையாது.)

(ஊ) தன்னை நொடிப்பு நிலையராக ஆக்கும் நீதித்தீர்ப்பாணை வேண்டி, தானே, மனுப்போடுதல்.

(எ) தன் கடனுளர்களில் எவருக்கேனும் தன் கடன்கள் செலுத்துதலைத் தான் நிறுத்திவைப்பதாகவோ, நிறுத்திவைக்கப் போவதாகவோ, அறிக்கை (Notice) அளித்தல்.

* (ஏ) பணம் செலுத்துதலுக்கான ஒரு நீதிமன்றத் தீர்ப்பாணையின் நிறைவேற்றம் காரணமாகத் தான் சிறைப்படல்.

(ஐ) நொடிப்புநிலை அறிக்கை (Insolvency Not ce) ஒன்று பிறப்பிக்கப்பட்டு தீரடைவு காணுமல் இருத்தல் (Remains unsatisfied).

**விளக்கம்**

அத்தகைய செயல் ஒன்றினைப் புரிய அதிகாரம் பெறுதிருப்பினும், முகவர் (Agent) ஒருவரின் செயல், இப் பிரிவு சம்பந்தப்பட்டமட்டில் முதல்வரின் செயலாகக் கருதப்படும் (மாநகரங்கள் சட்டம்), இந்தப் பிரிவு சம்பந்தப்பட்டமட்டில், முகவரின் செயல் முதல்வரின் செயலாகக் கருதப்படும் (மாநிலச் சட்டம்).

மேற்குறிப்பிட்ட உட்பிரிவுகள் நொடிப்புநிலை மனு போடக் காரணமாக உள்ள 'கிடைத்துள்ள நொடிப்புநிலைத் தருவினைகள்' (Available Acts of Insolvency) எவை என்று குறிப்பிட்டுள்ளன.

* பம்பாய் மாநிலத்திற்கு மட்டும் இந்த விதி பொருந்தும்.

கோரிக்கை மனு (Petition)

ஒருவரை நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணை (adjudication) வழங்கவேண்டுமானால், மேற்சொன்ன உட்பிரிவுகளில் உள்ள ஏதேனும் ஒன்று அல்லது பல செயல்களைக் கடனாளி செய்ததாக மெய்ப்பிக்கவேண்டியது அவசியமாகும். அதன் பொருட்டு, நொடிப்புநிலைக்கு ஆதாரமான காரணங்களை செயல்களை உட்பிரிவினுள் அடங்கும்படியாகப் பொருண்மைகளை (Facts) கோரிக்கை மனுவில் கூறப்படவேண்டும். கோரிக்கை மனு முன்னிலைப்படுத்திய பின்னர், அவற்றில் போதிய ஆதாரம் இல்லை என்று கூறிப் பின்னர் அதற்குத் திருத்தம் கொண்டு வரமுடியாது. அத்தகைய ஒரு கோரிக்கை தள்ளுபடி (Dismiss) செய்யப்படும். தீர்மானிக்க இயலாத குற்றஞ்சாட்டுரை (Vague A legation) ஒன்று கோரிக்கை மனுவில் கண்டிருப்பின், பின்னர், வேறு சான்றுகளைக் கொணர்ந்து நிரூபிக்க முயற்சி செய்ய முடியாது என்பதனை Muthu Chettiar v. Nagindas. 28. Bom. L.R. 680. என்ற வழக்கும் தெளிவுபடுத்துகிறது.

Chettyar v. Chettyar 13. Rang. 686. என்ற வழக்கில் இரங்கூன் உயர்நீதிமன்றம், நொடிப்புநிலை ஆக்குவினை புரிந்தமையை நிரூபிக்கச் சரியான, தெளிவான எண்பிப்பு தேவை என்று கூறியுள்ளது. கோரிக்கை மனுவில் உள்ள கருப்பொருளைப் பாதிக்காத எந்த ஒரு திருத்தமும் அனுமதிக்கப்படலாம் என்று (Murugappa v. Galiara. 12 Rang. 150). என்னும் வழக்கில் முடிவானது. அதே வழக்கில், திருத்தம் கருப்பொருளின் அடித்தளத்தைத் தாக்கி மாற்றம் செய்யுமானால், நீதிமன்றம் அத்தகைய திருத்தத்தை அனுமதிக்க முடியாது என்றும் சொல்லப்பட்டுள்ளது.

Karuppiah Nadar v. Veera Bhadran Chettiar (1950) 2. Mad. L.J. 761 என்ற வழக்கில் சென்னை உயர்நீதிமன்றம், கடனின் தன்மையை மாற்றாத திருத்தம் ஒன்றை, கோரிக்கை மனுவில், செய்துகொள்ள அனுமதித்தது.

இனி, நொடிப்புநிலை ஆக்குவினைகளை ஆராய்வோம். முதல் உட்பிரிவில் கூறப்பட்ட சொத்துரிமை மாற்றம், முழுமையானதாகவும் நிபந்தனையற்றதாகவும் இருத்தல் வேண்டும். நிபந்தனையுடன் கூடிய மாற்றும் அல்லது சொத்து உரிமைமாற்றம் (Transfer) அல்லது உரிமை மாற்றத்திற் (assignment) கான உடன்பாடு போதுமானதாகாது. மேலும் சொத்துரிமை மாற்றம் கடனாளியின் அனைத்துச் சொத்தினையும் அல்லது கணிசமான அனைத்தையும் மாற்றம் செய்தல் வேண்டும். அடுத்து,

அத்தகைய மாற்றம் அனைத்துக் கடனாளர்களின் நன்மையைக் கருத்தில் கொண்டிருக்கவேண்டும். ஒரு பகுதி அல்லது குறிப்பிட்ட கடனாளர்களின் நன்மையைமட்டும் கருதியதாக இருப்பின் நொடிப்புநிலை ஆக்குவினையாக இருந்தாலும் இந்த உட்பிரிவு பொருந்தாது. சொத்துரிமை மாற்றம் இந்தியாவிற்குள்ளோ, வெளியிலோ நடைபெற்றிருக்கலாம். ஆனால் சொத்து மாற்றம் இந்தியச் சட்டத்தின் செயற்பாட்டிற்கு அடங்கியிருத்தல் வேண்டும். சம்பந்தப்பட்ட சொத்து இந்தியாவில் இருத்தல் வேண்டும். கடனாளர்களை ஏமாற்ற அல்லது தாமதிக்கச்செய்யும் எண்ணமாகத்தான் மாற்றம் இருக்கவேண்டும் என்பதில்லை. நொடிப்புநிலை நீதிமன்றங்களின் அதிகாரத்தை உட்பிரிவின் மூலமாக நாடும் முன்னர், கடனாளியின் உடைமையினின்றும் அன்னாரின் சொத்து விடுபட்டு செயற்பாட்டு உரிமைமாற்றம் (operative transfer) பெற்றிருக்க வேண்டும். அத்தகைய உரிமைமாற்றம் மூன்றும் நபருக்குச் செய்திருக்க வேண்டும்.

இத்தகைய சொத்துரிமை மாற்றம் எதனால் நொடிப்புநிலை ஆக்குவினையாகக் கருதப்படுகிறது ? அனைத்து அல்லது கணிசமாக உள்ள அனைத்துச் சொத்துகளை விற்பதன்மூலம், கடனாளி தொழில் நடத்தும் அதிகாரத்தினை இழக்கின்றார். மேலும், இதனால், கடனாளர்களிடையே பிரித்து வழங்கப்படும் முறை நொடிப்பு நிலைச் சட்டத்தினால் பிரிக்கப்பட்டு வழங்கப்படும் முறையினின்றும் மாறுபட்டதாகவும் சட்டப் பாதுகாப்பற்றதாகவும் ஆகிறது. நொடிப்புநிலை என்பது கடனைத் திருப்பித்தர முடியாத நிலைக்கு முடிந்த (Conclusive) சான்றாகக் கொள்ள முடியாவிடினும் மேலோட்டமான (Prima Facie) சான்றாகக் கொள்ளப்படும்.

இரண்டாவது உட்பிரிவு, கடனாளர்களை ஏமாற்ற அல்லது தாமதிக்க, முதன்மையான எண்ணத்துடன் கூடிய உரிமை மாற்றம்பற்றிக் கூறுகின்றது. ஏனையவற்றுடன் கடனாளிகள், நொடிப்புநிலை எய்தும் தருவாயில், கடனாளர்களினின்றும் தங்கள் சொத்துகளைக் காப்பாற்றிக்கொள்ள தங்கள் உறவினர் அதே போன்றவர் பெயரில் செய்கின்ற ஓரவஞ்சக, ஏமாற்றும் மாற்றளிப்பாவணங்கள் இவ் விதியின்பால் அடங்கும். எண்ணத்தின் தன்மையை மெய்ப்பிப்பது அவசியமாகிறது. சொத்து முழுமையும் மாற்றம் செய்யவேண்டிய அவசியமில்லை. பகுதியோ ஏதேனும் ஒரு தனிச் சொத்தை மட்டுமோ அத்தகைய எண்ணத்துடன் மாற்றம் செய்திருப்பின் போதுமானதாகும்.

மூன்றாவது உட்பிரிவில் ஓரவஞ்சக சலுகைகாட்டி, கடனாளர்களில் ஒருவர் அல்லது மேற்பட்டவர்களுடன் மேற்கொண்ட

நடவடிக்கைகள்பற்றிச் சொல்லப்படுகிறது. மாநகர்ச் சட்டம் 56ஆவது பிரிவிலும், மாநிலச்சட்டம் 54ஆவது பிரிவிலும் அத்தகைய உடன்பாடுகள் இல்லா நிலையானவை என்று கூறப் படுகிறது. இந்த நொடிப்புநிலை ஆக்குவினையும் இந்தியாவிற் குள்ளோ வெளியிலோ முதல் உட்பிரிவு கூறப்பட்ட கட்டிற்கு உட்பட்டு செய்யப்பட்டிருக்கலாம். கடனாளிகள் தம் சொத்து முழுமையையும் அல்லது பகுதியினை விற்பதுமட்டும் போதாது. கடனாளர்களைத் தாமதம் செய்யும் அல்லது ஏமாற்றும் நோக்கத் துடன் விற்பதானது இந்த விதிக்குட்படுகிறது. இத்தகைய விதி கடனாளர்களை ஒட்டு மொத்தமாகப் பாதுகாக்க இயற்றப்பட்ட தாகும்.

நான்காவது உட்பிரிவின் முக்கிய பகுதியாக விளங்குவது, 'கடனாளர்களை ஏமாற்றுகின்ற அல்லது தாமதப்படுத்துகின்ற கடனாளியின் எண்ணமாகும். அது உறுதியாகச் சார்த்தப் பட்டு (alleged) தெளிவாக மெய்ப்பிக்கப்பட்டிருக்கவேண்டும். அத்தகைய எண்ணம் கொண்டிருப்பது அந்தந்த வழக்கின் பொருண்மையையும் (Fact) சூழ்நிலைகளையும் பொறுத்திருக்கும். கடனாளி தன் தொழில் நடைபெறும் இடத்தினின்றும் போய் விட்டது அல்லது தன்னை மறைத்துக்கொண்டது கடனாளர்களை ஏமாற்றவே அல்லது தாமதம் செய்யவே என்ற நியாயமான முடிவுக்குவர வழக்கின் அனைத்துப் பொருண்மைகளை (Facts)க் கருத்திற்கொண்டு ஆராய்தல்வேண்டும் என்பதனை Suleiman Hajee Mohammed Bros. v. Hajee Ahmed Hajee Essak, AIR 1937 Rang. 6 என்ற வழக்கில் கூறப்பட்டுள்ளது. இரு பங்குதாரர்கள் கொண்ட பங்கமைப்பு நிறுமம் ஒன்றில், தொழில் நடைபெறும் இடத்தினின்றும் பங்குதாரர் எவரேனும் ஒருவர் கடனாளரை ஏமாற்றும் அல்லது தாமதிக்கச்செய்யும் எண்ணத்துடன் போய் விட்டிருந்தால் நிறுமத்திற்கெதிராக நீதித்தீர்ப்பாணையைப் பெற முடியாது என்பதனை, In re Mahomed Hasham & Co, 24 Bombay L.R. 861 என்ற வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. இரு பங்குதாரர்களும் அத்தகைய எண்ணத்துடன் இடத்தை விட்டுப் புறப்பட்டுச் சென்றிருந்தாலொழிய ஒருவர்மட்டும் சென் றிருப்பின் நிறுமத்திற்கெதிராக நீதித்தீர்ப்பாணையைப் பெற முடியாது. கடனாளர்கள் பணத்திற்காகத் தன்னைத் தொல்லைப் படுத்தாவண்ணம் செய்யத் தன்னை வேண்டுமென்றே தனிமைப் படுத்திக்கொள்ளுகின்ற தன்மையினை 'Keeping House' என்று இங்கிலாந்து சட்டத்தில் கூறப்பட்டுள்ளதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

உட்பிரிவு ஐந்தில், நொடிப்புநிலே கோரிக்கை செய்ய பற்றுகையே போதிய காரணமாகக் கொள்ள இயலாது என்பதனை மாநிலச் சட்டம் வரையறுத்துள்ளது. மாநகர் சட்டம்களில்கூட 21 நாட்களுக்கு மேலும் பற்றுகை தொடர்ந்திருப்பினும், அது தொடர் செயலாக இல்லை. இதனுல் 21 நாள் காலக்கெடு முடிவடைந்த மூன்று மாத காலத்திற்குள்ளாக நீதித்தீர்ப்பாணை கோரிக்கை மனுகொண்டு வராவிடின், மனுநாளன்று பற்றுகை தொடர்ந்திருப்பினும், அந்தப் பற்றுகையின் காரணம் காட்டி நீதித்தீர்ப்பாணை கோரிக்கை மனு மேற்கொள்ள இயலாது என்பதனை Inre Hydar Bhai Hussein Bai, 52. Bombay 126, Wor. Lee Lone & Co. v. Chettiar, 7 Rang 815 Anupama v. Gurudas 57, Cal. 1274 என்ற வழக்குகளில் தீர்மானிக்கப்பட்டன.

பற்றுகையும், விற்பனையும் பணத்திற்கான தீர்ப்பாணை நிறைவேற்றத்தின் பாற்பட்டதாக இருத்தல்வேண்டும். இல்லையெனில் நொடிப்புநிலே ஆக்குவினையாகக் கொள்வதற்கில்லை. நீதிமன்றம் சொத்தை விற்பனைசெய்ய உத்தரவிட்டிருந்தால்மட்டும், இவ்வுட்பிரிவு பொருந்தாது. உத்தரவின்பேரில் விற்பனையாயிருக்க வேண்டும். ஆனுல் விற்பனை நீதிமன்றத்தால் உறுதிப்படுத்த வேண்டியதில்லை. இதனை Cholan Das v. Walab Dos 56 SC 158 விளக்குகிறது.

ஆருவது உட்பிரிவில் இரண்டு சட்டங்களிடையே வேறுபாடு காணப்படுகின்றது. மாநகர் நொடிப்புநிலேச் சட்டத்தின்கீழ் செய்யப்பட்ட மனு, மாநில நொடிப்பு நிலேச் சட்டத்திற்கு நொடிப்புநிலே ஆக்கும் வினையாகக் கருத முடியுமென்று தோன்றவில்லை. மாநகர் நொடிப்புநிலேச் சட்டம் சம்பந்தப்பட்டமட்டில், மாநிலச் சட்டத்தின்கீழ் கடனுளி போட்ட மனு நொடிப்புநிலே ஆக்க வினையாகும். கோரிக்கை மனு தள்ளுபடி செய்யப்படுகிறபோது உண்மையிலேயே எந்தவிதமான வேறுபாடும் இல்லை. கடனுளியே செய்து கொள்ளும் அத்தகைய மனு, மாநகர் நொ. நி. சட்டம் பிரிவு 11, 14-களில் கூறப்பட்ட நிபந்தனைகள் பூர்த்தியாகியிருப்பின் மனு கொடுக்கப்பட்டச் செயலே நீதித் தீர்ப்பாணை வழங்கப் போதுமானதாகும்.

7ஆவது உட்பிரிவில் கூறப்பட்டுள்ள 'பணம் செலுத்துதல் நிறுத்திவைத்தல்' (Suspension of Payment) என்பது வணிகர்களுக்குப் பயன்படும் வியாபாரச் சொல்லாகும். அதன் பொருளாவது 'அன்ருட வாணிபத்தில் உங்களுடைய கடம்பாடுகளை ஏற்க

வும், உங்களே கடன்களேச் செலுத்த வேண்டிய காலத்திலும், செலுத்தும்படி வேண்டியும், செலுத்த இயலாமல் போய்விட்டீர்கள். 'Not meeting your engagements and paying your debts in the ordinary course of business as they become due and as you Cal ed upon to pay'. நிறுத்திவைப்பு அறிவிப்பானது நிபந்தனேயற்றதாகவும் ஐயத்திற்கிடமின்றியும் இருத்தல் வேண்டும். வாய் மூலமாகவோ எழுத்து மூலமாகவோ இருக்கலாம். பயன்படுத்தப்பட்ட சொற்களின்மூலம் கடனுளியின் எண்ணத்தினேக் கடனுளர்கள் புரிந்துகொள்ள இயலும் என்பதே இதற்கான தேவை.

கடனுளர்களுக்கு இப் பிரிவில் கண்ட அறிவிப்பின்றிப் பணம் செலுத்துதல் மட்டும் நிறுத்திவைக்கப்பட்டதானது நொடிப்பு நிலே ஆக்குவினேயாகாது. கடனுளர்களில் ஒருவருக்குமின்றித் தானே வெளிப்படுத்தும் பணம் செலுத்த இயலாமை அறிவிப்பும் போதுமானதுதாகாது. தெளிவற்ற சார்த்துரைகள் கோரிக்கை மனுவில் குறிப்பிட்டுவிட்டுப் பின்னர் நொடிப்புநிலே தருவினேகள் பற்றி சான்றுகள் கொண்டுவந்து நிரூபிக்க முயலுவது போதுமானதாகக் கருதப்படமாட்டாது. நிரந்தர நிறுத்தம் மட்டுமின்றித் தற்காலிக நிறுத்தமேகூட நொடிப்புநிலே ஆக்கு வினேயாகும். கடன்களேப் பொதுவாகச் செலுத்துதல் நிறுத்திவைக்கப்பட்டிருப்பதாக அறிவித்திருக்க வேண்டும். குறிப்பிட்ட கடனேச் செலுத்துதல் நிறுத்திவைக்கப்பட்டதாகச் செய்யும் அறிவிப்பு நொடிப்புநிலே ஆக்கு வினேயாகாது என்பதனே **Muniswami v. Rangachari. (1937) I. M. A. D. L. J. 961** என்ற வழக்கில் கூறப்பட்டுள்ளது.

முகர் ஒருவர் கொடுக்கின்ற அறிவிப்பானது கடனுளர் செய்கின்ற அறிவிப்பாகாது. ஏன் எனில், நடைமுறையில், முகவரை (Agency)யின் அடிப்படையில் முதல்வர் பொருட்டு, எந்த ஒரு நொடிப்புநிலே ஆக்குவினேயும் முகவர் செய்ய போதுமான அதிகாரம் கிடையாது என்பது தெளிவு என்று **Muthu Chettiar v. Nagindas 28 BOM. L.R. 680** என்னும் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. மாநகர் சட்டம் 13ஆவது பிரிவில் (4) (b) உட்பிரிவில், கடனுளி நேரில் வருகைதந்து, வழக்கு மன்றத்திற்குத் திருப்தி அளிக்கின்ற முறையில், தன்னுல், கடன்களேச் செலுத்த இயலும் என்பதனேத் தெரிவித்தால். வழக்கு மன்றம் நீதித் தீர்ப்பினே கோரிய மனுவைத் தள்ளுபடி செய்யலாம் என்று கூறப்பட்டுள்ளது.

நபர் ஒருவர் அவராலேயே செய்யப்பட்ட நொடிப்புநிலை ஆக்குவினை பொருட்டு அல்லது அன்னாரின் முகவர் ஒருவரால் செய்யப்பட்ட நொடிப்புநிலை ஆக்குவினை பொருட்டு (இங்கே வழக்கின் பொருண்மைகளும், சூழ்நிலைகளும் முகவர் அதனைச்செய்ய முதல்வரால் வெளிப்படையாகவோ அல்லது உட்கிடையாகவோ இசைவு பெற்றவராகக் கருதப்படவேண்டும்) செய்தாலொழிய அன்னார்மீது நொடிப்புநிலை நீதித் தீர்ப்பாணை வழங்கமுடியாது என்பது நொடிப்புநிலைச் சட்டவியலின் முக்கிய தத்துவமாகும். எனவே, பங்கமைப்பு நிறுமத்தில், பங்காளர் ஒருவருக்கு உட்கிடையாகவோ வெளிப்படையாகவோ அறிவிப்புச்செய்யும் அதிகாரம் உள்ளதற்குப் போதுமான சான்று இல்லாதபொழுது பங்காளர்களில் ஒருவர் கோரிக்கை கடனாளர்களுக்கு அனுப்பி வைக்கின்ற பணம் செலுத்த இயலாமை கடிதமானது, நிறுமம் கடன் பணம் செலுத்துதலை நிறுத்திவைத்த அறிவிப்பாகக் கொள்வதற்கில்லை என்றும் கிடைக்கக்கூடிய நொடிப்புநிலை ஆக்குவினை செயலாகாது என்றும், அதன்மீது நிறுமத்தை நீதித்தீர்ப்பாணைக் குள்ளாக்ககோரும் கோரிக்கை வைக்க இயலாது என்றும், Abdul Sattar Abdul Aziz *v*. E.A.R.M. Chettyar Firm & Others AIR 1932 Rang (101) என்ற வழக்கில் விளக்கப்பட்டது. உட்பிரிவு 8-ன் பயனைப்பெற, கடனாளியின் சிறைவாசம் தொடருகின்ற போதே கோரிக்கை மனு செய்தல் வேண்டும் என்று பம்பாய் வழக்கில் Re Ahmad 26. Bom 649 கூறப்பட்டுள்ளது.

### நொடிப்புநிலை அறிக்கை (Insolvency Notice)

உட்பிரிவு 9ஆனது பம்பாய் XV of 1939 சட்டத்தினால் சேர்க்கப்பட்ட புதிய நொடிப்புநிலை ஆக்குவினையாகும். இச்சட்டத்தின்படி கடனாளியானவர், கடனாளரின் நொடிப்புநிலை அறிக்கையின்மீது உரிய நடவடிக்கை எடுக்காததனால் ஏற்படுகின்ற நொடிப்புநிலை ஆக்கவினையாகும். இங்கிலாந்து சட்டத்தில் காணப்படுகின்ற (Bankruptcy Notice) அடிப்படையிலேயே இந்தப் புதிய சேர்க்கை ஏற்பட்டது.

நொடிப்புநிலை அறிக்கையானது, கடனாளி செலுத்தவேண்டிய தொகைக்காகக் கடனாளர் ஒருவரால், பெறப்பட்ட தீர்ப்பாணை அல்லது வழக்குமன்ற உத்தரவிற்கான இயற்சட்ட அறிக்கையாகும் (Statutory Notice) அறிக்கையில் குறிப்பிட்ட காலக்கெடுவிற்குள், சாதாரணமாக ஒரு மாதகால அளவிற்கு குறையாமல், கடனாளியை அந்தத் தொகையைச் செலுத்தும்படி கேட்டுக் கடனாளிக்குச் சார்வு (Serve) செய்கின்ற உரிமையைக்

கடனளர் பெறுகிருர். அத்தகைய அறிக்கையைப் பெறவேண்டிய நிபந்தனைகள் சில உண்டு.

(1) கடனளிக்கு எதிராகத் தொகை செலுத்துவதற்கான தீர்ப்பாணை அல்லது வழக்குமன்ற உத்தரவினைக் கடனளர் பெற்றிருக்கவேண்டும்.

(2) நீதிமன்றம் ஒன்றின் உத்தரவுமூலம், அத்தகைய தீர்ப்பாணை அல்லது உத்தரவு நிறைவேற்றம், நிறுத்திவைக்கப் படாமல் (stay) இருக்க வேண்டும்.

அத்தகைய அறிக்கையைப்பெற்றுக் கடனளர், சட்டப்படி கடனளியின் மீது சார்வு செய்த பின்னர், கடனளி, அத்தகைய தொகையைச் செலுத்தாவிடினும் அல்லது கடனளருக்கோ அவருடைய முகவருக்கோ அவர்களின் திருப்திக்கு இணங்க, செலுத்த வேண்டிய தொகைக்கான பிணையம் (security) கொடுக்காவிடினும், சட்டப்படி கடனளி நொடிப்புநிலை ஆக்கு வினை ஒன்றைச் செய்தவராகக் கருதப்படுவார். அதன்மீது நீதித்தீர்ப்பாணை வேண்டிக்கோரிக்கையைப் பின்னர் எழுப்பலாம்.

ஆயினும் கடனளி, அத்தகைய தீர்ப்புக் கடனளருக் (Judgement creditor) கெதிராக அவருடைய கோருஉரிமைக்கு நிகரான அல்லது அதிகப்படியான எதிர்உரிமை (counter claim) அல்லது எதிரிடைவாதம் (set off) ஒன்றிருப்பதாகக் காண்பித்தும், பின்னரும் அதனைத் தீர்ப்பாணை அல்லது வழக்கு மன்ற உத்தரவு வழங்கிய அந்த உரிமையியல் வழக்கு அல்லது நீதிமன்ற நடவடிக் கையில் கடனளருக்கெதிராகத் தன்னல் அத்தகைய எதிர்உரிமை அல்லது எதிரிடைவாதத்தினைச் சட்டப்படியாக எடுத்து வைக்க (set up) முடியவில்லை என்றும் விளக்கிடின் அத்தகைய கடனளி நொடிப்புநிலை ஆக்குவினை செய்தவராகக் கருதப்பட முடியாது என்பது புதிய சேர்க்கை விதி (1)-ல் நன்கு தெளிவாகிறது.

### நொடிப்புநிலை அறிக்கை செய்முறை

கடனளிக்கு எதிராக நொடிப்புநிலை அறிக்கை வெளியிட விழையும் கடனளர், நொடிப்புநிலை பதிவாளர்முன் கீழ்க்காணு மாறு மனு செய்தல் வேண்டும்.

**பம்பாய் விதிகள் பின்வருமாறு**

(i) அறிக்கைக்கு ஆதாரமான சான்றளிக்கப்பட்ட (certified copy) தீர்ப்பாணை அல்லது வழக்குமன்ற உத்தரவு ;

(ii) நிர்ணயிக்கப்பட்ட முறையில் (Prescribed) உள்ள நொடிப்புநிலை அறிக்கையும், அதனை வெளியிட வேண்டிக் கோரும் வேண்டுகோளும்,

(iii) அவற்றின் இரு பிரதிகள் (Two copies) கடனாளிக்குச் சார்வு செய்ய வேண்டி;

(iv) செலவினங்களுக்காக ரூபாய் 20/-
என அனைத்தும் பதிவாளர் முன் வைத்திடல் வேண்டும்.
அறிக்கையில், கடனாளிக்கான அறிவிப்பு இருத்தல் வேண்டும்.

(i) அறிக்கையின் மீது உரிய நடவடிக்கை எடுக்காவிடில், அச் செயலை நொடிப்புநிலை ஆக்குவினைச் செயலாகக் கருதப்பட்டு நொடிப்புநிலை கோரிக்கை எழுவதற்கு ஆதாரமாகும்.

(ii) கடனாளருக்கு எதிரான எதிரிடைவாதம் அல்லது எதிரிடை உரிமை இருப்பின் அதற்கான ஆணை உறுதிப்பத்திரத் (Affidavit) தைக் கடனாளி அறிக்கையில் குறிப்பிட்ட காலக்கெடுவிற்குள்ளாகப் பதிவாளர்முன் வைத்திடக் கோருதல் வேண்டும். காலக்கெடு பொதுவாக நீதிவரம்பிற்கு உட்பட்டு இருப்பின் ஏழு நாட்களாகவும் கடனாளி வெளியில் இருப்பின் பதிவாளர் குறிப்பிடுகின்ற நாட்களாகவும் அமையும். அத்தகைய அறிக்கையைப் பெற்ற பின்னர், கடனாளி அனுமதிக்கப்பட்ட காலக்கெடுவிற்குள் அறிக்கையைத் தள்ளிவைக்கக்கோருகின்ற இடைக்கோரிக்கை மனு (Notice of Motion) கொண்டு வரவேண்டும். அத்தகைய மனுவின்மீது உரிய விசாரணை நடந்து முடிவு எடுக்கின்ற வரையில் அத்தகைய கடனாளி நொடிப்புநிலை ஆக்குவினை செயல்புரிந்தவராகக் கருதப்பட மாட்டார். நொடிப்புநிலை அறிக்கை நிறுவனத் (Company) திற்கெதிராகக் கொடுக்க இயலாது. வயதுவராத இளவர், பித்தநிலையர், மந்த புத்தியினர் இந்தியாவில் குடியிருக்காத அயல்நாட்டினர் முதலானவர்களுக்கெதிராகவும் கொடுக்க முடியாது.

### நொடிப்புநிலை ஆக்குவினை செயல்புரிந்த முகவர் (Agent) நிலை

நொடிப்புநிலைச் சட்டத்தின் பிரிவுகளுக்கான விளக்கத்தில் முகவரால், முகவர்மூலமாக நொடிப்புநிலை ஆக்குவினை செயல் ஏற்படலாம் என்று கூறப்பட்டுள்ளது. ஆயினும், இரண்டு சட்டங்களின் சொற்கோவையில் (Phraseology) சிறிது வேறுபாடு காணப்படுகிறது. மாநகர் சட்டத்தில், 'அத்தகைய செயலைப்புரிய முகவரானவர், போதுமான உரிய அதிகாரம் பெருதிருப்பினும், 'முகவரின் செயல்' முதல்வரின் (Principal)

செயலாகக் கொள்ளப்படும் என்று கூறப்படுகிறது. கொள்கை ரீதியாக வேறுபாடு இல்லை. ஆனால் 'May' என்ற சொல்லைப் பிரிவில் பயன்படுத்தியிருப்பது, முகவரின் அனைத்துச் செயல்களும் முதல்வரின் செயல்களாகக் கருதமுடியாது என்பதை விளக்கி நிற்கிறது. முகவரின் செயலை முதல்வரின் செயலாகக் கருத கீழ்க் காண்பவை அவசியமாகின்றன.

(i) அன்னாரின் செயல் முகவரால் இசைவு அளிக்கப்பட்ட அதிகாரப்பூர்வமான செயலாக இருக்கவேண்டும். அல்லது முகவர் மேற்கொண்டுள்ள பதவி, அந் நிலையை ஏற்படுத்துவதாக இருக்க வேண்டும் என்பதனைக் கீழ்க்காணும் Kastoorchand v. Dhanpursing 23. Cal 6. வழக்கில் விளக்கப்பட்டுள்ளது.

இங்கிலாந்து நாட்டில் நொடிப்புநிலை ஆக்குவினை செயல் நேர்முகச் செயலாக (Personal Act) இருத்தல்வேண்டும். முதல்வர் அதிகாரம் பெறாத, முகவர்செய்த செயலாக இருத்தல் கூடாது. பிரிவிக் கவுன்சில் மேற்சொன்ன வழக்கில் முதல்வர், கௌரவமான நபராகவும், வியாபாரத்தில் நேரடியான தொடர் புள்ளவராகவும் உள்ளதால், அன்னாரின் எழுத்தரின் பதவியைக் கொண்டு அவருடைய செயல்கள் முதல்வரின் செயல்களாகக் கருத இடமில்லை என்று கருதியது. இங்கிலாந்து சட்டப்படி, நிறுமத்திற்கெதிராக நீதித்தீர்ப்பாணை வழங்கப்படவேண்டுமானால் பங்காளர் ஒவ்வொருவரும் நொடிப்புநிலை ஆக்குவினை செயல் புரிந்திருக்கவேண்டும். ஆனால் இணைந்த செயலாக இருக்கத் தேவையில்லை.

மாநகர்ச் சட்டம் 9ஆவது பிரிவிலும், மாநிலச் சட்டம் பிரிவு 6-லும் கொடுக்கப்பட்டுள்ள நொடிப்புநிலை ஆக்குவினை செயல்கள் தவிர மற்றைய செயல் எதுவும் நொடிப்புநிலை ஆக்குவினை செயல் இந்தியாவிற்குள் புரிந்திருக்கவேண்டும். இங்கிலாந்து சட்டப்படி நொடிப்புநிலை ஆக்குவினை செயல் நேர்முகச் செயலாக இருத்தல் வேண்டும். இந்தியச் சட்டத்தில், முதல்வரின் அதிகாரம் பெறா திருப்பினும் முகவர் செயல் முதல்வர் செயலாகலாம் (May). நொடிப்புநிலை தருவினை செயலைத்திருத்தித் தெளிவாக்க (Purge) இயலாது கோரிக்கை மனு வழங்குவதற்கு முன்னதான மூன்று திங்களுக்குள்ளாக நொடிப்புநிலை ஆக்குவினை செயல் புரிந்திருக்க வேண்டும். நொடிப்புநிலை ஆக்குவினை செயல் புரிந்ததற்கான எண்பித்தலை புகார் தந்தவரே செய்தல் வேண்டும்.

இயல் 4

# நொடிப்புநிலை கோரிக்கை மனுக்களும் அவற்றின் விசாரணையும்

## (Insolvency Petitions and The Hearing thereof)

நொடிப்புநிலை ஆக்குவினை செயல் புரிந்த பின்னர், நொடிப்பு நிலை கோரிக்கை மனு ஒன்றினை, கீழே காண்கின்ற விதிகளுக் குட்பட்டு, கடனாளர் அல்லது கடனாளி முன்னிலைப்படுத்த லாம். மாநகர்ச் சட்டம் 10ஆவது பிரிவுப்படியும், மாநிலச் சட்டம் 7ஆவது பிரிவுப்படியும், அத்தகைய நொடிப்புநிலை ஆக்கு வினைச்செயல் புரிந்தமை குறித்து மனுச்செய்யாது மன்றத்திற்குத் திருப்தி ஏற்பட்டும், கோரிக்கை, மனு இயற்சட்டத்தின் விதி களுக்கு இணங்கிச் செய்திருப்பின், கடனாளியை நொடிப்புநிலையர் (Insolvent) என, நீதிமன்றம் நீதித்தீர்ப்பாணை வழங்கலாம். மேற் சொன்ன பிரிவுகளின் கீழான விளக்கத்தில், கோரிக்கை மனு ஒன்றை அளிக்கும் முன்னிலைப்படுத்திய கடனாளி, நொடிப்புநிலை ஆக்குவினை செயல் புரிந்தவராகக் கருதப்பட்டு அத்தகைய கோரிக்கை மனுமீது நீதித்தீர்ப்பாணை வழங்கலாம் என்று கூறப் பட்டுள்ளது.

### நொடிப்புநிலை அதிகாரவரம்பின் பொது நியதிகள்

மாநகர்ச் சட்டம் பிரிவு 11-ல், (1) கடனாளி, கோரிக்கை மனுவினை முன்னிலைப்படுத்தும் சமயத்தில், பணம் செலுத்துவதற் கான நீதிமன்றத்தின், தீர்ப்பாணையினை நிறைவேற்றுவதன்மூலம் அம் மன்றம் சாதாரணமாக கடனாளிகளை அனுப்புகின்ற சிறைச் சாலைக்கு அனுப்பப்பட்டிருந்தால் அல்லாமல்; அல்லது (2) அத் தகைய நீதி மன்றத்தின் சாதாரண முதலேற்பு அதிகாரவரம்பிற் குட்பட்ட எல்லைக்குள்ளாக, கடனாளி, கோரிக்கைமனு சமர்ப்பித்த

நாளுக்கு முன்னதாக ஓராண்டுக் காலத்திற்குள் வழக்கமாகக் குடியிருந்திருந்தால் அல்லது குடியிருக்கும் வீடு வைத்திருந்தால் அல்லது தானாக அல்லது தன் முகவர் மூலமாகத் தொழில் நடத்தியிருந்திருந்தால் அல்லாமல்; அல்லது (3) அத்தகைய எல்லைக்குள் கடனாளி ஆதாயத்திற்காக தானே பாடுபட்டுக்கொண்டிருந்தால் அல்லாமல்; அல்லது (4) கோரிக்கை மனு, நிறுமம் (Firm) ஒன்றினாலோ அதற்கெதிராகவோ ஆனால், அத்தகைய நிறுமம் மேற் சொன்ன எல்லைக்குள் கோரிக்கை மனு கொடுத்த நாளுக்கு ஓராண்டு காலத்திற்குள்ளாக வியாபாரம் நடத்தியிருப்பின், அல்லாமல்; அந்த வழக்கு மன்றத்திற்கு நீதித்தீர்ப்பாணை வழங்கும் அதிகாரம் கிடையாது.

மாநிலச் சட்டம் பிரிவு 11-ல் குடியிருப்பு அல்லது வியாபாரம் முதலானவற்றின் கால அளவுக்கான வரைமுறைகளைக் குறிப்பிடவில்லை. மாறாக அச்சட்டம், நொடிப்பியல் கோரிக்கை மனு ஒன்றினைச் சட்ட அதிகார வரம்பினைப்பெற்ற எந்த ஒரு உள்ளூர் வட்டத்தினுள்ளாவது (1) கடனாளி சாதாரணமாக குடியிருந்தாலும் அல்லது (2) தொழில் மேற் கொண்டிருந்தாலும் அல்லது (3) தானே ஆதாயத்திற்காகப் பாடுபட்டுக்கொண்டிருந்தாலும் அல்லது (4) கைது செய்யப்பட்டிருந்தாலும் அல்லது சிறைவைக்கப்பட்டிருந்தாலும் அந்த நீதிமன்றத்தினிடம் முன்னிலைப்படுத்தலாம் என்று கூறப்பட்டுள்ளது. மாநகர்ச் சட்டத்தில் கைது செய்யப்பட்டிருக்கும் இடம் அதிகாரவரம்பு அளிக்கும் இடம் ஆகும் எனக் குறிப்பிடாதது கவனிக்கத்தக்கது. மாநிலச் சட்டத்தில் 'குடியிருக்கும் வீடு வைத்திருப்பின்' என்ற சொற்கள் இல்லாமலிருப்பதும் நோக்குதற்குரியதாகும். வியாபாரம் என்ற சொல் எத்தகைய தொழிலையும் அதை ஆதாயம் கருதி மேற் கொண்டிருப்பின் உள்ளடக்கியதாகும்.

குடியிருப்பு என்பதானது நிரந்தரமானதாக இருக்கவேண்டும் என்பதில்லை. மாறாகத் தற்காலிகமானதாகவோ ஏதோ சில சமயங்களிலோ இருக்கும் இடம் குடியிருப்பாகாத (**In re momet 21. Cal 634** என்ற வழக்கில் கடனாளர் ஒருவர் இங்கிலாந்தை விட்டு வந்து கல்கத்தாவில் சில மாதங்கள் வேலை தேடுவதற்காகக் குடியிருந்தது நொடிப்புநிலை கோரிக்கை மனு எழுவதற்கான போதுமான குடியிருப்பாகத் தீர்ப்பளிக்கப்பட்டது. ஆனால் **Goswami Shri Girdharlalji v. Shri Govardharlalji 18. Bom. 290** என்ற வழக்கில் பம்பாய்க்குத் தன்னுடைய பக்தர்களால் அவர்கள் அளிக்கும் காணிக்கை பெறும் பொருட்டு அழைக்கப்பட்டு அதன் காரணமாகப் பம்பாயில் இருந்த தலைமைக்குரு,

பம்பாய் நீதிமன்றத்திற்கு அதிகார வரம்பளிக்கும் வகையில் 'குடியிருந்தார்' என்று கொள்வதற்கில்லை என்று தீர்ப்பளிக்கப் பட்டது. Exparte Norris (1885)5 Morr. 111. என்ற வழக்கில், உணவு விடுதி ஒன்றில் தொடர்ந்து அல்லது நீண்ட காலத்திற்குக் குடியிருந்தால், இம் மாதிரி பிரிவில் கூறப்பட்டுள்ள குடியிருப் பாகும் என்று கூறப்பட்டது.

Re Arnold Gautzer 42. C. W. N. 350 என்ற வழக்கில் ஜமால்பூரில் வசித்துவரும் இரயில்வே பணியாளர் ஒருவர், வார முடிவில் பொழுது போக்கிற்காகக் கல்கத்தாவில் அறை ஒன்றை எடுத்து இருப்பது நகர்ச் சட்டம் 11ஆவது பிரிவில் அடங்கு கின்றது. என்று தீர்ப்பு வழங்கப்பட்டது. அதே சமயம் re Benode Behari Saha 46 CWN. 664 என்ற வழக்கில் வெளி யிடத்தில் சில்லறை வியாபாரம் செய்கின்ற வியாபாரி திங்கள் தோறும் தனக்கு வேண்டிய சரக்குகளை வாங்கும் நிமித்தம் கல் கத்தாவிற்கு வந்து தரகருடன் அதன் பொருட்டு நான்கு அல்லது ஐந்து நாட்கள் தங்கியிருந்து, அங்கிருந்து பொருள் விற்றவர் களுக்குப் பணம் செலுத்துவார், அதனுல் 'நொடிப்புநிலை சட்ட வியல் அதிகாரவரம்பினுக்குட்பட்டு அவ்விடத்தில் குடியிருந்த தாகவோ, வியாபாரம் செய்திருந்ததாகவோ கருத இடமில்லை என்று கூறப்பட்டுள்ளது. மாநிலச் சட்டத்தில் 'குடியிருக்க வீடு வைத்திருத்தல்' என்ற சொற்கள் காணுதலைக் குறிப்பிட்டுச் சென்னை உயர்நீதிமன்றம், Viswanath v. Off. Assignee of Madras 58 Mad. L. J. 189. என்ற வழக்கில், கடனாளி, எங்கு வசித்திருப்பினும், உயர்நீதிமன்ற அதிகார வரம்பினுக்குட்பட்ட இடத்தினில், வசிக்க விரும்பினுல் எந்த நேரத்திலும் இருப்பதற்கு தக்க குடியிருப்பு வீடு இருப்பின் சட்டத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்யப் போதுமானது என்று தீர்ப்பளித்தது.

''தொழில் மேற்கொண்டிருத்தல்,'' என்ற சொற்றொடரை, நீதிமன்றங்கள், உரிமையியல் நடைமுறைச் சட்டத்திலுள்ள சொற்றொடருடன் ஒப்பிட்டு, இந்து கூட்டுக் குடும்பத்தின் கர்த்தா, நியாய வரம்புக்குள் நடத்துகின்ற தொழிலை, அக் குடும்பத்தின் உறுப்பினர்களில் அத் தொழிலில் காட்டுகின்ற அக்கரை காரணமாக அன்னரே நடத்துகின்ற தொழிலாகக் கருத முடியாது என்று முடிவு செய்தன. ஆனல் அன்னரின் சம்மதத்துடனே, அவர் நடத்தையின் காரணமாகவோ அவரைக் கூட்டுத்தொழிலதி பராகக் கொள்ள முடிந்தால் அவர் மேற்கொண்டிருந்த தொழி லாக அதனைக் கருதலாம். பிரிவில் கூறப்பட்ட முகவர் என்ற சொல்லுக்குப் பொருத்தமான உரிய முறையில் நடந்து கொள்

பவரையே முகவராகக் கருத இயலும் என்பதனை (Murugesa v. Anamalai 23 Mad. 458, என்ற வழக்கில் கூறப்பட்டுள்ளது.

நிறுமம் ஒன்று கலைக்கப்பட்ட காரணத்தினலேயே தொழில் நடத்துவது நிறுத்தப்பட்டதாகக் கொள்ள இயலாது. அவற்றின் கடன்கள் அனைத்தும் செலுத்தப்பட்டும், முதல்கள் மீட்கப்பட்டும் முடிகின்ற வரையில் அத்தகைய நிறுமம் தொழில் மேற் கொண்டிருத்தலாகவே கருதப்படும். இக் கருத்து Theophile v. Sol Gen. 1950 A.C. 186 வழக்கில், தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. "தானே ஆதாயத்திற்காக பாடுபடுதல்'' என்ற சொற்றொடர், வழக்குகளின் பொருண்மைக் கேற்ப முடிவு கொள்ளவேண்டிய ஒன்றாகும் என்று Uderaj v. Hall 34 Bom. L.R. 844 வழக்கில் கூறப்பட்டது. சென்னையில் ஒருவர் ஊர்தி ஓட்டிக் கொண்டிருந்த ஒரே காரணத்தினல் சென்னையில் அன்னர் நொடிப்பு நிலைக் காரராளுர் என்று முடிவெடுக்க இயலாது என்று Challappa v. Official Assignee (1953) 2 MLJ. 166 வழக்கில் தீர்மானிக்கப் பட்டது.

### கடனளரின் கோரிக்கை மனுவிற்கான நிபந்தனைகள்

மாநகர் நொடிப்புநிலைச் சட்டம் பிரிவு 12ஆம் மாநில நொடிப்புநிலைச் சட்டம் பிரிவு 9ஆம் கடனாளரின் கோரிக்கைக்கான நிபந்தனைகள் கூறப்பட்டுள்ளன. அவை பொதுவாக நோக்கு மிடத்து ஒன்று போலுள்ளன. அவையாவன :

(1) கடனாளி செலுத்த வேண்டிய கடன், அல்லது இரண்டும் அதற்கு மேற்பட்ட கடனாளர்கள் கூட்டாக கோரிக்கை செய்யின் அத்தகைய கடனாளர்களுக்குச் சேரவேண்டிய கூட்டுக் கடன்களின் தொகை ரூ. 500 ஆக இருக்கவேண்டும்.

(2) அத்தகைய கடன், உடனடியாக அல்லது குறிப்பிட்ட எதிர்காலத்தில் செலுத்தவேண்டிய அறுதியிட்ட தொகையாக இருத்தல் வேண்டும்.

(3) கோரிக்கை மனு அளித்த தேதிக்கு முன் மூன்று மாதங்களுக்குள், மனு கொடுப்பதற்கான அடிப்படையான நொடிப்புநிலை ஆக்கவினை செயல் நடைபெற்றிருக்க வேண்டும்.

எனவே கடனாளரின் கோரிக்கை மனு அளிக்க முன் நிபந்தனைகளாக இருக்கவேண்டியவை கீழ்வருமாறு :

(1) நொடிப்புநிலைத் ஆக்குவினைச்செயல் நடைபெற்ற போது கடன் ஒன்று இருத்தல் வேண்டும். அத்தகைய கடன்,

கோரிக்கை மனு அளிக்கப்பட்டபொழுதும், விசாரணையின் போதும், நீதித்தீர்ப்பு உத்திரவிடுகின்றபோதும் அத்தகைய கடன் தொடர்ந்திருத்தல் வேண்டும்.

(2) நொடிப்புநிலை தருவினை செயல் புரிந்த நாளில் அத் தகைய கடன் ரூ 500-க்குக் குறையாமல் இருந்திருக்க வேண்டும்.

(3) அக் கடன், உடனடியாக அல்லது குறிப்பிட்ட கால வரையறையுடன் கூடிய எதிர்காலத்தில் செலுத்துதல் கூடிய அறுதியிட்ட தொகையாக இருத்தல் வேண்டும்.

(4) நொடிப்புநிலைத் தருவினைச் செயலானது, கோரிக்கை மனு கொடுக்கப்பட்ட தேதிக்குமுன் மூன்று மாதங்களுக்குள் நடை பெற்றிருக்க வேண்டும். மாதம் என்பது நாட்காட்டி (calender) மாதமாகும். மூன்று மாதங்களைக் கணக்கிட கோரிக்கை மனு அளிக்கப்பெற்ற நாளை நீக்கிக் கணக்கிடல் வேண்டும். மூன்றாவது மாதத்தின் இறுதிநாள் ஞாயிற்றுக்கிழமையானாலும் அல்லது விடுமுறை நாளானாலும், மனுவை அடுத்துவரும் முதல் பணி நாளில் (working day) கொடுக்கலாம். நொடிப்புநிலை ஆக்குவினை செயல் புரிந்தமைக்கான குற்றச்சாட்டுடன் மூன்று மாதத்திற்குள் கடனாளரால் அளிக்கப்பட்ட கோரிக்கை மனுவினை, விதிகளின்படி அத்துடன் செலுத்தவேண்டிய வைப்புத்தொகை (Deposit) இல்லை என்பதற்காகத் திருப்பப்பட்டு, மீண்டும் அந்த மனு வைப்புத் தொகையுடன் அளிக்கப்படும்போது, நொடிப்புநிலை ஆக்குவினை செயல்புரிந்து மூன்று மாதங்கள் கடந்து விட்டிருப்பினும், கோரிக்கை மனு முறையாக அளிக்கப்பட்டதாகக் கருதப்படும்.

**பிணைக்கடனாளர் ஒருவரின் கோரிக்கை**

பிணைக்கடனாளர் தன் கோரிக்கை மனுவில், தன்னை மற்றக் கடனாளர்களின் நன்மைக்காகக் கடனாளி நீதித்தீர்ப்புக்குள்ளாவ தானால் தான் பிணையத்தை விட்டுவிட விரும்புவதாகவோ பிணையப் பொருளின் மதிப்பீட்டினைத் தெரிவித்தோ குறிப்பிட வேண்டும். இரண்டாவதாகக் குறிப்பிட்டபடி மனுவில் தெரிவிப்பாரானால், அவ்வாறு மதிப்பீட்டில் குறிப்பிட்ட தொகையினைக்கழித்த பின்னர் மீதமுள்ள அவருக்குச் சேர வேண்டிய கடன் தொகைக்குப் பிணையமற்ற ஏனைய கடனாளர் களுக்கொப்ப, அன்னாரும் கோரிக்கை கடனாளராக ஏற்றுக் கொள்ளப்படுவார். இத்தகைய விதிக்கு முக்கிய காரணமென்ன வெனில், கோரிக்கை கடனாளர், நொடிப்புநிலைச் சட்டத்தின்படி பிணையமில்லா கடனாளராக இருத்தல்வேண்டும் என்றிருப்பதே. அப்பொழுதுதான் கடனாளர்களிடையே உள்ள பகிர்ந்தளிப்பு

ஒன்றுபோலிருக்கும். எனவே, கடனாளர் பிணையமற்றவராக இருக்கவேண்டும், அல்லது பிணையம் உடையவராயின் அதனை விட்டுக்கொடுத்தவராகவும் அல்லது மதிப்பீட்டுக் கடனைவிட அப் பிணையம் குறைந்த மதிப்புடையது என்பதனை உணர்ந்தவராகவும், மிகுதியுள்ள கடன் தொகைக்குக் கோரிக்கை மனு கொடுப்பவ ராகவும் இருத்தல்வேண்டும். இத்தகையவற்றில் மீதமுள்ள கடன் தொகை ரூ. 500-க்குக் குறையாமலிருக்கவேண்டும் என்பது கவனிக்கத்தக்கது.

**கடனாளியின் கோரிக்கை மனுவிற்கான நிபந்தனைகள்**

இவை மாநகரங்கள் சட்டம், பிரிவு 14-லிலும், மாநிலச் சட்டம் பிரிவு 10-லும் விளக்கப்படுகின்றன.

கடனாளி ஒருவர் கீழ்க்கண்ட நிபந்தனைகள் பூர்த்தியாகாமல் நொடிப்புநிலை கோரிக்கை மனுவினை அளிக்கத் தகுதிபெற மாட் டார்.

(1) அன்னார் கடன்களைச் செலுத்த இயலாதவராயிருத்தல் வேண்டும்.

(2) (a) அன்னாரின் கடன்கள் ரூ. 500 ஆகவோ அல்லது

(b) அன்னார் பணம் செலுத்துவதற்கான தீர்ப்பாணை நிறைவேற்றம் காரணமாக கைதுசெய்யப்பட்டு சிறைபடுத்தப் பட்டவராகவோ இருத்தல்வேண்டும், அல்லது மாநிலச் சட்டத் தில் கைதுசெய்யப்பட்டிருந்தாலே போதுமானது.

(c) பணம் செலுத்துவதற்கான தீர்ப்பாணை நிறை வேற்றம் காரணமாக, அன்னாரின் சொத்துமீது பற்றுகை (attachment) உத்தரவு செய்யப்பட்டு அமுலில் இருக்கவேண்டும்.

மேற்சொன்ன நிபந்தனைகள் பூர்த்தியாகாமல் இருப்பின் கோரிக்கை மனு தள்ளப்படும். மனுவை சரிவர நடத்தாமல் இருந்து, நீதித் தீர்ப்பானை ரத்தாகி விட்டால் மீண்டும், நீதி மன்றத்தின் இசைவின்றி நொடிப்புநிலை கோரிக்கைமனு முன் னிலைப்படுத்த முடியாது.

**கோரிக்கை மனுவின் பொருள் அடக்கம்**

மாநிலச் சட்டம் பிரிவு 12, 13, மாநகரங்கள் சட்டம் பிரிவு 13,18 நொடிப்புநிலைச் சட்டங்களின் கட்டு வாசகங்களி னின்றும், பல்வேறு உயர்நீதி மன்றங்கள் தங்களுக்கு வழங்கப் பட்ட அதிகாரத்தின்கீழ் வகுத்த விதிகளினின்றும் கோரிக்கை மனுவின் பொருள் அடக்கத்தை அறிய முடிகிறது.

**கடனாளர் ஒருவரின் கோரிக்கை மனுவில்**

(i) மனுவினை அளிக்க அன்னாருக்குப் போதுமான முகாந்திரங்களை (Facts) குறிப்பிடவேண்டும்.

(ii) அந்த நீதிமன்றம் அத்தகைய மனுவை ஏற்க அதிகார வரம்புடையதற்கான முகாந்திரங்கள் குறிப்பிட வேண்டும்.

(iii) அவராவது அல்லது அன்னாரின் சார்பாக முகாந்திரங்களை அறிந்த ஒருவரால் கோரிக்கை மனுவின் பொறுப்புள்ள பதிலை 36 ஆணையுறுதிப் பத்திரம் (affidavit) மெய்ப்பிக்க வேண்டும்.

**கடனாளரின் கோரிக்கை மனுவானது,**

(i) தன்னால் கடன்களைச் செலுத்த இயலவில்லை என்று சாட்டுரைக்க வேண்டும் (Allegation). ஆயினும், மனுவின் மீதான விசாரணையின்போது, கடன்கள் செலுத்த இயலாமைக்கான நிர்ணயிக்கப்பட்ட நிரூபணம் செய்யத் தேவையில்லை. கடனாளி கடன்களைச் செலுத்த இயலவில்லை என்பதற்கான மேலோட்டமான அடிப்படைகள் (Prima Facie Grounds) இருப்பதாக நீதிமன்றம் மனநிறைவு கொள்ளுமானால் போதுமானது. ஆனால், அன்னாரின் அனைத்து அல்லது பெரும்பான்மையான கடன்கள் கற்பிக்கப்பட்டவை (Fictitious) என்று நீதிமன்றம் நம்ப போதுமான காரணங்கள் இருப்பின், மனுவைத் தள்ளுபடி செய்தல் ஆகும்.

(ii) மேலும் இதற்கு முன்னர் இத்தகைய கோரிக்கை கொடுக்கப்பட்டதா அங்ஙனமாயின் அதன் விவரங்களும், எப்படி அந்தக் கோரிக்கை தீர்க்கப்பட்டன என்றும் மனுவில் குறிப்பிட வேண்டும்.

(iii) மனுவானது, உரிமை இயல் நடைமுறைச் சட்டத்தில் வழக்குரை (Plaint) போலவே கையொப்பமிட்டு மெய்ப்பிக்கப் படல் (verified) வேண்டும்.

**மாநகர்களில் மாநிலச் சட்டங்களில் கோரிக்கை மனுவின் பொருளடக்கம் பற்றிய வேறுபாடுகள்**

(i) மாநிலச் சட்டத்தில், கடனாளி, கோரிக்கை மனுவிலோ அல்லது அதனுடனோ அன்னாரின் சொத்து விவரப்பட்டியல் ஒன்றைத் தருதல்வேண்டும். ஆனால், மாநகர்ச் சட்டத்தில், நீதித் தீர்ப்பாணை உத்தரவிடப்பட்ட 30 நாட்களுக்கு முன்னதாக அவ்விதம் அவர் செய்யத் தேவையில்லை.

(ii) மாநிலச் சட்டப்படி ஒவ்வொரு கோரிக்கை மனுவும் மெய்ப்பிக்கப்படவேண்டும் (Verified). ஆனால், மாநகர்ச் சட்டப்

படி கடனாளர் கோரிக்கைமட்டும் மெய்ப்பிக்கப்படவேண்டும். அதுவும் ஆணையுறுதிப் பத்திரம் மூலமாக.

(iii) மாநிலச் சட்டத்தில், கடனாளி தன் கடன்களுக்கானப் பட்டியலைக் கடனாளர்களின் பெயர், முகவரிகளுடன் தந்திட வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. மாநகர்ச் சட்டத்தில் இது தேவையில்லை. இந்த வேறுபாடு, மாநகர் மற்றும் வெளியிடத் தலைநகர்களில் நிலவுகின்ற நிலைகளினால் ஏற்பட்ட ஒன்றாகும்.

### நொடிப்புநிலை கோரிக்கை மனு திரும்பப்பெறல் (Withdrawal)

*மாநகர்ச் சட்டப் பிரிவு 13(8) மாநிலச் சட்டப் பிரிவு 14*

நீதிமன்றத்தின் அனுமதியின்றிக் கடனாளியினால் அல்லது கடனாளரால் கொடுக்கப்பட்ட எந்த ஒரு கோரிக்கை மனுவும் திரும்பப்பெற இயலாது. மேலும் நீதித்தீர்ப்பாணை (Adjudication) உத்தரவு பிறப்பிக்கப்பட்ட பின்னர், நீதிமன்றத்திற்கே கோரிக்கை மனுவை மீட்டுப்பெற வேண்டிய அனுமதி வழங்குவதற்கான அதிகாரம் இல்லை. அத்தகைய உத்தரவு பிறப்பிக்கப்பட்ட உடன் கடனாளி நொடிப்புநிலையராகி, நீதித் தீர்ப்பாணையை இல்லாமல் ஆக்குகின்ற வரையில் (Annulled) அல்லது அன்னார் தன்னுடைய விடுப்பினைப் (discharge) பெறுகின்ற வரையில் நொடிப்புநிலையராகவே இருப்பார்.

### கோரிக்கை மனுவை அனுமதித்த பின்னர் நடவடிக்கை (Procedure)

உரிமையியல் வழக்கு ஒன்றில் கொடுக்கப்பட்ட சாதாரண வழக்குரை (Ordinary Plaint)யைப் போன்றே, நொடிப்புநிலை கோரிக்கை மனுவும் பரிசீலிக்கப்படும். கோரிக்கை மனு அனுமதிக்கப்பட்ட பின்னர், நீதிமன்றம், விசாரணைக்கான நாள் ஒன்றை நிர்ணயித்துச் சம்பந்தப்பட்ட அனைத்துத் தரப்பினருக்கும் அதற்கான அறிக்கையினை அனுப்பிவைக்கும். மாநகர்ச் சட்டத்தின் கீழ் கடனாளர்கள் தருகின்ற நிரூபணங்களிலிருந்து அல்லது கடனாளி தன் கடன்களைச் செலுத்த இயலாமை குறித்து நீதிமன்றம் மன நிறைவு கொள்ளுமானால், கடனாளியினை, நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணையினை அளிக்கும். கோரிக்கை மனுவின் இடையே (Pending petition) கடனாளியின் சொத்தினைக் கைவசம் (Possession) பெறும் பொருட்டு வழக்குறு சொத்து பேணுநர் (Interim Receiver) ஒருவரை வழக்கு மன்றம், நீதித் தீர்ப்பாணை வழங்கு முன்னர் நியமிக்கும் கடனாளியின் சொத்தினைப் பாதுகாத்தல் அவசியம் என்று நீதிமன்றம் மனநிறைவு கொள்ளுமானால் அத்தகைய நியமனத்தைச் செய்யும். மாநிலச் சட்டத்தில் கடனாளர் கோரிக்கை மனுவை அனுமதிக்கின்றபோது கடனாளியின்

சொத்துக்காக வழக்குறு சொத்து பெறுநர் ஒருவரை நியமிக்கலாம் என்றும், கோரிக்கை மனுவை கடனாளி சமர்ப்பித்தால், சாதாரணமாக வழக்குறு சொத்து பெறுநரை நிச்சயமாக நியமிக்கவேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது.

### கோரிக்கைகளை ஒருங்கிணைக்கும் உரிமை (Consolidation of Petitions)

*மாநகர்ச் சட்டப் பிரிவு 9; மாநிலச் சட்டப் பிரிவு 15*

இரண்டு சட்டங்களிலும், இரண்டு அல்லது மேற்பட்ட கோரிக்கை மனுக்கள் ஒரே கடனாளிக்கெதிராகச் சமர்ப்பிக்கப் பட்டாலும் அல்லது கூட்டுக் கடனாளிகளுக்கெதிராகத் தனிக் கோரிக்கைகள் அளிக்கப்பட்டாலும், நீதி மன்றம் தனக்கு உகந்ததாகக் கருதுகின்ற முறைகளில், நடவடிக்கைகளை ஒருங்கிணைத்துக்கொள்ள வழி வகுத்துள்ளன. எனவே, நிறுமத்தின் கூட்டாளிகளில் நொடிப்பு நிலை அதிகார வரம்புக்குட்பட்ட ஒருவர், உயர் நீதிமன்றத்தின் நீதிபதி ஒருவரால் நொடிப்பு நிலையர் எனத் மாநகர் நொடிப்புநிலைச் சட்டத்தின்கீழ் நீதித் தீர்ப்பாணைக்குள்ளாவதானால், அதே சமயம் அந்த நிறுமத்தின் வேறு கூட்டாளி ஒருவருக்கெதிராக அந்த மாநிலத்திலுள்ள ஏதாவதொரு மாவட்ட வழக்கு மன்றத்தில் கோரிக்கை மனு கொடுக்கப்படுமானால், மாவட்ட வழக்கு மன்றம் அதனை உயர்நீதிமன்றத்திற்கு மாற்றி இரு மனுக்களின் நடவடிக்கைகளையும் சேர்க்கும் கடமைப்பட்டதாகும். இதனை V.A.V.S. Firm v. Maraganth Chetty 48 Mad. 514 வழக்கு தெளிவாக்கியது.

### கோரிக்கையினைத் தொடர மாற்றுரிமை

*மாநகர்ச் சட்டப் பிரிவு 42 மாநிலச் சட்டப் பிரிவு 16.*

கோரிக்கை மனுவைச் சேர்ப்பித்த மனுதாரர் மனுவின் மீதான நடவடிக்கையைச் சரிவரத் தொடரவில்லையானால், நீதி மன்றம், வேறு கடனாளரை மனுதாரருக்குப் பதிலாக மாற்றிக் கோரிக்கையைத் தொடரச் செய்கின்ற உரிமை படைத்ததாகும்.

### கடனாளி இறந்த பின்னரும் நடவடிக்கைகள் தொடர்தல்

*மாநகர்ச் சட்டப் பிரிவு 13. மாநிலச் சட்டப் பிரிவு 11.*

இரு சட்டங்களும், கடனாளி தன்னால் அல்லது அவருக்கெதிராகக் கோரிக்கை மனு கொடுக்கப்பட்டு, நடவடிக்கைகள் தொடருகின்றபோது இறந்துவிடுவாரானால், வழக்கு மன்றம் வேறு விதமாக உத்தரவிட்டாலன்றி, நடவடிக்கைகள் அன்னார் உயிருடன் வாழ்வதுபோலவே தொடரவும், அத்தகைய நடவடிக்கைகள் கடனாளியின் சொத்துமீட்புடிக்கும், பங்கீட்டுக்கும் தேவை

யான அளவு தொடரவும், வழி வகுத்துள்ளன. இதனின்றும், கடனாளி இறந்துவிடுவதனால் நொடிப்புநிலை நடவடிக்கை முடிந்து விடுவதில்லை (Abate) என்பதும் அன்னாரின் சொத்துக்கெதிரான நடவடிக்கைகள், வழக்கு மன்றம் வேறுவிதமாக உத்தரவிட்டா லன்றித் தொடரும் என்பதும் தெளிவாகின்றது. கடனாளி கோரிக்கை மனுவின் மீது, அவர் இறந்துவிடினும், வழக்குமன்றம் அன்னாரை நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்புக்குள்ளாக்கும். கடனாளி கோரிக்கை மனுவின் மீதான நடவடிக்கையின் இடையில் கடனாளி இறந்துவிடின், அன்னாரின் சட்டப்படியான வாரிசுகளுக்கு அறிவித்துவிட்டு வழக்குமன்றம் அதனைத் தொடரலாம் என்று Ramesh Charu Chandra 34 Cal. W. N. 445 வழக்கில் முடிவாகியுள்ளது. ஆயினும் கடனாளியின் கோரிக்கை மனுவின் மீது கடனாளி நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணை பெற்ற பின்னர், அதன்மீது கடனாளர் மேன்முறைமீடு (appeal) செய்திருந்து அதனிடையில் கடனாளி இறப்பாரானால் வழக்குத் தொடரும் உரிமை(Right to sue)முடிந்துவிடுவதனால் மேன் முறையீடும் முடிவடைகின்றது, (abate) என்று Narayan Sing v. Gurubaksha Sing 9. Lah. 306 வழக்கில் தெளிவாக்கப்பட்டது. கடனாளி நீதித் தீர்ப்பாணைக்கு முன்னரோ அல்லது பின்னரோ இறப்பின் சட்டங்களின் பிரிவுகள் செல்லுபடியாகும். நடவடிக்கைள் என்பதினால் கடனாளர்களோடு கடன் தீர்வு உடன்பாடு (Composition) செய்து கொள்வதும் அடங்கும்.

### தீய நோக்குடைய (Malicious) அல்லது விளையாட்டுத்தனமான (Frivolous) கோரிக்கை மனுவின்மீதான நிறையீடு (Compensation)

கடனாளர் கோரிக்கை மனு தள்ளப்படுமாயின், அத்தகைய மனு வீணான அடுத்தவரைத் தொல்லைக்குள்ளாக்குகின்ற எண்ணத்துடன் கூடியது என்று நீதிமன்றம் மனநிறைவு கொள்ளுமானால், மாநில நொடிப்புநிலைச் சட்டத்தின் 26ஆவது பிரிவின்கீழ், கடனாளிக்குக் குறுமுறை தீர்வு (Summary Remedy) காணப்படுகிறது. அத்தகைய நிலையில், கடனாளி மனு செய்துகொண்டால், கடனாளருக்கெதிராக ரூ. 1000-க்கு மிகாது கடனாளியின் செலவினங்களுக்காகவோ தனக்கு நியாயமெனக் கருதுகின்ற நிறையீட்டினை அன்னாரின் மனத்தைப் புண்படுத்தியமைக்காகவோ என்று வழக்கு மன்றம் இசைவு தீர்ப்பாளரின் முடிவாக (Award) வழங்கும். அந்தத் தொகையினைக் குற்ற இயல் நடைமுறைச் சட்டத்தின்கீழ் விதிக்கப்பட்ட அபராதத் தொகையினைப் பெறுகின்றமுறையில் பெறலாம். இத்தகைய இசைவுத் தீர்ப்பாளரின் முடிவாக வழங்கப்படும். நிறையீடானது, இத்தகைய பொருண்மைமீது

நிறையீடுகோரி உரிமையியல் வழக்குத் (Suit) தொடர தடையாக இருக்கும்.

இதுபோன்ற விதி மாநகர நகர் நொடிப்புநிலேச் சட்டத்தில் காணப்படவில்லே. விதிமுறைகள் வழிவகுக்காத நிலேயில், நபர்களின் உரிமைகள், ஆங்கிலநாட்டுப் பொதுச் சட்டத்தின்படி அமையும். தவருகவோ, தீய நோக்குடனே, போதுமான அல்லது தேவையான காரணமில்லாமல், அதனுல் தனித்த இழப்பு அல்லது பாதிப்பு நிரூபிக்க இயலாவிடினும், கோரிக்கை மனு ஒன்று கொடுத்திருப்பினும் அல்லது நீதித்தீர்ப்பாணேப் பெற்றிருப்பினும் அத்தகைய நடவடிக்கைமீது வழக்கு உண்டு என்று பொதுச் சட்டத்தில் கூறப்பட்டுள்ளது. கடனுளியின் நாணயம் இத்தகைய நொடிப்புநிலே நடவடிக்கைகளினுல் குறைபடும் என்பதனுல் இவ்வழிவகை செய்யப்பட்டுள்ளது. ஆனுல், இவ்வழக்குகளில், கோரிக்கை மனு தள்ளப்பட்டதென்றே (Dismiss அல்லது நீதித் தீர்ப்பாணே செல்லாமல் (Annul) ஆக்கப்பட்டதென்றே கடனுளி எண்பிக்கவேண்டும்.

### கோரிக்கை மனு தள்ளுபடியாதல் (Dismissal of Petition)

மாநகர்ச் சட்டத்தின் பிரிவு 8 (1)-ன் கீழ், நொடிப்புநிலே வழக்கு மன்றம், நீதித் தீர்ப்பாணே வேண்டி தன்னிடம் செய்யப் பட்ட மனுவினேத் தள்ளுப்படி செய்த உத்தரவினே, அத்தகைய உத்தரவு முறையானதன்று என்று அம்மன்றம் மனநிறைவு கொள்ளுமாறுல் மறித்தழிக்க (Rescind) போதுமான நியாய வரம்பினே உடையது என்பதனே பம்பாய் உயர்நீதிமன்றம் Jivraj v. Gagan Mal 35. Bom. L.R. 362 வழக்கில் தெளிவுபடுத்தியது.

மேலும் மாநகர்ச் சட்டம் 92ஆவது பிரிவில் கடனுளர் ஒருவரின் கோரிக்கை மனு தள்ளப்பட்டிருப்பினும், கடனுளியின் வேறு ஒரு கடனுளர் முன் கடனுளரிடத்தில் தன்னே அவருக்குப் பதிலாக இருத்தும்படி கோரி மனுச் செய்யலாம்.

### நடவடிக்கைகள் நிறுத்தம் (Stay of Proceedings)

மாநகர்ச் சட்டத்தின் 94ஆவது பிரிவில் வழக்கு மன்றம், எந்த நேரத்திலும், போதுமான காரணத்திற்காக, நொடிப்புநிலே கோரிக்கை நடவடிக்கையினே முழுவதுமாகவோ, குறிப்பிட்ட கால அளவிற்கோ, நீதிமன்றம் கருதுகின்ற முறைகள், நிபந்தனேகளுக் குட்படுத்தி, நிறுத்திவைத்து உத்திரவிடலாம். மாநில நொடிப்பு நிலேச் சட்டத்தில் அத்தகைய கட்டு வாசகம் காணமுடியவில்லே

பம்பாயில் முடிவான வழக்கான, Rustomji v. Madhaji, 34, Bom. L.R. 1436-ல் இவ் விதி பயன்படுத்தப்பட்டது.

**நீதித் தீர்ப்பாணைக்கு முன்னர் இடைக்கால நடவடிக்கைகள்**

**(1) இடைக்கால வழக்குறு சொத்துப்பேணுநர் நியமனம் செய்யும் நீதிமன்ற அதிகாரம்**

இடைக்கால வழக்குறு சொத்து பெறுநரை நியமிக்கும் அதிகாரம் நீதிமன்றத்தின் உளத்தேர்வுக் (Discretion) குட்பட்ட ஒன்றாகும். கோரிக்கை மனு அளித்த பின்னர், நீதித் தீர்ப்பாணை உத்தரவு பிறப்பிக்கு முன்னர் உள்ள இடைவெளியில் கடனாளியின் முதலைப் பாதுகாக்கவேண்டி இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட வேண்டும்.

மாநகர் நொடிப்புநிலைச் சட்டம் 16ஆவது பிரிவில், கடனாளியின் சொத்தினைப் பாதுகாக்கத் தேவை என்று தோன்றினால், நீதிமன்றம், சொத்தாட்சி அதிகாரியினை (Official Assignee) இடைக்கால வழக்குறு சொத்து பேணுநராக நியமித்து, அச் சொத்தினை உடனடியாகக் கையகப்படுத்த உத்தரவிடலாம். பின்னர், உரிமையியல் நடைமுறைச் சட்டம் Order 40-ன் கீழ் நியமிக்கப்பட்ட வழக்குறு சொத்து பேணுநருக்குள்ள அதிகாரங்கள் பெற்றவராக இந்த இடைக்கால அதிகாரி உள்ளாவார்.

(ii) மாநிலச் சட்டம் 20ஆவது பிரிவின்கீழ் இத்தகைய இடைக்கால அதிகாரியினை நியமிக்க வழக்குமன்றம் அதிகாரம் உடையது என்று கூறப்பட்டுள்ளது. கோரிக்கை மனு அனுமதிக்கும்போது இத்தகைய நியமனம் செய்யாவிடினும் பின்னரும் நீதித் தீர்ப்பாணை உத்திரவிடுவதற்கு முன்பாக எந்தச் சமயத்திலும் இத்தகைய நியமனம் செய்து உத்தரவிட வழக்குமன்றம் உரிமை உடையது.

**(2) கடனாளிக்கெதிரான இடைக்கால உத்தரவுகள்**

கோரிக்கை மனுவை அனுமதித்து உத்தரவிடுகின்றபோதோ நீதித் தீர்ப்பாணை உத்திரவிற்கு முன்னரோ, நீதி மன்றம் தானாகவோ (Motion) கடனாளர் ஒருவரின் மனு மீதோ கீழ்க்காணும் ஒன்று அல்லது மேற்பட்ட உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம்.

(i) கோரிக்கை மனுவின் மீது இறுதி உத்தரவு பிறப்பிக்கப்படும்வரை நீதிமன்றத்தில் முன்னிலைப்பட போதுமான பிணையம் தரச்சொல்லி கடனாளிக்கு நீதிமன்றம் உத்தரவிடும் அல்லது

பிணையம் தரத்தவறினுல், உரிமையியல் சிறையில் வைத்திருக்க வழக்குமன்றம் உத்தரவிடும்.

(ii) சட்டப்படி பற்றுகையினின்றும் விலக்களிக்கப்பட்டவை தவிர, ஏனைய கடனுளியின் கையகம் அல்லது ஆதிக்கத்திலுள்ள யாதொரு சொத்து முழுமையோ ஒரு பகுதியினையோ உண்மையில் கைப்பற்றுகை செய்ய பற்றுகை உத்தரவிடும்.

(iii) கடனுளியைக் கைது செய்ய பிணை அல்லது பிணையில்லா பிடியாணை (Warrant) வழங்க உத்தரவிட்டு, கோரிக்கை மனுமீது நீர்ப்பாகின்றவரையில் உரிமையியல் சிறையில் (Civil Prison) வைத்திருக்க அல்லது தேவையான அல்லது நியாயமன முறைகள் அடங்கிய பிணையத்தின் மீது விடுவிக்கும்படியோ ஆணையிடும்.

பகுதி (ii) அல்லது (iii)-ல் கூறப்பட்ட உத்தரவுகளை நீதிமன்றம் கடனுளியைப் பற்றி கீழ்க்காணுமாறு மனநிறைவு கொண்டாலன்றி உத்தரவிடலாகாது.

கடனுளரை மோசடி செய்யும் எண்ணத்துடன் அல்லது காலங்கடத்தவும், நீதிமன்ற நடவடிக்கைகளைத் தவிர்க்கவும், கடனுளியானவர்,

(அ) நீதிமன்ற நியாய வரம்பின் உள் எல்லைகளை விட்டுச் சென்றுவிட்டார் அல்லது மறைந்துவிட்டார் அல்லது அத்தகைய எல்லைகளை விட்டுச்செல்ல அல்லது மறைவு புரிய இருக்கிறுர் அல்லது அவைகளுக்கு வெளியே இருக்கிறுர்,

(ஆ) விசாரணையின்போது கடனுளர்களுக்குப் பயன்தரத்தக்க எத்தகைய ஆவணங்களையும் முன்னிலைப்படுத்த தவறினுல் அல்லது மறைத்தல் அல்லது அழித்தல் செய்திருக்கிறுர் அல்லது மறைக்க அல்லது அழிக்க முயற்சி செய்கிறுர் அல்லது அந்த எல்லைகளின்றும் மாற்ற இருக்கிறுர்.

(3) கடனுளியின் விடுதலை

கோரிக்கை மனுவை அனுமதிக்கின்றவேளையிலோ, அடுத்து வேறு சமயத்திலோ, நீதித் தீர்ப்பாணைக்கு முன்பாக, கடனுளி, பணம் செலுத்துதலுக்காக நீதிமன்றம் ஒன்றின் தீர்ப்பாணை காரணமாகக் கைதுசெய்யப்பட்டு சிறையிலிருப்பின், அன்னுரை, தேவையான அல்லது நியாயமான பிணையத்தின்மீது விடுவிக்க உத்தரவிடலாம். வழக்குமன்றம் அத்தகையவரை மீண்டும் கைது செய்து விடுவிக்கப்பட்ட சிறைக் காப்பிற்கு அனுப்பலாம். மாநிலச் சட்டம் 23ஆவது பிரிவில் அத்தகைய உத்தரவுகள் இடுவதற்கான

காரணங்களை நீதிமன்றம் எழுத்தில் கூறுதல்வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

**(4) கோரிக்கை மனு அனுமதித்தபின் கடனாளியின் கடமைகள்**

1. கடனாளி தன் கணக்குப் புத்தகங்களை முன்னிலைப்படுத்த வேண்டும்.

2. சொத்து விவரம், அன்னாரின் கடனாளர்கள், கடனாளிகள் பட்டியல், வரவேண்டிய, கொடுக்கவேண்டிய கடன்கள்பற்றிய பட்டியல் தருதல்வேண்டும்.

3. தன் சொத்து அல்லது கடனாளர்கள்பற்றிய எத்தகைய விசாரணைக்கும் உட்படுதல்வேண்டும்.

4. மாநிலச் சட்டம் 22ஆவது பிரிவில் நீதிமன்றம் கோறுகின்ற அல்லது விதிக்கப்பட்ட எத்தகைய செயல்களையும் புரியவேண்டும்.

**கோரிக்கை மனு விசாரணை நடவடிக்கை**

நொடிப்புநிலை கோரிக்கை மனுக்கள்மீதான விசாரணை நடவடிக்கைகளைப்பொறுத்தும் அதன்மீது உத்தரவிடுவதிலும் இரண்டு சட்டங்களிடையேயும் முக்கிய வேறுபாடு ஒன்று உண்டு.

மாநகர்கள் சட்டத்தில், கோரிக்கை மனு, விசாரணையின் போதோ, நீதித் தீர்ப்பாணை உத்தரவிடும்போதோ, கடனாளியின், நடத்தை (Conduct), நடவடிக்கைகள் (Dealings) சொத்துபற்றி விசாரிக்கப்படுவதில்லை. அத்தகைய விசாரணை நீதித்தீர்ப்பாணை உத்தரவிற்குப் பிறகே நடைபெறுகிறது. ஆனால் மாநகர்களுக்கு வெளியே, நீதித்தீர்ப்பாணைக்குமுன்பே, இத்தகைய விசாரணை நடைபெறுகிறது. இவ் வேறுபாட்டினைத்தவிர இதர நடவடிக்கைகள் இரு சட்டங்களிலும் பெரும்பாலும் ஒன்றே.

(i) கோரிக்கை மனு விசாரணைக்குக் குறிக்கப்பட்ட நாளிலோ, தள்ளிவைக்கப்படுகின்ற அடுத்த விசாரணை நாளிலோ நீதிமன்றம் கீழ்வரும் பொருள்கள்பற்றிய மெய்ப்பிப்பு கோரும்.

(அ) கடனாளர் அல்லது கடனாளி யாராயிருப்பினும் கோரிக்கை மனுவைக் கொடுப்பதற்குத் தகுதியுடையவர் என்பதற்கான மெய்ப்பிப்பு.

கடனாளி, கோரிக்கையாளராயிருப்பின், தன் கடன்களைக் கொடுக்க இயலாமைக் குறித்து நீதிமன்றம் மனநிறைவு கொள்ளும் அளவிற்கு, நீதிமன்றம் நம்பத்தகுந்த மேலோட்டமான காரணங்களைத் தெரிவித்தால் போதுமானது. மேற்

கொண்டு வேறு சாட்சிகளை நீதிமன்றம் விசாரணை செய்ய கடமைப்பட்டதாகாது.

(ஆ) கடனுளர் கொடுத்த கோரிக்கைமீது கடனுளி முன்னிலையாகாதபோது, அன்னாருக்குக் கோரிக்கை மனு அனுமதிக்கப்பட்ட உத்தரவு சார்பு (served) செய்யப்பட்டது என்பது பற்றிய மெய்ப்பிப்பு.

(இ) கடனுளி, அன்னாருக்கெதிராகப் புகார் செய்யப்பட்ட நொடிப்புநிலை ஆக்குவினைச் செயல் புரிந்துள்ளார் என்பதற்கான மெய்ப்பிப்பு.

(ii) மாநிலச் சட்டத்தில், கடனுளியை, அன்னாரின் நடத்தை, நடவடிக்கைகள், சொத்துபற்றி கடனுளிகள் முன்னிலையில் வழக்கு மன்றம் விசாரிக்கும். கடனுளியை அதைப்பற்றிக் கேள்வி கேட்கும் உரிமை கடனுளருக்கு உண்டு.

(iii) கோரிக்கை மனுமீது முறையான முடிவுக்கு வரத் தகுந்த காரணம் காண்பிக்கப்படுமாயின், கடனுளி அல்லது கடனுளர் போதுமானதான சான்று காண்பிக்க அவர்கட்கு அந் நீதிமன்றம் அவகாசம் வழங்கும்.

**கோரிக்கை மனு தள்ளப்படுதல் (Dismissal)**

**(1) கடனுளரின் கோரிக்கை**

(அ) கோரிக்கை மனு சமர்ப்பிக்கக் கடனுளரின் உரிமைக்குப் போதுமான ஆதாரம் இல்லையென்றோ (அல்லது)

(ஆ) கடனுளிக்கு, நொடிப்புநிலை ஆக்குவினைச் செயலுக்கான குற்றச்சாட்டு அல்லது கோரிக்கை மனுவை அனுமதித்து உத்தரவு அளித்ததற்கான அறிவிப்பைச் சார்வு (Service) செய்தது பற்றியோ வழக்கு மன்றம் உளநிறைவு கொள்ளாதபோதோ அல்லது

(இ) கடன்களைச் செலுத்த இயலும் என்று கடனுளி வழக்கு மன்றத்தின் உளநிறைவு கொள்ளச் செய்யும்போதோ அல்லது

(ஈ) உத்தரவு ஒன்று இடுவதற்குத் தகுந்த காரணங்கள் இல்லாத நிலையிலோ,

கடனுளரின் கோரிக்கை மனு தள்ளுபடி செய்யப்படும்.

**கடனுளரின் கோரிக்கை**

கடனுளியின், கோரிக்கை மனு கொடுக்கும் உரிமைபற்றி வழக்கு மன்றம் மனநிறைவு கொள்ளவில்லையெனின் அன்னாரின்

மனு தள்ளுபடி செய்யப்படும் என்று மாநில நொடிப்புநிலைச் சட்டத்தில் 25ஆவது பிரிவில் கூறப்பட்டுள்ளது.

கோரிக்கை மனு தள்ளுபடி செய்யாமல், நொடிப்புநிலை நடவடிக்கைகளை நிறுத்திவைத்தல்

1. கடனாளி, கோரிக்கை மனுவின்மீது முன்னிலையாகி

(அ) கோரிக்கை கடனாளருக்குத்தான் ஏதும் கடன்படவில்லை என்றோ, (அல்லது)

(ஆ) கோரிக்கை மனு சமர்ப்பிக்க தகுந்த அளவிற்கான தொகைக்குத்தான் கடன்படவில்லை என்றோ அறுதியிட்டு உறுதியளிப்பாரானால் நொடிப்புநிலை நடவடிக்கைகளை, மொத்தமாகவோ, குறிப்பிட்ட காலவரையிலோ வழக்குமன்றம் தகுந்தது எனக் கருதி விதிக்கின்ற நிபந்தனையின் கட்டுதிட்டங்களுக்குட்படுத்தியோ, நீதிமன்றம் நிறுத்திவைக்கும் என்று மாநகர் நொடிப்புநிலைச் சட்டம் நவில்கின்றது. இத்தகைய கட்டு வாசகம் மாநில நொடிப்புநிலைச் சட்டத்தில் காணப்படவில்லை.

இயல் 5

# நீதித் தீர்ப்பாணை உத்தரவும் அதன் விளைவுகளும்

## (Order of Adjudication and its Effect)

கடனாளி ஒருவரை, நொடிப்புநிலையர் என அறிவித்தோ தீர்ப்பிற்குள்ளாக்கியோ நீதிமன்றம் வெளியிடும் ஆணை நீதித் தீர்ப்பாணை என்று கூறப்படுகிறது. இது கடனாளியால் அல்லது அவருக்கெதிராக அளிக்கப்பட்ட கோரிக்கை மனுமீது நீதிமன்றம், கடனாளி கடன்களைத் திருப்பிச் செலுத்த முடியாதவர் எனச் சட்டமுறையில் நிர்மாணிக்கப்பட்ட ஆணையாகும். நீதிமன்றம், கோரிக்கை மனுவினைத் தள்ளுபடி செய்யாமல் போதுமான ஆதாரங்களை வைத்து மனநிறைவு கொள்ளுமானால் நீதித் தீர்ப்பாணை உத்தரவிடும். அத்தகைய உத்தரவில் விடுப்பு (Discharge) மனுச் செய்ய வேண்டிய கால வரம்பு குறிப்பிடப்படும். இத்தகைய நீதித் தீர்ப்பாணை பற்றிய அறிவிப்பு, நொடிப்புநிலையரின் பெயர், முகவரி, ஏனைய விவரங்கள், நீதித் தீர்ப்பாணை நாள், ஆணையிட்ட வழக்கு மன்றம் முதலான விவரங்கள் அடங்கிய அறிவிப்பானது மாநகர் நொடிப்பநிலைச் சட்டத்தின்கீழ், இந்திய அரசு அலுவலக இதழ் (Gazette of India), மாநில அரசு அலுவலக இதழ்களிலும் (Provincial Gazette) குறிப்பிட்ட வழி முறைகளிலும் மாநில நொடிப்புச் சட்டத்தின்கீழ், மாநில அரசு அலுவல் இதழிலும் வேறு குறிப்பிட்ட வழிமுறைகளிலும் வெளியிடப்படும் நீதித் தீர்ப்பாணை உத்தரவு பற்றி மாநகர் சட்டம் 10ஆவது பிரிவிலும், மாநிலச் சட்டத்தின் 7ஆவது பிரிவிலும் கூறப்பட்டுள்ளது. அவ்வாணையின் விளைவுபற்றி தலைநகர் சட்டத்தின் 17ஆவது பிரிவும், மாநிலச் சட்டத்தின் 28ஆவது பிரிவும் விளக்குகின்றன. புதிதாக இயற்றப்பட்ட 28ஆம் பிரிவும் இதைப் பற்றிக் கூறுகின்றது.

**நீதித் தீர்ப்பாணையின் விளைவு**

நீதித் தீர்ப்பாணை உத்தரவிடப்பட்டதும், நொடிப்புநிலை நடவடிக்கைகள் புதிய கட்டத்தை அடைகின்றன. கடனளிக்கும் கோரிக்கை கடனாளருக்கும் இடையில் இருந்து வந்த நடவடிக்கைகளில், நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர், அரசு (State) சொத்தாட்சி அதிகாரி (Official Assigned or receiver)யின் மூலம் பிரதிநிதித்துவம் பெறுகிறது.

நீதித் தீர்ப்பாணை உத்தரவினால் கீழ்க்காணும் விளைவுகள் ஏற்படும்.

**(1) சொத்தாட்சி அதிகாரியின் கீழ்ச் சொத்து வருகை**

நொடிப்புநிலையரின் சொத்து எங்கிருப்பினும் மாநகர்ச் சட்டத்தின்கீழ் சொத்தாட்சி அதிகாரியினிடம் மாநிலச் சட்டத்தின்கீழ் நீதிமன்றத்தின் அல்லது சொத்துப் பேணுநரின் ஆளுகைக்கும் உட்படும். Official Assignee, Bombay v Registrar, Small Causes 37.1.A 86 என்ற வழக்கில் நொடிப்புநிலையரின் இந்தியாவில் உள்ள அனைத்துச் சொத்துகளும், அசையும் பொருள் அல்லது அசையாப் பொருள் அனைத்தும், நீதித் தீர்ப்பாணையினால் இயல் சட்டத்தின் மாற்றமாக (Statutory transfer) சொத்தாட்சி அதிகாரிக்கு மாறுகிறது. (Yokohama Special Bank v. Curlenders & Co., 43, Cal. L.J. 436) என்ற வழக்கில், நொடிப்புநிலையரின் அயல்நாட்டுச் சொத்துகளைப் பொறுத்தவரை அசையும் சொத்துகள் சொத்தாட்சி அதிகாரியிடம் மாறும் என்றும், அசையாச் சொத்துகள், அயல்நாட்டுச் சட்டம் அனுமதித்தாலொழிய, அவ்வாறு மாற்றம் பெறாது; என்றும் கூறப்பட்டுள்ளது. அசையும் சொத்துகள் மாற்றமானது 'Mobilia Sequentur Personam (i.e). Movables follow the person அசையும் பொருள்கள் நபரைப் பின்தொடருகின்றன என்ற கொள்கையின் அடிப்படையில் ஏற்படுகின்றது. மேலும் அவை குடியுரிமைச் சட்டத்தின் ஆளுகைக்குட்பட்டது.

மாநகர்ச் சட்டத்தின் 33ஆவது பிரிவின் கீழும், மாநிலச் சட்டத்தின் 22ஆவது பிரிவின் கீழும் சொத்தாட்சி அதிகாரி நொடிப்புநிலையரை, அயல் நாட்டிலுள்ள அன்னாரின் எத்தகைய தொரு சொத்தையும் தனக்கு மாற்றம் செய்யச் சொல்லி கோரலாம். பின்னர் அத்தகைய அயல்நாட்டின் நீதிமன்றங்கள் அத்தகைய மாற்றத்தைச் சட்ட ரீதியாகக் கோரும் உரிமை படைத்தவராகச் சொத்தாட்சி அதிகாரி ஆகிறார். நொடிப்புநிலையர் அத்தகைய கோரிக்கையினை அவமதித்தால் அன்னார்மீது நீதிமன்றத்தினை அவமதித்ததாக நடவடிக்கை எடுக்கமுடியும்.

சொத்தாட்சி அதிகாரிக்கு மாற்றப்பட்டு கடனாளர்களிடையே பகிர்ந்தளிக்கப்படும் சொத்துகள் எவை என்பதுபற்றி மாநகர்ச் சட்டம் 52ஆவது பிரிவு (2)லும் மாநிலச் சட்டம் 28ஆவது பிரிவு (4) லும் (5)லும் கூறப்பட்டு, இந்து பொது குடும்பத்தின் தந்தை ஒருவர் நொடிப்புநிலைக்குள்ளானால் கூட்டுக் குடும்பச் சொத்தில் மகனுடைய நலன் எப்படி பாதிக்கப்படுகிறது என்பதனையும் விளக்கப்பட்டுள்ளது.

Jubi'ee Bank v. Santimoyee Delu A.I.R (1950) Cal. 487 வழக்கில், தன் நலனுக்காக அச்சமயம் தான் வினியோகம் செய்யக் கூடிய சொத்து மட்டுமே சொத்தாகச் சேர்த்துக்கொள்ளப்படும் என்று கூறப்பட்டுள்ளது.

(2) நொடிப்பு நிலையருக்கெதிரான நடவடிக்கைகள் நிறுத்தம்

தீர்ப்பாணைக்குப் பிறகு, நொடிப்புநிலை நடவடிக்கைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது, கடனாளர்கள் நொடிப்புநிலையின் கீழ் நிரூபிக்கப்படும் கடன் பொருட்டு எத்தகைய வழக்கோ அல்லது சட்டப்படியான நடவடிக்கைகளோ அல்லது வேறு எத்தகைய தீர்வுகளோ நொடிப்புநிலையருக்கெதிராகத் தொடங்க முடியாது. அவ்விதம் அவர்கள் செய்யவிரும்பினால் நீதிமன்றத்தின் அனுமதியை முன்கூட்டிப்பெறவேண்டும். நீதித் தீர்ப்பாணைபற்றி அறியாமலே வழக்குத் தொடர்ந்திருப்பினும் அதன் பின்னர் அத்தகைய அனுமதியைப் பெறமுடியாது.

(3) பிணையக் கடனாளரை நீதித் தீர்ப்பாணை பாதிப்பதில்லை

பிணையக் கடனாளர், கடனாளியிடமிருந்து பெறவேண்டிய கடனுக்குப் பிணையாகத் தன் சொத்தினை அடைமானமாக (Charge or lien) உடையராவர் என்பதனை Krishnachinoo v. Moti Bai. 31 Bom. L.R. 35 விளக்குகிறது. நீதித் தீர்ப்பாணையினால் சொத்தாட்சி அதிகாரியிடம் நொடிப்புநிலையரின் சொத்து மாற்றம் பெற்று கடனாளர், கடனாளிக்கு எதிராக அல்லது அவரது சொத்துக்கெதிராக எந்த நடவடிக்கையும் எடுக்க முடியாது என்று முன்னர் கண்டோம். ஆனால் மாநகர்ச் சட்டம் 17ஆவது பிரிவிலும், மாநிலச்சட்டம் 28ஆவது பிரிவிலும் காணப்படுகின்ற கட்டுவாசகம் பிணையக் கடனாளரைப் பொறுத்தமட்டும் பொருந்தா. பிணையத்தினின்றும் தன் தொகையை மீட்டுப் பெறவோ பிணையத்தை வேறு வழிகளில் நடைமுறைக்குட்படுத்தவோ, பிணையக்கடனாளரை நீதித் தீர்ப்பாணை பாதிக்காது. நொடிப்புநிலையரின் சொத்தினை அடைமானமாகப் பெற்றுள்ள ஒருவர், தனக்குள்ள விற்பனை அதிகாரத்தைப் பயன்படுத்தி அடை

மான சொத்தினை விற்க முற்படும்போது வழக்குமன்றம் அதனை நிறுத்தி வைக்கும் அதிகாரம் கொண்டதாகாது.

### (4) சொத்துரிமை அடிப்படையில் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் மீதான விளைவு (Effect on Transactions)

நீதித் தீர்ப்பாணை உத்தரவினால் தன் கடனாளரைக் கட்டுப்படுத்துகின்ற அளவிற்கான எத்தகைய சொத்துரிமை பற்றி கடனாளி மேற்கொள்ளும் நடவடிக்கைகள் தடுக்கப்படுகின்றன. நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர், சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநர் மட்டுமே, நொடிப்புநிலையரின் சொத்தினைப் பொறுத்து அதனை கட்டுப்படுத்தவோ வாங்குபவருக்கு உரிமை மூலம் (title) கொடுக்கவோ முடியும். எனவே, நீதித் தீர்ப்பாணைக்குப் பிறகு தன் சொத்தினை கட்டுப்படுத்திக்கொள்கின்ற உடன்பாடு சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநருக்கெதிராக இல்லா நிலையதாகும். எனவே, பணம் செலுத்தவேண்டிய ஒருவர், நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர், நொடிப்புநிலையருக்கு நீதித் தீர்ப்பாணைக்கு முன்னர் ஏற்பட்ட உடன்பாட்டின் நிறைவேற்றம் காரணமாகப் பணம் செலுத்திடின், மீண்டும் சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநருக்கு அத்தொகையினைச் செலுத்தவேண்டும். நீதித்தீர்ப்பாணை பற்றிய உத்தரவு பற்றி அறியாதிருப்பினும் அவ்விதம் பணம் செலுத்துதலுக்குக் கடமைப்பட்டவராவார். அவ்விதம் பணம் செலுத்த வேண்டியவரிடமிருந்து நீதித் தீர்ப்பாணை பற்றி மறைத்து நொடிப்புநிலையர் வழக்குத்தொடர்ந்து (Decree) தீர்ப்பாணை பெற்றிருப்பினும், அத்தகைய (Decree) பயனற்றதும், பணம் செலுத்துபவருக்கு எதிராகச் செயல்படுத்த முடியாத ஒன்றாகவும் இருக்கும்.

### (5) நொடிப்புநிலையரின் தகுதியிழப்பு (Disqualifications of Insolvent)

நொடிப்புநிலையர் ஒருவர், அதனின்றும் விடுப்பு அடைகின்றவரை பல்வகையான தகுதியிழப்புகள் அடைந்த நிலையில் உள்ளார். சில அலுவலகங்களின் அலுவல்களைத் தொடர்ந்து ஏற்க அருகதையற்றவராகிறார். இரண்டு சட்டங்களிலும், கடனாளி ஒருவர், நொடிப்புநிலையராகத் தீர்ப்புக்குள்ளானால் குற்றநடுவர் (Magistrate) ஆக நியமனம் பெற அல்லது இருந்துவர, உள்ளாட்சித்துறைகளுக்கு, எந்த ஒரு பதவிக்கும் தேர்ந்தெடுக்க, அல்லது தேர்தலில் போட்டியிட அல்லது உறுப்பினராக இருந்து வாக்களிக்க தகுதி இழக்கிறார் என்று வகை செய்யப்பட்டுள்ளது. இந்திய பொறுப்படைச் (Indian Trusts Act) சட்டத்தின்படி

அத்தகையவர் பொறுப்பாளராக (Trustsee) இருக்கவும் தகுதி யிழக்கின்றார். இவைகளே அன்றி மேலும் 1956ஆம் ஆண்டு நிறுவனங்கள் சட்டத்தின் (Companis Act) நொடிப்புநிலையர் ஒருவர் நிறுவனத்தின் இயக்குநராகவோ மேலாண்மை முதல் வராகவோ (Managing Agent) இருக்கக் இயலாது என்று வரை யறுக்கப்பட்டுள்ளது.

இத்தகைய தகுதியிழப்புகள், நீதித் தீர்ப்பாணை ரத்து (annulled) ஆனாலும் அல்லது நொடிப்புநிலையர் நீதிமன்றத்திடம் விடுப்பு உத்தரவு ஒன்றினை முழுமையாகவோ, சில நிபந்தனை களுடனோ, அன்னாரின், நொடிப்புநிலை அவருடைய தவறான நடத்தையினால் ஏற்பட்ட ஒன்றன்று; துரதிருஷ்டத்தால் (Misfortune) உண்டானது என்பதற்கான சான்றிதழைப்பெற்றிடின் ரத்தாகிவிடும் (cease). அத்தகைய சான்றிதழ் வழங்குவது நீதி மன்றத்தின் உளத்தேர்வுக்குட்பட்டது (discretionary).

இயல் 6

# நீதித் தீர்ப்பாணையினுல் ஏற்படும் நடவடிக்கைகள்

## (Proceedings Consequent on an order of Adjudication)

**(1) நொடிப்புநிலையர் தரும் பட்டியல் (Insolvents Schedule)**

மாநகர் சட்டத்தின்கீழ் நொடிப்புநிலையரின் பொருளாதார நிலையினை அட்டவணைப்படுத்தி வாக்குமூலமாக உள்ள ஒன்றினைப் பட்டியல் (schedule) என்றழைக்கப்படுகிறது. கடனுளிக்கெதிராக நீதித் தீர்ப்பாணை உத்தரவு இட்ட பின்னர், நிர்ணயிக்கப்பட்டுள்ள படிவத்தில் (form) அன்னுரின் நடவடிக்கைகளைப் பொறுத்த தகவல்களை அடக்கி, கடனுளி வழக்கு மன்றத்திடம் மெய்ப்பிக்கப் பட்ட பட்டியலை தாக்கல் செய்யவேண்டும். கடனுளியின் கோரிக்கை மனுமீது ஆணையிட்டிருப்பின், அத்தகைய ஆணை சார்வு (serve) ஆன நாளிலிருந்து 30 நாட்களுக்குள்ளும், பட்டியல் அளிக்கப்படவேண்டும். மேலும் 'குறைபட்டியல்' (deficiency statement) ஒன்றும் அதனுடன் இணைக்கப்பட்டு, அதில் தன் பொறுப்புகளைவிட (liabilities) சொத்துகள் குறைந் திருப்பது எப்படியாயிற்று என்பதனையும் விளக்கியிருக்கவேண்டும். நியாயமான காரணங்களின்றி, நொடிப்புநிலையர் ஒருவர் மேற் சொன்ன தேவைகளைப் பூர்த்தி செய்யாவிடின், சொத்தாட்சி அதிகாரி அல்லது கடனுளர் ஒறுவர், செய்துகொள்ளும் மனுமீது நீதிமன்றம், அன்னுரை சிறையிலடைத்தும், அன்னுரின் சொத்தின் செலவில், நிர்ணயிக்கப்பட்டுள்ள வரைமுறைகளுக்குட்பட்ட விதத்தில் பட்டியல் ஒன்றினைச் சொத்தாட்சி அதிகாரியினைத் தயாரிக்கும்படியும், உத்தரவிடலாம். இத்தகைய வாசகம் நொடிப்புநிலை மாநிலச் சட்டத்தில் இல்லை.

(2) காப்பு உத்தரவு (Protection order)

நொடிப்பு நிலையர் ஒருவரைக் கைதுசெய்ய அல்லது சிறையி லடைக்கச் செய்வதனின்றும்காத்து நீதிமன்றம் இடும் உத்தர வினைக் காப்பு உத்தரவு என்று கூறப்படுகிறது. பட்டியலைக் கொடுத்துவிட்ட நொடிப்புநிலையர் ஒருவர், காப்பு உத்தரவு வேண்டி நீதிமன்றத்திற்கு மனுச்செய்யலாம். நீதிமன்றம், அம் மனுவின்மீது காப்பு உத்தரவிடலாம். கடனுக்காகக் கைது செய்யப்படுவது அல்லது சிறையிலடைக்கப்படுவதனின்றும் நொடிப்புநிலையரை இத்தகைய உத்தரவு தடுக்கின்றது. அன்னார் சிறையிலடைக்கப்பட்டிருப்பினும் அல்லது கைதுசெய்யப்பட்டிருப் பினும் அன்னாரை விடுவிக்க உத்தரவிடப்படலாம். நிரூபிக்கப் படுகின்ற கடன்களைப்பொறுத்தே இவ்வுத்தரவு செல்லும். இந்திய அரசுக்குச் சேரவேண்டிய கடன்களைப்பொறுத்து காப்பு வழங்க இயலாது. நொடிப்புநிலையர் ஒருவர், வேண்டுமென்றே தன்மீது சுமத்தப்பட்ட கடப்பாடுகளைத் தவிர்க்கும் முகத்தான் மறைந்து வாழ்ந்திடின் அதுபற்றி வழக்குமன்றம் மனநிறைவு கொண்டிடின், அன்னாரைக் கைதுசெய்ய நீதிமன்றம் உத்தரவிட லாம். எந்த ஒரு கடனாளரும் நீதிமன்றத்தில் முன்னிலையாகி, காப்பு உத்தரவு வழங்கப்படுவதற்கு எதிர்ப்புத்தெரிவிக்க உரிமை படைத்தவராக உள்ளார். ஆயினும் சொத்தாட்சி அதிகாரியிட மிருந்து, நொடிப்புநிலைச் சட்டத்தின் தேவைகளுக்கேற்ப இதுவரை நொடிப்புநிலையர் நடந்துகொண்டுள்ளார் என்பதற் கான சான்றிதழைக்கொண்டுவந்து அளிக்கும் நொடிப்புநிலையர் காப்பு உத்தரவு பெற்றிட முதல் தோற்றத்திலேயே (Prima Facie) உரிமைப்படைத்தவராக இருக்கின்றார். காப்பு உத்தரவினை வழங்குவதும் நிராகரிப்பதும் வழக்குமன்றத்தின் உளத்தேர்வுக் குட்பட்டது.

(3) கடனாளர்களின் கூட்டங்கள் (Meettings of the creditors)

நீதித்தீர்ப்பாணை உத்தரவிட்டபின்னர், எந்தச் சமயத்திலும், கடனாளர் ஒருவர் அல்லது சொத்தாட்சி அதிகாரியின் மனுவின்மீது நீதிமன்றம், நொடிப்புநிலையின் சூழ்நிலைகளைக் கருதவும், பொதுவாக நொடிப்புநிலையரின் சொத்தினைப் பொறுத்து நடவடிக்கையினை மேற்கொள்ளவும் கடனாளர்களின் கூட்டம் ஒன்றை நடத்த ஆணையிடலாம். சட்டத்தின் பட்டியல் I-ல் கடனாளர்களின் கூட்டங்களுக்கான வழிமுறைகள் காணப்படு கின்றன.

(அ) கடனாளர்களின் கூட்டம் ஒன்றினைச் சொத்தாட்சி அதிகாரி, எந்த நேரத்திலும் கூட்டலாம். வழக்குமன்றம் உத்திர

விட்டாலோ கடனுளர்கள் கூட்டம் ஒன்றில் தீர்மானம் ஒன்றினை நிறைவேற்றிக் கோரினுளோ நான்கில் ஒரு பங்கு கடன் நிரூபித்த கடனுளர்கள் எழுத்து மூலம் கோரினுலோ சொத்தாட்சி அதிகாரி அத்தகைய கூட்டம் கூட்டுவதற்குக் கடமைபட்டவராகின்முர்.

(ஆ) கூட்ட அறிவிப்பினை அஞ்சல் மூலமாக அல்லது சொத்தாட்சி அதிகாரியின் உசிதம்போலச் செய்து கூட்டம் கூட்டப்படும். அதிகாரி தேவை என்று கருதினுல் உள்ளூர் செய்தித்தாள்களிலோ உள்ளூர் அரசாங்க இதழ் (gazette) மூலமாகவோ அத்தகைய அறிவிப்பினைத் தெரிவிக்கலாம்.

(இ) ஏழு நாட்கள் முன்னர் அறிவிப்பு வெளியாக வேண்டும். நொடிப்புநிலையர் அத்தகைய கூட்டத்திற்கு வர வேண்டுவது அவசியம் என்று சொத்தாட்சி அதிகாரி கோரினுல் அன்னுர் அவசியம் வரவேண்டிய கடப்பாட்டில் உள்ளார்.

(ஈ) அறிவிப்புகள் செய்தாகிவிட்டன என்று சொத்தாட்சி அதிகாரி சான்றிதழ் தருவாரேயானுல் அதுவே சாட்சியத்திற்குப் போதுமானதாகும். பின்னர் அத்தகைய கூட்டத்தின் நடைமுறைகளும், தீர்மானங்களும், அறிவிப்புப் பெருத கடனுளரையும் கட்டுப்படுத்தும்.

(உ) சொத்தாட்சி அதிகாரி அத்தகைய கூட்டங்களில் தலைமை வகிப்பார். சொத்தாட்சி அதிகாரி கூட்டத்தைத் தள்ளி வைக்கலாம். அதற்கான அறிவிப்பு தேவையில்லை.

(ஊ) கூட்டத்தின் நடவடிக்கைகளை எழுதிச் சொத்தாட்சி அதிகாரி கையெழுத்திடவேண்டும்.

### வாக்கெடுப்பு (Voting)

தன் கடனை நிரூபிக்கவில்லையாயின், கடனுளர் ஒருவர் வாக்களிக்க அருகதையற்றவராகிறுர். கூட்டத்திற்கு ஒருநாள் முன்னராவது அதற்கான (நிரூபித்த கடனுளர்) நிரூபணம் வைத்தாகவேண்டும். கடனுளர் ஒருவர் நேரிலோ பிரதிநிதி மற்றவர் மூலமாகவோ (Proxy) வாக்களிக்கலாம். ஆயினும், பம்பாய் நொடிப்புநிலைச் சட்டம் 146ஆவது பிரிவில் இளவர்கள் (Minors) வாக்களிக்க முடியாது என்று கூறப்பட்டுள்ளது. கூட்டத்திற்கு ஒரு முழுநாள் முன்னதாக பிரதிநிதித்துவமளிக்கும் பத்திரம் (Proxy) சொத்தாட்சி அதிகாரியிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்.

### (4) நொடிப்பு நிலையரின் பொது விசாரணை (Public Examination of Inso vent)

நீதித் தீர்ப்பாணை வழங்கிடும் நீதிமன்றம், நொடிப்புநிலையரை விசாரிக்கும் பொருட்டு நீதிமன்றத்தால் குறிப்பிட்ட நாளில் பொது விசாரணை செய்யும். இது குறித்து குறிப்பிட்ட முறையில் கடனாளர்களுக்கு அறிவிப்பினைச் செய்யும். நொடிப்புநிலையர், அக்கூட்டத்திற்கு வருகைதர வேண்டும். அன்னாரின் நடத்தை, நடவடிக்கைகள், சொத்து முதலானவற்றைப்பற்றி அவர் விசாரிக்கப்படுவார். பட்டியல் தாக்கல் செய்யப்படவேண்டிய கால வரம்பினுக்குப் பின்னர் வசதியான எந்த ஒரு நாளிலும் அந்த விசாரணை வைக்கப்படும். எந்த ஒரு கடனாளரோ அன்னாருக்காகச் சட்டப்பயிற்சியாளரோ, நொடிப்புநிலையரின் நடவடிக்கைகள், அன்னாரின் கடன் செலுத்த இயலாமைக்கான காரணங்கள் முதலானவை குறித்து விசாரிக்கலாம். சொத்தாட்சி அதிகாரி அத்தகைய பொது விசாரணையில் கலந்து கொள்ளவேண்டும். அதன் பொருட்டு வழக்குமன்றத்தின் உத்தரவிற்கிணங்க சட்டப்பிரதிநிதி மூலமும் முன்னிலையாகலாம். நீதிமன்றம் தேவை எனக் கருதுகின்ற கேள்விகளை நொடிப்புநிலையரிடம் கேட்கும். நொடிப்புநிலையர் அனைத்திற்கும் பதிலளிக்கவேண்டும். பிரமாணத்தின்கீழ் அன்னார் விசாரிக்கப்படுவார். விசாரணையின் குறிப்புகள் எழுதிப்படிக்கப்பட்டு அன்னாரின் கையெழுத்தும் பெறப்படும். பின்னர் அவை அவருக்கெதிராகச் சாட்சியத்திற்குப் பயன்படுத்தப்படும். மேலும் தேவையான காலங்களில் கடனாளர்கள் பார்வையிட வைக்கப்படும். நொடிப்புநிலையரின் நடவடிக்கைகள் குறித்து போதுமான அளவுக்கு ஆராயப்பட்டு விட்டது என்று வழக்குமன்றம் கருதுமானால் பொது விசாரணை முடிந்து விட்டதாக அறிவித்துவிடும். ஆயினும், அத்தகைய உத்தரவு, தேவையென்று வழக்குமன்றம் கருதுமானால் நொடிப்புநிலையரை மேலும் விசாரிக்கத் தடையாக இருக்காது.

நொடிப்புநிலையர், பித்துநிலையராயினும், அல்லது பொது விசாரணைக்கு வருகைதர இயலாத அளவிற்கான மனநோயோ உடல்நோயே உடையவராக உள்ளார் என வழக்குமன்றம் கருதுமானால் அல்லது பொது இடத்தில் முன்னிலையராக ஒரு பெண்ணாக இருந்தாலும், பொது விசாரணையைத் தள்ளுபடிசெய்தோ நீதிமன்றம் எந்த ஒரு சமயத்தில், அல்லது இடத்தில் அவ்வாறு செய்ய முடியும் எனக் கருதுகின்றதோ, அதற்கேற்றார்போல்:உத்தரவிடும். நொடிப்புநிலையர் முன்சொன்னவற்றுள் எதையேனும் பின்பற்றாவிடின், நீதிமன்றம் பொது விசாரணையைக் கால அளவு குறிப்பிடாமல் ஒத்திவைத்து வழக்குமன்றத்திற்கு நியாயம், அல்லது

மேற்கொண்டு உகந்தது என்று கருதுகின்றன உத்தரவினைப் பிறப்பிக்கும், பொது விசாரணையைத் தள்ளிவைக்கக்கோரும் மனுவினைச் சொத்தாட்சி அதிகாரியோ நொடிப்புநிலையரின் நடவடிக்கைகளைக் கவனிக்க வழக்குமன்றத்தால் நியமிக்கப்பட்ட ஒருவரோ, வழக்குமன்றத்தால் தகுதியானவர் என்று கருதப் படும் நொடிப்புநிலையரின் பிரதிநிதியோ, நண்பர் ஒருவரோ உறவினர் ஒருவரோ அளிக்கலாம்.

பிரிவு 27-ல் கூறப்பட்டுள்ள இந்தப் பொது விசாரணைக்கும் (Public Examination) பிரிவு 36-ல் கூறப்பட்டுள்ள தனி விசாரணைக்கும் (Private Examination) உள்ள வேறுபாட்டினைக் கூர்ந்து நோக்குதல் அவசியம். நொடிப்புநிலையரின், 'சொத்து, நடத்தை, நடவடிக்கைகள், குறித்துப் பொது மக்களின் தன்மை பற்றி விசாரித்தறிவது.

Re Paget (1927) 2. Ch. 85. என்ற ஆங்கில வழக்கில் கூறியுள்ளபடி கடனுளர்களின் சார்பில் கடன்களை வசூலிப்பது மட்டுமோ எந்த அளவு தொகை கடனுளருக்குக் கிடைக்கலாம் என்பது மட்டுமோ பொது விசாரணையின் நோக்கமாகக் கருதாமல் பொது மக்களின் பாதுகாப்பை முன்னிட்டும் பொதுவிசாரணை அவசியமாகின்றது.

இத்தகைய விசாரணையில் நொடிப்புநிலையர் தருகின்ற பதில்கள் அன்னுரைத்தவிர ஏனையோரைக் கட்டுப்படுத்தாது.

Gnanendra Bala Devi v. Official Assignee of Calcutta 30. C. W. N. 346 என்ற வழக்கில் மூன்றும் நபருக்கெதிராக நொடிப்புநிலையரின் பொது விசாரணைகள் பதில்கள் பயன்படுத்த முடியாது என்று தெளிவாக்கப்பட்டுள்ளது. நொடிப்புநிலையரின் விடுப்பு மனுவின்மீதான விசாரணையின்போது அவருக்கெதிராக அன்னுரின் பதில்கள் பயன்படுத்தப்படலாம்.

தனி விசாரணை (Private Examination)

1. மாநகர்ச் சட்டத்தின் 36ஆவது பிரிவின்படி, சொத்தாட்சி அதிகாரி அல்லது நிரூபிக்கப்பட்ட கடனுளர் எவரேனும் செய்கின்ற மனுவின்மீது, நொடிப்புநிலையரையோ நபர் ஒருவர் நொடிப்புநிலையரின் சொத்தினைத் தன் வசப்படுத்தி இருப்பதாக அறிந்திருந்தாலும் அல்லது சந்தேகப்பட்டாலும் அன்னுரையோ, நொடிப்புநிலையருக்குக் கடமைப்பட்டவராகக் கருதப்படுபவரையோ நொடிப்புநிலையரின் நடவடிக்கைகள் அல்லது சொத்தினைப் பொறுத்து தகவல் தரக்கூடியவர் என்று நீதிமன்றம்

தீர்மானிக்கக்கூடியவரையோ, முறைமன்றம் வர உத்தரவிடும் (Summon).

2. அன்னுரின் பொறுப்பில் அல்லது ஆதிக்கத்தில் உள்ள நொடிப்பு நிலையரின் நடவடிக்கைகள் அல்லது சொத்து சம்பந்தமான எத்தகைய ஒரு ஆவணத்தையும் (Document) தன்னிடம் தாக்கல் செய்ய நீதிமன்றம் மேவும்.

3. அன்னுர் நீதி மன்றத்திற்கு வருகை தருவதற்கு நியாயமான கட்டணம் கட்டப்பட்டபின்னர் நீதிமன்றம் குறித்த நாளில் வருகைதர அல்லது நீதிமன்றத்தால் அனுமதிக்கப்பட்ட சட்டப்படியான மன்னிப்பன்றி எத்தகைய ஒரு தாக்கீதினைச் சமர்ப்பிக்க மறுத்தாலும், அன்னுரை பிடியாணை மூலம் கைது செய்து தன் முன் கொண்டுவர நீதிமன்றம் உத்தரவிடும்.

4. அன்னுரை, நொடிப்புநிலையரின் நடவடிக்கைகள், சொத்துபற்றி நீதிமன்றம் விசாரிக்கலாம். அன்னுர், சட்டப் பயிற்சியாளர் மூலமாகவும் தான் கூறவேண்டியதை முன்னிலைப் படுத்தலாம்.

5. அத்தகைய விசாரணையில், நொடிப்புநிலையருக்குத் தான் கடமைப்பட்டவர் என்பதை ஒப்புக்கொண்டால், சொத் தாட்சி அதிகாரியின் மனு ஒன்றின்மீது அந்தக் கடனினின்றும் முழுமையாகவோ வேறுவகையானும் பகுதியளவிலோ, விசாரணை செலவுடன் அல்லது செலவில்லாமலோ சொத்தாட்சி அதிகாரியிடம் பணம் செலுத்தும்படி நீதிமன்றம் உத்தரவிடலாம்.

6. நொடிப்பு நிலையரின் சொத்து தன்வசம் இருப்பதாக விசாரணையில் ஒப்புதல் தந்தால், சொத்தாட்சி அதிகாரியின் மனுவின்மீது, வழக்குமன்றம் தகுந்தது என்று கருதுகின்ற நிபந்தனைகளுடன், அத்தகைய சொத்தினைச் சொத்தாட்சி அதிகாரியிடம் ஒப்புவிக்க உத்தரவிடலாம்.

7. முன்சொன்னவைகள் பணம் செலுத்துதற்கும் ஒப்படைசெய்ததாகவும் தீர்ப்பாணை (Decree) செயல்படுவது போன்றும், சொத்துமாற்றம், உரிமையியல் சட்டத்தின் அடிப்படையிலும் உத்தரவுகள் வழங்கப்படும்.

8. அவ்விதம் பணம் செலுத்திய பின்னர், அல்லது சொத்தினைக் மாற்றம் செய்தபின்னர், அவர்கள், எல்லாவிதமான கடப்பாடுகளினின்றும் விடுவிக்கப்படுவர்.

9. 37ஆவது பிரிவின்கீழ், வழக்குமன்றம் உரிமையியல் சட்டத்தின்கீழ் உள்ளதுபோன்றே நபர்களை விசாரணைசெய்ய ஆணையரை அனுப்ப (Commission issue) அதிகாரம் உடையதாக உள்ளது. மாநிலச் சட்டத்தில் 59A பிரிவின்கீழ் வழக்கு மன்றத்திற்கு மேற்சொன்ன முதல் நான்கு அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன.

நொடிப்புநிலையரின் நடவடிக்கைகள், சொத்து முதலானவை பற்றிய விவரங்களை அறியவும், கண்டுபிடிக்கவும், மேற்கொண்டு அவற்றைப் பொறுத்து எத்தகைய முறையில் செயல்பட வேண்டும் என்பதைத் தீர்மானிக்க ஏதுவாக இருக்கவேண்டும் என்பதே இந்தத் தனி விசாரணையின் நோக்கமாகும்.

தனி விசாரணையும் பொது விசாரணையும்

பொது விசாரணை என்பது வழக்கு மன்றம் தன்னிச்சையாக முறையாக நடத்துகின்ற ஒன்றாகும். தனி விசாரணையானது சொத்தாட்சி அதிகாரி அல்லது கடனுளரால் எவரேனும் ஒருவர் மனுச் செய்து அதன்மீது நடத்தப்படுவதாகும். வழக்கு மன்றத்தில் வெளிப்படையாகப் பொது விசாரணை நடக்கும். தனி விசாரணை, நீதிமன்றத்தின் முன்னர் அல்லது வழக்குமன்ற அதிகாரிகள் முன்னர் மறைவாக, அதாவது பொது மக்கள் முன்னிலையில் அவ்வாறு நடைபெறும்.

இயல் 7

# நொடிப்புநிலையரின் கடமைகள்

## (Duties of Insolvent)

மாநகர்ச் சட்டத்தின் 33ஆவது பிரிவின்படி, நொடிப்பு நிலையர், உடல்நிலை காரணமாக நலிவுற்றிருப்பின் அல்லது வேறு தகுந்த காரணமிருந்தாலொழிய சொத்தாட்சி அலுவலர் அன்னா ரின் வருகை தேவை எனக் கருதினல் கடனுளர்களின் கூட்டத்திற்கு வந்திருந்து, தன்னை முன்னிலைப்படுத்திக்கொண்டு, தேவையான தகவல்களைத் தருதல்வேண்டும். மேலும் நொடிப்புநிலையர், தன் சொத்துகளின் பட்டியல், கடனுளர்களின் பட்டியல், தன்னால் கொடுக்கப்படவேண்டியதும், தனக்கு வந்துசேரவேண்டியதுமான கடன்கள் பட்டியல் முதலானவற்றைத் தருதல்வேண்டும். சொத்து அல்லது கடனுளர்களின் விசாரணைக்கு உட்படுதல் வேண்டும், சொத்தாட்சி அதிகாரி அல்லது தனிமேலாளர் குறிப்பிடும் இடத்திலும், நேரத்திலும் அவரைச் சந்தித்தல்வேண்டும். நொடிப்புநிலையருக்குப் பதிலாகச் செத்தாட்சி அதிகாரியே சொத்து மாற்றம் பத்திரங்கள் முதலானவற்றைச் செய்துதர போதுமான வழக்கு நடத்தும் உரிமை (Power of Attorney) தருதல்வேண்டும். அவரது சொத்தினைப் பொறுத்தும், அவற்றி னின்றும் பெறப்படுகின்ற வினைவுகளைக் கடனுளர்களிடையே பகிர்ந்தளிப்பது பொறுத்தும், சொத்தாட்சி அதிகாரி அல்லது தனி மேலாளர் அல்லது நீதிமன்றம் பிறப்பிக்கின்ற உத்தரவுகள் அல்லது தனி உத்தரவுபடியும் தேவையான செயல்களை, நொடிப்பு நிலையர் செய்து தருதல்வேண்டும். அவரது சொத்தும், அதனி னின்றும் பெறப்படும் விளைவுகளைப் பெறுவதற்கும், கடனுளர் களிடையே பகிர்ந்தளிக்கவும், தன்னாலியன்ற உதவியினை நொடிப்பு நிலையர் நல்கவேண்டும். கடனுளர்களின் நன்மைக்காக அன்னாரை வேலைசெய்து சம்பாதிக்கும்படி கட்டாயப்படுத்த முடியாது.

உதாரணமாகச் சொத்தினை விற்பதற்காக நிலத்தை உழுவதையோ குதிரையைச் சவாரிசெய்வதையே வற்புறுத்த இயலாது. நொடிப்புநிலையர் அவர்மீது சுமத்தப்பட்ட மேற்சொன்ன வேலைகளைச் செய்யத் தவறினாலும் அவரிடம் அல்லது அவரது ஆதிக்கத்திலுள்ள சட்ட நெறியின்படி கடனாளர்களிடையே பகிர்ந்தளிக்கப்படவேண்டிய சொத்தினைச் சொத்தாட்சி அதிகாரியினிடம் ஒப்புவிக்கத் தவறினாலும் அதற்கான தண்டனையைப் பெறுவதோடு, நீதிமன்றத்தை அவமதித்த குற்றத்திற்கும் ஆளாகி முறையே தண்டிக்கப்படுவார் என்பதனை (Official Assignee v. Suryakanthamal (1938) 2. M.L.J. 609) வழக்கில் தெளிவாக்கப் பட்டுள்ளது.

மாநகர்ச் சட்டத்தின் 103ஆவது பிரிவின்கீழ் சில கடமைகளைச் செய்யத்தவறினும் குற்றமே என்று கூறப்பட்டுள்ளது. வருங்காலத்தில் நொடிப்புநிலையரால் பெறப்போகும் சொத்துகள் (சான்றுகச் சேமநிதி, (Provident Find moneys) மீது செயற்படுகின்ற எந்த ஒரு எதிர்பார்க்கும் உத்தரவினைத் (anticipation Order) மாநகர்ச் சட்டத்தின் 33ஆவது பிரிவின்கீழ், நீதிமன்றம் பிறப்பிக்காது என்று (Krishnaswami v. Palani Ammal 71. M.L J. 417) வழக்கில் கூறப்பட்டுள்ளது.

கோரிக்கை மனுவை அனுமதித்து உத்தரவிட்ட உடனே, இத்தகைய கடமைகள் மாநிலச்சட்டத்தின் 22ஆவது பிரிவின்கீழ் கடனாளிமீது சுமத்தப்படுகிறது. அச் சட்டத்தின் 69ஆவது பிரிவின்கீழ் அக் கடமைகளைச் செய்யத்தவறுவது குற்றம் என்று கூறப்பட்டுள்ளது. எனினும் மாநகர்ச்சட்டத்தின் 33ஆவது பிரிவில் உள்ளதுபோன்று கீழ்ப்படியாது அவமதித்த குற்றத்திற்கு நொடிப்புநிலையரை உள்ளாக்குவது போன்ற முறை மன்றத்தின் அதிகாரம் மாநிலச் சட்டத்தில் அளிக்கப்படவில்லை என்பது கூர்ந்து நோக்கத்தக்கது.

ஆய்வுக்குழு (Committee of Inspection)

மாநகர்ச் சட்டம் 88, 89ஆவது பிரிவுகளின்படி நீதிமன்றம் அவசியமென்று கருதினால் தங்கள் கடன்களை மெய்ப்பித்த கடனாளர்களை, அல்லது அவர்களுடைய ஒப்புதல் பெற்ற அவர்களின் பிரதிநிதிகளாகவுள்ள நபர் குழு ஒன்றினை அமைக்க அங்கீகாரம் அளிக்கிறது. சொத்தாட்சி அதிகாரி நொடிப்புநிலையரின் சொத்துப் பராமரிப்பைக் கண்காணிக்கும்பொருட்டு இக்குழு பயன்படும். சொத்தாட்சி அதிகாரிகளின் நடவடிக்கைகளை அளிக்கப்படும் அளவுக்கும் கட்டுப்படுத்தும் அதிகாரம் குழுவிற்கு இருக்கும்.

திருத்தப்பட்ட மாநிலச் சட்டத்தில் பிரிவு 67 A-ல் நீதி மன்றத்திற்கு இத்தகைய அதிகாரங்கள் அளிக்கப்படுகின்றன.

நொடிப்புநிலையரைச் சிறை செய்தல் (Arrest of Insolvent)

மாநகர்ச் சட்டத்தின் 34ஆவது பிரிவின்கீழ், வழக்குமன்றம் தன்னிச்சையாக அல்லது சொத்தாட்சி அதிகாரி அல்லது கடனாளர் ஒருவரின் வேண்டுகோள்மீது நொடிப்புநிலையரைக் கைது செய்து உரிமையியல் சிறையில் அடைக்கச் செய்யும் அவ் விதம் செய்ய வேண்டுமானால் நீதிமன்றம் கீழ்க் காண்பவற்றைப் பொருத்தே உத்தரவிடும்.

1. நொடிப்புநிலையர் தலைமறைவாகி விட்டாலும் (அல்லது) அன்னாரின் நடவடிக்கைகள் குறித்துச் செய்யப் படும் விசாரணையினின்றும் தவிர்த்துக்கொள்ளும் நோக்குடன், நொடிப்புநிலை நடவடிக்கைகளைத் தோல்வியுறச் செய்ய, காலந் தாழ்த்த அல்லது குழப்ப எண்ணங்கொண்டு தலைமறைவாகி விடு வார் என்று நீதிமன்றத்திற்குப் போதுமான நம்பத்தகுந்த காரணங்கள் தோன்றினாலும் நொடிப்புநிலையரைக் கைதி செய்ய உத்தரவிடும் (அல்லது)

2. செத்தாட்சி அதிகாரி சொத்தினை வசப்படுத்திக் கொள்வதைத் தடுக்கவோ, காலந்தாழ்த்தவோ எண்ணங்கொண்டு நொடிப்புநிலையர் தன்சொத்தினை அப்புறப்படுத்த இருப்பினும், (அல்லது) மறைத்துவிட்டார் அல்லது மறைக்க இருக்கின்றார் அல்லது நொடிப்பு நிலையில் கடனாளர்களுக்குப் பயன்படக்கூடிய யாதொரு சொத்து அல்லது கணக்குப் புத்தகங்கள், பத்திரங்கள், அல்லது எழுத்துப் பிரதிகள் ஆகியவற்றை அழிக்க இருக்கின்றார் என்று முறை மன்றத்திற்குப் போதுமான நம்பத் தகுந்த காரணங்கள் இருப்பின் நொடிப்புநிலையரைக் கைதிசெய்ய உத்தர விடும் (அல்லது)

3. சொத்தாட்சி அதிகாரியின் முன் அனுமதி இன்றி ரூ. 50-க்கு மேற்பட்ட மதிப்புள்ள யாதொரு சொத்தினையும் அப்புறப்படுத்தினாலும் நொடிப்புநிலையர் கைது செய்யப்படும் உத்தரவிற்கு உள்ளாவார். மாநிலச் சட்டத்தின் 32ஆவது பிரிவில் இத்தகைய அதிகாரம் வழக்குமன்றத்திற்கு அளிக்கப் பட்டுள்ளது. மாநிலச் சட்டத்தின் 21ஆவது பிரிவில், நீதித் தீர்ப்பாணைக்கு முன்னர்ச் செய்யப்படுகின்ற கைதுபற்றி சொல்லப் பட்டுள்ளது.

**நொடிப்புநிலையரின் கடிதங்கள் (Re-Direction of letters)**

மாநகர்ச் சட்டம் 35ஆவது பிரிவில் இடைக்காலச் சொத்துப் பேணுநர் நியமிக்கப்பட்ட பின்னரோ நீதித் தீர்ப்பாணை உத்தரவு அளிக்கப்பட்ட பின்னரோ அதிகாரியின் மனுவின்மீது நீதிமன்றம், மூன்றுமாத கால அளவுக்கு மிகாமலும், குறிப்பிட்ட கால வரம்பு வரை, நொடிப்புநிலையருக்கு உத்தரவிலுள்ள முகவரியிட்டு அனுப்பப்பட்ட அஞ்சல்களைச் சொத்தாட்சி அதிகாரிக்கு அல்லது வழக்கு மன்றம் உத்தரவிடுபவருக்குத் திருப்பியனுப்பி (Redirect) வைக்க உத்தரவிடலாம் என்று கூறப்பட்டுள்ளது. அத்தகைய உத்தரவு யெற்படுத்தப்படும். இத்தகைய உத்தரவு மாநிலச் சட்டத்தில் காணப்படவில்லை.

**பணம் செலுத்தலும் சொத்து ஒப்படை செய்தலும் (Order for payment and delivery of property)**

வழக்குமன்றத்தால் விசாரணை செய்யப்பட்டபோது, எந்த ஒரு நபராயினும் தான் நொடிப்புநிலையருக்குக் கடன்பட்டிருப்பதாகவோ, நொடிப்புநிலையருக்குச் சொந்தமான சொத்தினைத் தன்வசம் வைத்திருப்பதாகவோ ஒப்புதல் செய்யின், அன்னாரை அத்தகைய பணத்தைச் செலுத்தவோ, அச்சொத்தினை ஒப்படை செய்யவோ ஆணையிட நீதி மன்றம் அதிகாரம் படைத்துள்ளது. ஆனால், அத்தகைய நபர் தன்னுடைய கடப்பாட்டினைப்பொறுத்து மறுப்பாரானால் நீதிமன்றம் அத்தகைய அதிகாரம் படைத்ததாகாது. ஆயினும், அனைத்துத் தரப்பினரும், அத்தகைய ஒரு பிரச்சினைக்கு முடிவுகாணும்படி மனு ஒன்றைக்கொடுத்து இசைவு தெரிவிப்பார்களானால் நீதிமன்றம் அதிகாரம் பெற்றுள்ளதாகிறது. தரப்பினர்கள் எவரேனும் இசைவளிக்கவில்லையெனில், சொத்தாட்சி அதிகாரிக்குத் தன்னுடைய உரிமையை நிலைநாட்ட சாதாரண உரிமைமாற்றங்களில் (Tribunal) வழக்குத் தொடருவதன்றி வேறு வழியில்லை.

**தனி மேலாளர் (Special Manager)**

மாநகர்ச் சட்டத்தின் 19ஆவது பிரிவில், கடனாளியின் சொத்து அல்லது வியாபாரம் அல்லது பொதுவாகக் கடனாளர்களின் நன்மையைக் கருத்தில்கொண்டு, சொத்தாட்சி அதிகாரிக்கு உறுதுணையாகச் சொத்து அல்லது வியாபாரத்திற்குத் தனி மேலாளர் நியமனம் தேவை என நீதிமன்றம் கருதுமானால், நீதிமன்றம் அங்கீகரிக்கும் கால அளவிற்கும், சொத்தாட்சி அதிகாரியினால் அளிக்கப்பட்ட அதிகாரங்களுடன் அல்லது நீதிமன்றம் தீர்மானிக்கும் முறையில் தனி மேலாளர் ஒருவர் வழக்குமன்றத்தால் நியமிக்கப்படுவார் எனக் கூறப்பட்டுள்ளது. அவர் போதுமான பிணையம் (Security) அளிக்கவேண்டும். நீதிமன்றம் வரையறுக்கும் முறையில் கணக்குகள்வைத்து ஒப்படைத்து அம்மன்றம் நிர்ணயிக்கும் ஊதியத்தை அவர் பெறுவார்.

இயல் 8

# நீதித் தீர்ப்பாணை உத்தரவைச் செல்லாநிலையாக்குதல்

## (Annulment of an order of adjudication)

நீதிமன்ற நடவடிக்கை செயல்படுவதில், ஏற்கனவே நடை பெற்றவைகளையோ பொறுத்தோ பின்னர் நடைபெற இருப் பவைகளையோ பொறுத்து தள்ளுபடி செய்யப்படுவதைச் செல்லா நிலை ஆக்குதல் (annulment) என்று சொல்லப்படுகிறது. ஒரு சட் டத்தை அல்லது நீதிமுறை நடவடிக்கையை முன் தேதியிலிருந்து இல்லாமலாக்குதல் அல்லது எதிர்கால நடவடிக்கைகளைப் பொறுத்தவரையில் செல்லாமலாக்குதலாகும். நீதித் தீர்ப் பாணையைச் செல்லாநிலை ஆக்குதல் என்பது நொடிப்புநிலை உத்தரவினைத் தள்ளுபடிசெய்து, நொடிப்புநிலையரை அவர் முன் பிருந்த நிலையில் வைத்தலாகும். அல்லது நீதிமன்றம் விதிக்கும் நிபந்தனைகளைப் பொறுத்ததாகும். நீதித் தீர்ப்பாணையை இல்லாம லாக்கும் உத்தரவு கீழ்க்காணும் ஐந்து நிலைகளில் அமுலாகும்.

1. கடனாளியை நொடிப்புநிலையராகக் கொண்டு இருக்கக் கூடாது என்று நீதிமன்றம் கருத்து கொள்ளும்போது ;

2. நொடிப்புநிலையரின் கடன்கள் முழுமையாகச் செலுத்தப்பட்டுவிட்டது என்று நீதிமன்றம் உளநிறைவு கொள்ளும் வகையில் நிரூபிக்கப்பட்டபோது ;

3. நீதிமன்றத்தின் அனுமதியுடன் (Leave) கடனாளர் கோரிக்கை மனு அளித்து அதன்மீது நீதித் தீர்ப்பாணை வழங்கப்பட வேண்டும் என்றிருக்கும் நிலையில் நீதிமன்றத்தின் அனுமதி பெறாது

கடனாளரின் கோரிக்கையின்மீது நீதித் தீர்ப்பாணை வழங்கப்பட்ட போது ;

4. உடன் நிகழ்வான (Concurrent Proceedings) நடவடிக்கைகள் வேறொரு நீதிமன்றத்தில் முடிவடையாதபோது (Pending) ;

5. நொடிப்புநிலையரின், கடன் தீர்வு உடன்பாடு (Composition) அல்லது ஒரு ஏற்பாட்டாவணத்திற்கான (Scheme) புரிவுரையை வழக்குமன்றம் ஏற்கும்போது;

நீதித் தீர்ப்பாணையை செல்லாநிலைக்கும் உத்தரவு வழங்கப்படலாம். நீதிமன்றம் குறித்த தேதியன்று நொடிப்புநிலையர் வராமலிருந்தாலும், விடுப்புமனு போடாமலிருந்துவிட்டாலும் தீர்ப்பாணையைச் செல்லா நிலையாக்கலாம்.

இரு சட்டங்களிடையேயுள்ள வேறுபாடு

மாநகர்கள் சட்டத்தில் தள்ளுபடி செய்யக்கூடும். 'May Annul' என்ற சொற்கள் எடுத்தாளப்பட்டிருப்பதைக் காணும் போது மேற்சொன்ன ஐந்து நிலைகள் நிரூபிக்கப்பட்டாலும் செல்லாநிலையிலிருந்து உத்தரவு வழங்குவது நீதிமன்றத்தின் உளத்தீர்வுக்கு உட்பட்டது என்பது தெளிவாகின்றது. மாநிலச் சட்டத்தில் கையாளப்பட்டிருக்கும் சொற்கள் தள்ளுபடிசெய்தல் ஆகும். 'Shall annul' என்றிருப்பதால் வழக்குமன்றம் தன்னிச்சையாக நடைபெற இயலாது என்பது உறுதியாகின்றது.

மாநகர்கள் சட்டத்தில் இத்தகைய உத்தரவினைப்பெற அதனால் பயன்பெறும் எந்த ஒரு நபரும் மனுச்செய்யலாம் என்று கூறப்பட்டுள்ளது. கடனாளியோ, கடனாளரோ அல்லது நீதித் தீர்ப்பாணையை இல்லாமலாக்குவதில் பயன்பெறுகின்ற எந்த ஒரு நபரும் மனுச்செய்யலாம் என்பது தெளிவு. உதாரணமாக கடனாளியின் சொத்தினை அடைமானம் (Mortgage of debtor's property) கொண்டவர் பயன் அடைகின்ற நபர் எனக் கூறலாம்.

மாநிலச் சட்டத்தில், கடனாளியின் அல்லது பயன்பெறும் நபர் எவரேனும் ஒருவரின் மனுவின்மீது நீதித் தீர்ப்பாணையை இல்லாமலாக்கி எழுத்துமூலமாக வழக்கு மன்றம் உத்தரவிடும் என்று கூறப்பட்டுள்ளது. பயன்பெறும் நபர் என்பவர், நீதித் தீர்ப்பாணையினால் இழப்புக்குள்ளானவராகவோ நீதித் தீர்ப்பாணையை இல்லாமலாக்குவதன் மூலம் ஒரு பயனை அடைபவராகவோ இருத்தல் ஆகும்.

## உத்தரவின் விளைவு (Effect of Annulment)

உத்தரவினை வழங்கும்போது, நீதிமன்றம் விதிக்கின்ற நிபந்தனைகளைப் பொறுத்து விளைவுகள் காணப்படும். வழக்கின் தரத்திற்கேற்ப உத்தரவும் மாறுபடும். நொடிப்புநிலையினை செல்லாநிலையாக்கும் உத்தரவினால் பல சட்டப்படியாக, நல்லெண்ணத்தில் (Bonafide dispositions) செய்யப்பட்ட உடைமை மாற்றப்பட்டவைகளுக்கு உட்பட்டும், அத்தகைய உத்தரவினை இடும்போது நீதிமன்றம் விதிக்கும் நிபந்தனைகளுக்கு உட்பட்டும் நொடிப்புநிலையரின் சொத்தினை அடுத்தவருக்குச் சேர்ந்தடைய சட்ட உரிமையுள்ள (Vested) உத்தரவிட்டாலொழிய நொடிப்புநிலையர் முன்னர் இருந்தநிலையில் வைக்கப் படுவர். மாநிலச் சட்டப் பிரிவு 37, 43-னின்கீழ் நீதித் தீர்ப்பாணை செல்லா நிலையாக்கிய பின்னரும், நொடிப்புநிலையருடைய சொத்து, நீதிமன்றம் குறிப்பிடுகின்றவரிடம் சென்றடையும் அத்தகைய உத்தரவு வழங்கப்படாத நிலையிலும், எந்த ஒரு நிபந்தனையும் விதிக்கப்படாதபோதும், முன்னர், அன்னாரின் சொத்தினைப் பொறுத்துப் பெற்றிருந்த உரிமைகள், அதிகாரங்கள் அனைத்தும் பெருமளவில் நொடிப்புநிலையர் வைக்கப்படுவர். கடனாளியின் மனுமீதான குறித்த விசாரணை நாளன்று கடனாளி வருகைதரத் தவறியதாலோ வழக்கு மன்றத்தால் குறிப்பிடப் பட்ட காலவரையறைக்குள் விடுப்பு உத்தரவிற்கான மனுவை அன்னார் கொடுக்கத் தவறியதாலோ நீதித் தீர்ப்பாணையை இல்லாமலாக்கி உத்தரவிடும்போது, வழக்குமன்றம் தக்கது என்று கருதினால், நொடிப்புநிலைச் சட்டத்தின் கட்டுவாசகங்களின்மீது காப்பிலிருந்து விடுதலை செய்யப்பட்ட அவரை மீண்டும் முன்னர் வைக்கப்பட்ட காப்புச் சிறைக்கனுப்ப நீதிமன்றம் உத்தரவிட லாம்.

## நீதிமன்ற நடவடிக்கைகளும், வழக்குகளும்

சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநரால் ஏற்கனவே தொடரப்பட்ட உரிமையியல் வழக்கு, அல்லது வழக்கு மன்ற நடவடிக்கையானது, இல்லாமலாக்கும் உத்தரவினால் எவ்விதம் பாதிக்கப்படுகிறது? நிபந்தனை எதுவுமின்றிக் கடனாளிக்கு மீண்டும் சொத்துவந்தடைதல் அல்லது நீதிமன்றத்தின் உத்தரவினால் மற்றவரைச் சொத்து சேர்ந்தடைவதைப் பொறுத்து, இல்லாமலாக்கும் உத்தரவின் விளைவு இருக்கும். சொத்து கடனாளியை மீண்டும்வந்தடைந்தால் அவருக்குச் சேர வேண்டிய கடன் தொகைக்கான அல்லது அவரது சொத்தினை மீட்டுப்பெற ஏற்கனவே சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்

பேணுநரால் தொடக்கப்பட்ட உரிமையியல் வழக்கைத் தொடர உரிமை படைத்தவராவார். நீதித் தீர்ப்பாணையை இல்லாமலாக்கும் உத்தரவினுல் உரிமையியல் வழக்குகள் முடிவடைவதில்லை.

உரிமையியல் வழக்கு ஒன்றினைத் தொடங்கிபின், வாதி நொடிப்புநிலையராகத் தீர்மானிக்கப்பட்டு, பின்னர் சொத்தாட்சி அதிகாரி அந்த வழக்கினைத் தொடரத் தவறியதால் வழக்குத் தள்ளப்பட்டு, பின்னர் நீதித் தீர்ப்பாணை இல்லாமலாக்கப்பட்டு, சொத்து வாதியிடம் மீண்டும் உற்றடையும்போது, வாதியின் மனுமீது, வழக்கு மன்றம் முன்சொன்ன வழக்கினை மீண்டும் தொடர வகைசெய்யும். ஆனுல், தன்னிச்சையாகச் சட்டப்படி எழுதிவைத்தல் (Settlement) மூலமாக ஆள் மாற்றளிப்பு ஆவணத்தையோ, மோசடி முந்தளிப்பு (Fraudulent preference) மூலமாக ஆள் மாற்றளிப்பு ஆவணத்தையோ, தள்ளிவைக்க சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநரால் செய்து கொண்ட மனு, செல்லாநிலையாகிய உத்தரவினுல் காலாவதியாகும். கடனுளி அதனைத் தொடரமுடியாது. அன்னுரின் உரிமைகள் பயன்கள் அளவில்தான் உரிமை மீண்டும் வந்தடையும் என்ற அடிப்படையில்தான் இந்நிலை உண்டாகிறது. முன்னர்க் குறிப்பிட்ட மாற்றளிப் பாவணத்தின் ஒத்திவைப்பு கடனுளியின் உரிமையின்பாற்பட்டதன்று. கடனுளர்களின் சார்பில் சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநர் மட்டுமே கொண்டுள்ள உரிமையாகும்.

இயல் 9

# கடன்தீர்வு உடன்பாடுகளும் ஏற்பாட்டு ஆவணங்களும்

## (Composition and Schemes of Arrangement)

கடனாளிகள் கடனாளர்களிடையே ஏற்படும் உடன்பாடுகள் 'கடன்தீர்வு உடன்பாடுகள்' எனப்படும். நொடிப்புநிலைச் சட்டத்தின் உதவியை நாடாமலே, கடன்களை முழுமையாகச் செலுத்த இயலாத கடனாளி தன் கடனாளர்களுடன் கடன்தீர்வு உடன்பாடு ஒன்றினை மேற்கொள்ள புரிவுரை (Proposal) செய்யலாம். கடன் தொகையில் ஒப்புக்கொள்ளப்பட்ட குறிப்பிட்ட பங்கு தொகையினைத் (குறைந்த தொகை) தங்கள் கோரிக்கைக்கு எதிரிடையாக, மறுபயனாகக் (Consideration) கொண்டு, தங்கள் கோரிக்கைகளைக் கைவிடுகின்ற உடன்பாடு ஒன்றின்மூலமாகக் கடன் தீர்வு உடன்பாடு ஏற்படலாம். கடனாளி தன் சொத்து முழுமையையும் பொறுப்புரிமையர் ஒருவர்க்கு உரிமை மாற்றும் செய்து, அச்சொத்தின் விளைவுகளைப்பெற்றுக் கடனாளர்களிடையே விகிதாச்சார அடிப்படையில் பகிர்ந்தளிக்கவும், கடனாளர்கள் இதற்கு மறுபயனாகத் தங்களுடைய முன் கோரிக்கைகளை விடுத்துக் கடன்கள் தீர்வுக்காகச் செலுத்தக்கூடிய பங்கு ஆயத்தைப் (Dividend) பெற்றுக்கொள்கின்ற உடன்பாடும் கடன் தீர்வு உடன்பாட்டில் ஒருவகையாகும். இவ்விரு உடன்பாடுகளுக்குமிடையே சிறிதளவு வேறுபாடு உண்டு. முதல் உடன்பாடு தானாக நொடிப்புநிலை ஆக்குவினை செயலாகி விடுவதில்லை. ஆனால், பின்னர்ச் சொன்ன (இரண்டாவதாகக் கூறப்பட்ட) உடன்பாடு நொடிப்புநிலை ஆக்குவினைச் செயலாகிவிடலாம். அத்தகைய உரிமை மாற்றம் நொடிப்புநிலை ஆக்குவினைச் செயலாயிருப்பினும், கடனாளர் எவர்க்கும், நொடிப்புநிலை கோரிக்கை மனு அதன் அடிப்படையில் அமைக்க அனுமதிப்பதில்லை. அத்தகைய

உரிமை மாற்றத்திற்குக் கடனுளரே ஒரு தரப்பு நபராக இருப்பதால், அன்னுரே நொடிப்புநிலை ஆக்குவினைச் செயலாக அதனைக் கருதுவதிலிருந்து முரண்தடை (Estopped) செய்யப்படுகின்றுர்.

இத்தகைய உரிமை மாற்றத்தில் பொறுப்புரிமையரின் பொறுப்பு அதிகப்படியாகவும் தன் பொறுப்பாகவும் (Personal Responsibility) இருக்கிறது. உரிமை மாற்ற ஆவணத் தேதியிலிருந்து மூன்று மாதங்கள் கடப்பதற்கு முன்னர்ச் சொத்தினைப் பெற அன்னுர் எடுக்கும் நடவடிக்கைகளில் அவர்தம் பொறுப்பேற்கும்படிநிலை ஏற்படலாம். அந்த ஆவணம், நொடிப்புநிலை ஆக்குவினைச் செயலாகக் கருதப்பட்டு, தள்ளிவைக்கப்பட்டால் சொத்து முழுமைக்குமான மதிப்பினை நொடிப்புநிலை நீதித் தீர்ப்பாணையின் கீழ் நியமிக்கப்பட்ட சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநர்க்குத் தம் சொந்தச் செலவில் மாற்றளிப்புச் செய்தல் வேண்டும்.

**கோரிக்கை மனுவின் பின்னர்க் கொள்ளும் கடன்தீர்வு உடன்பாடு (Composition after Presentation of Pettition)**

கடனுளியால் அல்லது அன்னுருக்கெதிராக மனுச் செய்யப்பட்ட நொடிப்புநிலை கோரிக்கை அளிக்கப்பட்ட பின்னரும், நீதித் தீர்ப்பாணை வழங்கு முன்னரும், கடனுளி, தன் கடனுளருடன் கடன்தீர்வு உடன்பாடு மேற்கொண்டால், நொடிப்புநிலை நீதிமன்றம் இசைவின் மீது கோரிக்கையைத் தள்ளிவிடலாம் அல்லது கோரிக்கையினை மீட்டுப்பெற (Withdrawn) அனுமதிக்கலாம்.

**நீதித் தீர்ப்பாணையின் பின்னர்க் கடன்தீர்வு உடன்பாடு (Composition after Adjudication)**

கடனுளி ஒருவன், நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர்த் தன் கடனுளர்களுடன் நீதிமன்றத்திற்கு புறம்பாக உடன்பாடு செய்ய முடியாது. இரு சட்டங்களிலும் கூறப்பட்டுள்ள கடன்தீர்வு உடன்பாடு அல்லது ஏற்பாட்டாவணங்கள் மூலமே இத்தகைய ஒப்புதல் கொள்ளமுடியும். இரு சட்டங்களிடையேயும் இதனைப் பொறுத்து இரு வேறுபாடுகள் உண்டு. கடன்தீர்வு உடன்பாடு அல்லது ஏற்பாட்டாவணத்தின் விளைவினுல் கட்டுப்படுவதைக் குறித்த வேறுபாடு அவற்றில் ஒன்றுகும். மாநகர்கள் சட்டத்தில், அத்தகைய ஏற்பாட்டாவணம் ஒன்றினை நீதிமன்றம் ஏற்றுக் கொண்டு விட்டால், எல்லாக் கடனுளர்களையும் கட்டுப்படுத்தும் தன்மையது. அவர்கள் அதற்குச் சம்மதமளித்திருந்தாலும் அல்லது அளிக்களில்லையாயினும் அது எல்லோரையும் கட்டுப்படுத்தும். ஆனுல் மாநிலச் சட்டத்தில், சம்மதமளித்த கடனுளரையே கட்டுப்படுத்தும் தன்மையது என்றும், அத்தகைய கடன்தீர்வு உடன்பாடு அல்லது ஏற்பாட்டாவணத்திற்குச் சம்மதமளிக்காத

கடனாளரையோ, பட்டியலில் (Schedule) பெயர் சேர்க்கப்படாத கடனாளரையோ, அது கட்டுப்படுத்தாது என்றும், அன்னார் கடனாளிக்கெதிராக உரிமையியல் வழக்காடி, தம் கோரிக்கை முழுமையையும் பெற உரிமையுடையவர் என்றும் கூறப் பட்டுள்ளது.

இரண்டாவது வேறுபாடு, ஏற்பாட்டாவணம் அல்லது உடன் பாட்டின்படி பணம் செலுத்தத் தவறினால் கடனாளர்களுக்குள்ள தீர்வுபற்றியதாகும். மாநகர்கள் சட்டத்தில் பணம் செலுத்தும் தவணையில் தவறுதல் ஏற்படின், கடனாளர் அல்லது பயன்பெறும் நபர் நீதிமன்றத்திற்கு, நிலுவைத் தொகைகளைச் (Arrears) செலுத்தும்படியான உத்தரவு பிறப்பிக்க, மனுச்செய்துகொள்ள லாம். கடனாளியைப் பணம் செலுத்தும்படி நீதிமன்றம் உத்தர விடலாம். நீதிமன்றத்தின் உத்தரவுக்குக் கீழ்ப்படியாமை 'நீதிமன்ற அவமதிப்பு' (Contempt of Court) என்ற குற்றமாக கருதப்படும். மாநில நொடிப்புநிலைச் சட்டத்தில் இத்தகைய குறு தீர்வுமுறை (Summary Remedy) காணவில்லை. மாநிலச் சட்டத்தில் அமைகின்ற நீதிமன்றத்திற்கு 'நீதிமன்ற அவமதிப்பு'க் குற்றத்திற்காகச் சிறைக்கனுப்பும் அதிகாரம் இல்லாதிருப்பதே இதற்கான காரணமாகும். உரிமையியல் வழக்கு ஒன்றே தகுந்த தீர்வாகக் காணப்படுகிறது. மேற்சொன்ன இரு வேறுபாடுகளைத் தவிர, இரு சட்டங்களிடையேயும் நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர் கடன்தீர்வு உடன்பாடு அல்லது திட்டம்பற்றிய கட்டுவாசகங்கள் ஒன்றுபோல இருக்கின்றன.

### கடன்தீர்வு உடன்பாடு அல்லது ஏற்பாட்டாவணத்திற்கான புரிவுரை (Proposal of composition or scheme)

நீதித் தீர்ப்பாணை வழங்கிய பின்னர் எந்த ஒரு காலத்திலும், நொடிப்புநிலையர் ஒருவர் தம் கடன்களின் மனத்திசைவுக்காகக் (satisfaction) கடன்தீர்வு உடன்பாடு அல்லது ஏற்பாட்டாவணம் அல்லது தம் நடவடிக்கைகளுக்கான ஏற்பாடு ஒன்றினைப் புரிவுரை யாக அளிக்கலாம். பின்னர் இந்தப் புரிவுரையினை ஆலோசிக்க கடனாளர்களின் கூட்டத்திற்கென ஒரு நாள் நிர்ணயிக்கவேண்டும். தம் கடனை நிரூபித்த கடனாளர்கள் ஒவ்வொருவர்க்கும் இத்தகைய கூட்டத்திற்கான அறிவிப்புத் தருதல் வேண்டும். கூட்டத்தில் புரிவுரை ஆலோசனைக்கு விடப்படும். கடனை நிரூபித்த கடனாளர் களில் பெரும்பான்மையினரும் நான்கில் மூன்று பங்குக் கடன் மதிப்புக்கொண்ட கடனாளரும் புரிவுரையினை ஏற்பதாகத் தீர் மானித்தால் புரிவுரை ஏற்கப்பட்டதாகிவிடும். வருகை புரிந்த கடனாளர் ஒருவர், தீர்மானத்தில் வாக்குப்பதிவு செய்யாதிருப்பின்

ஏற்புக்கெதிராக வாக்களித்ததாகக் கொள்ளப்படும். மாநகர்கள் சட்டத்தில் கடனாளர் ஒருவர் பதிலாள் (Proxy) மூலமாக வாக்களிக்கலாம் என்று சொல்லப்பட்டுள்ளது. மாநிலச் சட்டத்தில் கடனாளர் ஒருவர் வாதுரைஞர் (Pleader) மூலமே வாக்களிக்க முடியும் என்று கூறப்பட்டுள்ளது. சட்டத்தினுல் விதிக்கப்பட்ட பெரும்பான்மையினரால் (Statutory Majority) ஏற்கப்பட்டாலொழிய, நீதிமன்றம் எந்தத் திட்டத்தையும் ஏற்காது.

## நீதிமன்றத்திற்கு மனுச்செய்தல் (Application to Court)

மாநகர்கள் சட்டத்தில், நொடிப்புநிலையர் அல்லது சொத்தாட்சி அதிகாரி, கடனாளர்களால் ஏற்கப்பட்ட புரிவுரையினை, ஏற்றுக்கொள்ளவேண்டி நீதிமன்றத்திற்கு மனுச்செய்து கொள்ளலாம். மனுமீதான விசாரணை நாள் பற்றிய அறிவிப்பு, கடன் நிரூபித்த கடனாளர்கள் ஒவ்வொருவர்க்கும் அனுப்புதல் வேண்டும். இத்தகைய கட்டுவாசகம் மாநிலச் சட்டத்தில் காணப்படவில்லை. ஆயினும் இதனை ஒத்த நடைமுறைப் பழக்கத்தில் இருந்து வருகிறது.

கடன் நிரூபித்த எந்த ஒரு கடனாளரும், விசாரணையின்போது, ஏற்கனவே புரிவுரையினை ஏற்பதாக வாக்களித்திருப்பினும் நீதிமன்றத்தில் மனுவிற்கெதிராக வாதிடலாம். காரணம் யாதெனில், ஏற்பானது புரிவுரை ஆலோசிக்கத் தகுந்தது என்ற அடிப்படையில் மட்டுமே கொடுக்கப்பட்டது.

புரிவுரையின் வரையறைகள் (Terms) நியாய மற்றவை அல்லது கடனாளர்களின் பொதுநன்மையைக் கணக்கில் கொள்ளவில்லை என்று நீதிமன்றம் கருதுமானுல், புரிவுரையினை ஏற்க அது உறுதியாக மறுத்து விடவேண்டும்.

## நீதிமன்றத்தின் அனுமதிபெறும் நோக்கம்

தங்கள் சொத்தினை கவனமின்மையாகப் (Recklessly) பெரும்பான்மையினர் பராமரிக்கும் வகையிலும், சிறுபான்மையினரின் நலனுக்கெதிராக வேண்டுமென்றே திட்டம் தீட்டியும் கடன்தீர்வு உடன்பாடு கொள்ளினும் அத்தகைய கடன்தீர்வு உடன்பாடு அல்லது ஏற்பாட்டாவணம் பெரும்பான்மையினரால் ஏற்கப்படின் சிறுபான்மை உறுப்பினர்களைக் கட்டுப்படுத்தும் என்பதைக் கவனத்திற் கொள்ள வேண்டும். எனவே, சிறுபான்மையினர்க்கு எத்தகைய ஒரு அநீதியும் இழைக்கப்படுவதைத் தடுக்கும் பொருட்டும், கடனாளி மிகுந்த :எச்சரிக்கையாகவும் நன்னடத்தை

யுடன் இருக்குமாறு செய்யவும் ஏற்பாட்டாவணம் அல்லது கடன் தீர்வு உடன்பாடு நீதிமன்றத்தின் அனுமதியைப் பெறவேண்டியுள்ளது.

### கடன்தீர்வு உடன்பாட்டினை அனுமதித்தபின் நீதிமன்றத்தின் அதிகார வரம்பு (Jurisdiction of Court after Approval of Composition)

நொடிப்புநிலை நீதிமன்றத்தின் அதிகார வரம்பு எந்த ஒரு ஏற்பாட்டாவணத்திலும் முடிவடைவதில்லை. நீதித் தீர்ப்பாணை செல்லாநிலையாக்கப்பட்டுவிடினும் (Annulled) கடன்தீர்வு உடன்பாடு நொடிப்புநிலை நீதிமன்றத்தின் அனுமதியுடன் ஏற்பட்டிருப்பினும், அதனைச் செயற்படுத்த நீதிமன்றம் அதிகார வரம்பினைத் தன்னகத்தே கொண்டுள்ளது. நொடிப்புநிலைத் திட்டத்திற்குப் பதிலாகத்தான் மேற்சொன்ன ஏற்பாட்டாவணம் அனுமதிக்கப்படுகிறது. நொடிப்புநிலை நீதிமன்றத்தின் பிடியிலேயேஇத்திட்டம் இருக்கின்றது.

### வழக்குமன்றம் எப்பொழுது முழுமையாக மறுக்கவேண்டியது? (When Court is Absolutely Bound to Refuse)

கடன்தீர்வு உடன்பாடு அல்லது ஒரு திட்டம்

(i) அதன் வரையறைகள் நியாயமற்றதாக அல்லது கடனாளர்களுக்குப் பொதுவான நன்மையைக் கணக்கில் கொள்ளவில்லை எனின்;

(ii) நீதிமன்றம் நொடிப்புநிலையரின் விடுப்பை (Discharge) மறுக்கவேண்டியிருக்கும் ஒன்ருயின்; (இத்தகையது மாநிலச் சட்டத்தில் இல்லை) அல்லது,

(iii) மாநகர்கள் சட்டம் 49ஆவது பிரிவிலும், மாநிலச் சட்டத்தின் 61ஆவது பிரிவிலும் கூறப்பட்டுள்ள கடன்களை மற்றக் கடன்களைவிட முன்னுரிமையுடன் செலுத்த புரிவுரை வழிவகை செய்யாதிருப்பின் நீதிமன்றம், அத்தகைய ஒன்றினை முழுமையாக மறுக்கவேண்டிய அவசிய கடப்பாட்டிலுள்ளது.

### நீதித் தீர்ப்பாணை செல்லா நிலையாக்கப்படுதல் (Annulment of Adjudication)

இரண்டு சட்டங்களிலும், புரிவுரையினை நீதிமன்றம் அனுமதித்துவிடின் அம் மன்றத்தின் உத்தரவு ஒன்றில் அதன் வரையறைகள் உள்ளடக்கப்பட்டிருக்கவேண்டும். நீதித் தீர்ப்பாணை

இல்லாமலாக்கப்படவேண்டும். ஏற்பாட்டாவணம் அல்லது கடன் தீர்வு உடன்பாடு அனுமதிக்கப்பட்டு, நீதித் தீர்ப்பாணை இல்லாமல் ஆக்கப்பட்டபின் நொடிப்புநிலையரால் தீர்மானிக்கப் பட்ட கடனுளியின் சொத்தானது கடன்தீர்வு உடன்பாட்டின்படி பாதுகாக்கப்பட்டுப் பணம் செலுத்துதல் செய்யவேண்டி யமைக்காக நீதிமன்றத்தால் நியமிக்கப்பட்டவரை உள்ளடையும். அங்ஙனம் நியமனம் ஏற்படத் தவறின், கடனுளியிடமே திரும்பி உள்ளடையும்.

### கடனுளியை மீண்டும் நொடிப்புநிலையராக்கல் (Re-Adjudging the debtor Insolvent)

நீதிமன்றத்தால் அனுமதிக்கப்பட்ட கடன்தீர்வு உடன் பாடு அல்லது ஏற்பாட்டாவணத்தின் அடிப்படையில் பணம் செலுத்துதலில் தவறிழைக்கப்படின் (default) அல்லது ஏற்பாட் டாவணம் அல்லது கடன்தீர்வு உடன்பாடு, அநீதி அல்லது தகாக் காலதாமதம் (undue delay)) செய்யாமல் நிறைவேற்றம் பெற இயலாது என்று வழக்குமன்றத்திற்குத் தோன்றுமானால் அல்லது வழக்குமன்றத்தின் அனுமதி மோசடியாகப் பெறப்பட்டிருப்பின், அக்கறைகொண்ட எந்த ஒரு நபரின்மீதும் நீதிமன்றம், சரியானது என்று கருதுமாயின் கடனுளியை மீண்டும் நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணை நல்கி ஏற்பாட்டாவணம் அல்லது கடன்தீர்வு உடன்பாட்டினை செல்லா நிலையாக்கி (annulled) உத்தரவிடும். அதன்மீது கடனுளியின் சொத்தானது, சொத்தாட்சி அதிகாரியை உள்ளடையும். ஆயினும் மேற்சொன்ன ஏற்பாட்டாவணம் அல்லது கடன்தீர்வு உடன்பாட்டின்படி அல்லது அதன்கீழ்ச் செய்யப்பட்ட எத்தகைய மாற்றங்கள் அல்லது பணம் செலுத்து தல்களும் பாதிக்காத வகையில் இந்த உத்தரவு காணப்படும். இத்தகைய நிலை அடைந்ததும், கடனுளர்கள் கடன்தீர்வு உடன் பாட்டில் கண்ட முறையில் அல்லாமல் தங்கள் முன்னர் நிரூபித்த கடன் தொகைகளை மீண்டும் நிரூபிக்கலாம். இத்தகைய கடன் தீர்வு உடன்பாட்டின்கீழ்ப் பொறுப்புத் தந்த பிணையாள் மேற் சொன்ன செல்லா நிலையாக்கும் (Annullment) உத்தரவின்மூலம் விடுவிக்கப்படுவர் என்று Walton v. Cook (1888) 40 Ch. D. 325 வழக்கில் கூறப்பட்டுள்ளது.

## இயல் 10

# நொடிப்புநிலையரின் விடுப்பு

## (Discharge of Insolvent)

*மாநகர்ச்சட்டம். பிரிவு : 38-45*
*மாநிலச்சட்டம். பிரிவு : 41-44*

நொடிப்புநிலையர் பட்டியல் தாக்கல் செய்த பின்னரும் அன்னாரின் நடவடிக்கைகளைப் போதுமான அளவில் ஆராய்ந்த பின்னரும், விடுப்புப்பெற முயல்வார். மாநகர்கள் சட்டம் 38ஆவது பிரிவில், கடனாளி ஒருவர், நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர் எந்த ஒரு காலத்திலும் விடுப்பு உத்தரவிற்காக மனுச் செய்து கொள்ளலாம். மனுவினை விசாரிக்க நாள் ஒன்றினை நீதிமன்றம் நிர்ணயிக்கவேண்டும். கடனாளியின் பொதுவிசாரணை முடிவடையும்முன்னர் அந்த நாள் இருத்தல் ஆகாது என்று சட்டத்தில் வரையறுக்கப்பட்டுள்ளது. நொடிப்புநிலையர் எப்பொழுது விடுப்பிற்கான மனுச்செய்ய வேண்டும் என்பதற்கான விதிகளை ஒவ்வொரு உயர்நீதி மன்றமும், இந்தச்சட்டத்தின்கீழ் வகுத்துக்கொண்டுள்ளது. அவ்விதம் குறிக்கப்பட்டுள்ள கால வரையறைக்குள் கடனாளி மனுச்செய்து கொள்ளாவிடின், நீதிமன்றம் நீதித்தீர்ப்பாணையை செல்லா நிலையாகலாம். மாநிலச் சட்டத்தின்கீழ் கடனாளி விடுவிப்பிற்கான மனுச் செய்துகொள்ளும் காலவரம்பினை நீதிமன்றம் குறிப்பிடவேண்டும் என்று பிரிவு : 21-27ல் கூறப்பட்டுள்ளது. அவ்விதம் அன்னார் செய்துகொள்ளாவிடின், நீதிமன்றம் நீதித் தீர்ப்பாணையை செல்லாநிலையாக்க வேண்டும் என்று வரையறுத்துள்ளது.

திறந்த வழக்கு மன்றத்தில் (Open court) மனு விசாரிக்கப்படும். குறிப்பிடப்பட்ட நாளில் கடனாளி, கடனாளர்கள் இருபாலரையும் நீதிமன்றம் விசாரிக்கும். சொத்தாட்சி அதிகாரி அல்லது

சொத்துப்பேணுநரையும் அவர்கள் அனுப்பிய அறிவிக்கைகளையும் பார்வையிடலாம். விசாரணை செய்யலாம். மாநகர்கள் சட்டத்தின்கீழ், கடனாளியின் நடத்தை குறித்துப் புலன் விசாரணை செய்து விடுப்பு மனுவை எடுத்துக்கொண்ட நீதிமன்றத்திடம் அறிக்கை தாக்கல் செய்வது சொத்தாட்சி அதிகாரியின் கடமையாகும். நொடிப்புநிலையர் அந்தச் சட்டத்தின்கீழ் அல்லது இந்திய பினல் கோடு சட்டத்தின்கீழ்க் குற்றமாகக்கூடிய எந்த ஒரு செயலையும், தம் நொடிப்புநிலை சம்பந்தமாகச் செய்தார் என நம்பத் தகுந்த காரணங்கள் இருப்பினும், அல்லது விடுப்பு உத்தரவு மறுக்க, நிறுத்தி வைக்க அல்லது வரம்புட்படுத்த நீதிமன்றத்திற்குப் போதுமான காரணங்கள் இருப்பினும் சொத்தாட்சி அதிகாரி நீதிமன்றத்திற்கு அறிக்கை விடவேண்டியது அன்னாரின் கடமையாகும். சொத்துப் பேணுநர்க்கு இதுபோன்ற கடப்பாட்டினை வற்புறுத்த மாநிலச் சட்டத்தில் எந்த ஒரு விதியும் இல்லை. ஆனால் சில உயர்நீதி மன்றங்கள் ஏற்படுத்தியுள்ள விதிகளில் சொத்துப் பேணுநர் அறிக்கை தாக்கல் செய்ய வேண்டுவதற்கான கட்டுவாசகம் உள்ளது.

விடுப்பு உத்தரவளிக்கும் உரிமை வழக்கு மன்றத்தின் உளத்தேர்வுக்குட்பட்டது (Discretion). மனுவின்மீது விசாரணைக்கெனக் குறித்த நாளன்று கடனாளியிடம் விடுப்பு உத்தரவு வழங்க அல்லது மறுக்க அல்லது நிபந்தனைக்குட்படுத்தி உத்தர விட, நீதிமன்றத்தின் உளத்தேர்வினைப் பயன்படுத்தப் போதுமான சூழ்நிலைகள் உள்ளனவா என்பதை அறுதியிட்டுக் கொள்ளும் பொருட்டு விசாரணை செய்யும்.

**விடுப்பு மனுக்கொடுக்கத் தவறுதல் (Failure to apply for Discharge)**

நியாயமான காலவரையறைக்குள் நொடிப்புநிலையர் விடுப்பிற்கான மனுச் செய்துகொள்ளவேண்டும். விடுப்பு மனுமீதான விசாரணைக்குக் குறிப்பிடப்பட்ட நாளில் நொடிப்புநிலையர் வரத் தவறிடினும் அல்லது மாநகர்கள் சட்டத்திற்குக் கீழ்க் குறிப்பிட்ட அல்லது நிர்ணயித்த காலத்திற்குள்ளாக வழக்குமன்றத்திடம் விடுப்பிற்கான உத்தரவுகோரி மனுச் செய்யாவிடினும் வழக்கு மன்றம் நீதித் தீர்ப்பாணையை செல்லாநிலையாக்கலாம் அல்லது, தக்கதென்று தோன்றுகின்ற எந்த ஒரு உத்தரவினையும் வழங்கலாம் என்றுள்ளது. மாநிலச் சட்டத்தின்கீழ் நீதிமன்றம் நீதித் தீர்ப்பாணையை செல்லாநிலையாக்கலாம் என்றிருக்கிறது. நீதித் தீர்ப்பாணையின்மீது காப்பிலிருந்து விடுதலை செய்யப்பட்ட கடனாளியை மீண்டும் காப்புச் சிறைக்கு அனுப்பலாம். மேலும்

விடுதலையாக்கப்பட்ட சமயத்தில் அன்னருக் கெதிராக இருந்த எல்லா நடவடிக்கைகளும், விடுதலை செய்யப்படாதது போன்றே மீண்டும் தொடங்கப்படும். கடனாளர்களைப் பாதுகாக்கவேண்டி, அந்தச் சொத்தினைக் குறிப்பிட்ட நபரிடம் சேர்ப்பிக்க வழக்கு மன்றம் உத்தரவிடும். தங்கள் நிலுவைகளைப் (Dues) பெறும் பொருட்டு அந்தக் கடனாளர்கள் எந்த ஒரு நீதிமன்றத்திடமும் உரிமையியல் வழக்குத் தொடர வியலாது, நொடிப்புநிலைப் பொறுப்புரிமையரிடம் (Trustee in insolvency) தங்கள் கடன்களுக்கான ஆதாரங்களுடன் தங்களுடைய உரிமைகளை மட்டுமே அவர்கள் முன்னிலைப்படுத்தலாம்.

## விடுப்பிற்கான வழக்குமன்றத்தின் அதிகாரங்கள் (Power of the Court as to Discharge)

இரண்டு சட்டங்களின்கீழ் அந்தந்தச் சட்டத்தில் வரையறுக்கப்பட்டுள்ள கட்டுவாசகங்களில் வரம்புசெய்யப்பட்ட உளத்தேர்வின் அளவைத் தவிர அந்த நீதிமன்றம் விடுப்பிற்கான உத்தரவினை வழங்க அல்லது மறுக்க, அளவிலாத உளத்தேர்வு படைத்ததாக உள்ளது; தன் உளத்தேர்வினைச் செயற்படுத்தும் நீதிமன்றம்.

(i) முழுமையான விடுப்பு உத்தரவினை வழங்கலாம்;

அல்லது

(ii) முழுமையான விடுப்பு உத்தரவினை மறுக்கலாம்;

அல்லது

(iii) குறிப்பிட்ட கால அளவு வரையில் அந்த உத்தரவு அமுலாவதை நிறுத்திவைக்கலாம்;

அல்லது

(iv) நொடிப்புநிலையருக்குப் பின்னர் வரவேண்டிய ஊதியங்கள் அல்லது வருமானங்களைப் பொறுத்து அல்லது அன்னாரின் பின்னர்ச் சேர்க்கும் சொத்தினைப் பொறுத்து நிபந்தனைகள் உள்ளடக்கிய விடுப்பு உத்தரவினை வழங்கலாம்.

## உடனடியான, நிபந்தனையற்ற விடுப்பு உத்தரவு வழங்க முடியாததற்கான காரணங்கள்

கீழ்க்காணும் காரணங்கள் நிரூபிக்கப்படின், இரு சட்டங்களிலும், உடனடியான விடுப்பிற்கான முழுமையான உத்தரவிடுவதிலிருந்தும் நீதிமன்றம் தடுக்கப்படும். அந்தக் காரணங்கள் ஒவ்வொன்றும் நிரூபிக்கப்பட்டால், நொடிப்புநிலைச் சட்டத்தின்

கீழ்ச் 'சிறிய குற்றமாக' (Minor Offence) கொள்ளப்படும். இவை மாநகர்ச் சட்டம் பிரிவு 39(2)-லும், மாநிலச் சட்டம், பிரிவு 42-(1)லும் கூறப்பட்டிருக்கின்றது. சிறைத் தண்டனையுடன் கூடிய 'பெரிய குற்றத்தினின்றும் (Major Offence) இவை மாறு பட்டவை. இவை மாநகர்ச் சட்டம், பிரிவு 103லும், இந்தியன் பீனல் (தண்டனை) சட்டம், பிரிவு 44-லும் கூறப்பட்டவை.

காரணங்களாவன :

1. சொத்திருப்புப் (Assets) போதுமான மதிப்பில்லாத போது பிணையமில்லாத பொறுப்புகளின் (unsecured liablities) மதிப்பின்மீது மாநகர்கள் சட்டத்தின்கீழ் உரூபாவில் 25 புதுக் காசுகள் பங்காதாயமும் (dividend) மாநிலச் சட்டத்தின்கீழ் உரூபாவில் 50 புதுக் காசுகள் பங்காதாயமும் கடனாளர்கட்குச் செலுத்தலாம்; சொத்திருப்பு அவ்வளவு மதிப்பு இல்லாமற்போன தற்கான சூழ்நிலைகளுக்கு நொடிப்புநிலையர் பொறுப்பாக முடியாது என்பதற்கான உண்மையினை நீதிமன்ற மனதிசைவு (satisfaction) கொள்ளும்படி செய்யவில்லையாயின் சிறு குற்றமாகக் கருதப்படும். மாறாக வழக்குமன்றம் மனநிறைவு கொள்ளும் வகையில் கடனாளி நிரூபித்தால் விடுப்பினை மறுக்கவோ, நிபந்தனைகள் விதித்து உத்தரவிடவோ வழக்குமன்றத்திற்கு அதிகாரம் கிடையாது. Re Hamilton (1878) 9 Ch. D. 694 வழக்கிற்கு கூறப்பட்டுள்ளது.

2. நொடிப்புநிலைக்கடுத்த முன் மூன்றாண்டுகளுக்குள், அன்னார் நடத்திவந்த வியாபார வழக்கப்படியும், நியாயப்படியும் வியாபார சம்பந்தமான தொடர்புகளையும், பொருளாதார நிலையினையும் வெளிப்படுத்த போதுமான கணக்குப் புத்தகங்களை நொடிப்புநிலையர் வைத்திருக்கவில்லை என்பது குற்றத்தின்பாற் படும்.

3. தன் நொடிப்புநிலையர் என்பதற்கான நொடிப்பு நிலையினை அறிந்திருந்த பின்னரும் தொழில் தொடர்ந்தார் என்பது சிறு குற்றமாகும்.

4. நொடிப்புநிலையர், பணம் திருப்பிச் செலுத்தத் தன்னால் இயலும் என்பதற்கான நியாயமான அல்லது தகுந்த அடிப்படையான நம்பிக்கை இல்லாதிருந்தும் நொடிப்புநிலையர் நிரூபிக்கக் கூடிய கடன்களுக்கான ஒப்பந்தம் மேற்கொண்டார் என்பது ஒரு வகைக் குற்றமாகும்.

5. தன் பொறுப்புகளைத் தவிர்க்க சொத்திருப்புக் குறைந்ததற்கான அல்லது இழப்பிற்கான மனஇசைவிற்குப்

போதுமான காரணங்களைக் காட்ட நொடிப்புநிலையர் தவறினர் என்பதும் சிறு குற்றம் ஆகும்.

6. நொடிப்புநிலையர் தம் வியாபார விவகாரங்களில் ஆபத்து விளைவிக்கும் (Culpable) கவனமின்மையினுல் அல்லது நியாயமற்ற ஊதாரித்தனமான வாழ்க்கையினுல் அல்லது சூதாட்டத்தினுல் அல்லது தீமை பயக்கும், தகாத் துணிவான வர்த்தக முறைகளினுல் (Rash and Hazarduous Speculations) நொடிப்புநிலையினை வரவழைத்துக் கொண்டார். அல்லது நொடிப்புநிலைக்குள்ளானர் என்பது சிறிய குற்றத்தினைச் சாரும்.

7. நொடிப்புநிலையினை அடுத்து முன் மூன்று மாதங்களுக்குள் நொடிப்புநிலையரால் கொண்டுவரப்பட்டதனுல் அல்லது அன்னருக்கெதிராக முறையாகக் கொண்டுவரப்பட்ட உரிமையியல் வழக்கு ஒன்றில் எதிர் வழக்குரை செய்ததனுல் கடனளர்களில் எவரையும், தேவையற்ற, அல்லது அடாத வழக்குகளினுல் அவசியமற்ற செலவிற்கு நொடிப்புநிலையர் உள்ளாக்கினுல் சிறிய குற்றத்தின்பாற்படும். (மாநிலச்: சட்டத்தில் இத்தகைய விதிமுறை இல்லை.)

8. மனு கொடுக்கப்பட்ட நாளை அடுத்த மூன்று மாதங்களுக்குள்ளாக, நொடிப்புநிலையர், நிலுவைக் கடன்களைச் செலுத்த இயலாதபோது, கடனளர்களில் எவரேனும் ஒருவர்க்குத் தகாநிலை முந்தளிப்பு காட்டியபோது (Undue Preference).

9. நொடிப்புநிலையர் தம் சொத்து அல்லது கணக்குப் புத்தகங்களை :எடுத்துக்கொண்டு போய்விட்டாலும் அல்லது மறைத்தாலும் அல்லது யாதேனும் ஒரு மோசடி (Fraud) அல்லது ஒரவஞ்சகமான பொறுப்புரிமை அமைப்பு மீறல் (Fradu ent Breach of Trust) காரணமாகக் குற்றவாளியானுலும் சிறிய குற்றமிழைத்தவராகக் கருதப்படுவார்.

10. நொடிப்புநிலையர் முன்னர் ஒரு சமயத்தில் நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணைக்குள்ளாக்கப்பட்டிருப்பினும் அல்லது முன்னர்க் கடனளர்களுடன் கடன்தீர்வு உடன்பாடு அல்லது ஏற்பாடு செய்துகொண்டிருப்பினும் சிறியகுற்றம் செய்தவராக எண்ணப்படும். (இந்த விதிமுறை மாநகர்கள் சட்டத்தில் இல்லை என்பது கவனிக்கத் தகுந்தது.)

**விடுப்பு உத்தரவின் விளைவு (Effect of Order of Discharge)**

நொடிப்புநிலையரை, விடுப்பு உத்தரவானது கீழ்வருவன வற்றிலிருந்து விடுவிக்காது.

(1) அரசுக்குச் சேரவேண்டிய கடன்தொகை அல்லது

(2) மோசடியினால் அல்லது ஓரவஞ்சகமான பொறுப்புரிமை அமைப்பு மீறலில் தான் ஒரு நபராயிருந்ததனால் ஏற்பட்ட கடன் அல்லது பொறுப்புகள்; அல்லது

(3) குற்ற இயல் நடைமுறைச் சட்டத்தின் 488ஆவது பிரிவின்கீழ் வாழ்க்கைப் பொருளுதவிக்கான (Maintenance) பொறுப்பு மேற்சொன்ன வழிவகையில், விடுப்பு உத்தரவு ஒன்று, நொடிப்புநிலையரை, நொடிப்புநிலையில் நிரூபிக்கக்கூடிய எல்லா வகைக் கடன்களின்றும் விடுவிக்கின்றது. முழுமையான விடுப்பு உத்தரவு ஒன்று, நொடிப்புநிலையரை முன்பிருந்த தகுநிலையில் (Status) மீட்டுவைக்கும். அவர் மீண்டும் சுதந்திர மனிதராக ஆக்கப்படுகிறார். மேற்சொன்னவை தவிர ஏனைய எல்லாவகைக் கடன்களினின்றும் விடுவிக்கப்படுகிறான்.

விடுப்பு உத்தரவானது, நொடிப்பு நிலையருக்கெதிரான பிணையக் கடனாளர் ஒருவரின் உரிமைகளைப் பாதிக்காது. நொடிப்புநிலை நடவடிக்கைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்காது. கடனாளர்களிடையே சொத்திருப்புகளைப் பகிர்ந்தளிப்பதற்கான உத்தரவளிக்க நீதிமன்றம் தொடர்ந்து அதிகாரம் படைத்திருக்கும். நீதித் தீர்ப்பாணையின் போதும் நொடிப்புநிலையில் நிரூபிக்கத்தக்கதுமாக இருந்த, சேரவேண்டிய கடன்களினின்றும் நொடிப்புநிலையரை விடுப்பு உத்தரவு விடுவிக்கின்றது. விடுப்பு உத்தரவு வழங்கப்பட்டதும், அவ்வாறான உத்தரவு வழங்கும் சமயத்தில் தன்னை உற்று அடைந்த சொத்தினைப் பராமரிக்கும் சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணுநரின் அதிகாரம் பறிக்கப்படுவதில்லை. விடுப்பானது, நொடிப்புநிலையரைப் பாதுகாக்குமே தவிர, சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணுநரின் கைவசம் உள்ள சொத்திருப்புகளை பாதிப்பது அல்ல. இதனை, Arjundas v. Marachia Te ieni (1937) I ca. 127 வழக்கில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. உடன் கடனாளியை (Co debtor) அந்த உத்தரவு விடுவிக்காதது மட்டுமின்றிப் பிணையாளரையும் விடுவிக்காது. கடனாளர்க்குப் பிணையாளர் பணம் செலுத்தி விடின் விடுவிப்புப் பெற்ற பின்னர்க் கடனாளியின்மீது பிணையாளர் அந்தத் தொகைக்கு வழக்கிடல் முடியாதாயினும், செலுத்திய தொகையினை நிரூபிக்க உரிமை பெற்றவராகிறார். நொடிப்புநிலையுடன் தொடர்புடைய அல்லது தொடர்பற்ற எந்த ஒரு வன்முறைக் குற்றத்திற்காகவும் (Criminal offence) வழக்குத் தொடர்வதிலிருந்து, இத்தகைய விடுப்பு உத்தரவு, விலக்களிக்

காது. இந்தியாவிற்கு வெளியே விடுப்பு உத்தரவு அமுலாகாது என்பதனுல் சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணு நரால் எடுத்துக்கொள்ளப்படாத, வெளிநாட்டிலுள்ள சொத்தி னின்றும் கடனை மீட்டுப் பெறுவதற்கு விடுப்பு உத்தரவு தடுப்ப தில்லை. இதனை Lakshmiram v Poonamchand 45, Bom. 550 வழக்கிலிருந்து அறியலாம்.

விடுப்பிற்கான மனுமீது விசாரணை நடத்துகின்ற நீதிபதி யின் எண்ணத்தில், உடனடியான நிபந்தனையற்ற விடுப்பிற்கு மனுதாரர் அருகதையற்றவராக தோன்றினும், உத்தரவினை நிறுத்திவைக்கும் கால அளவினைத் தம்மால் நிர்ணயிக்கமுடியாத வராகக் கருதினுலும், விடுப்பு உத்தரவினை வழங்க மறுத்து உத்தர விடும்போது, நொடிப்புநிலையர் மீண்டும் மனுச்செய்துகொள்ளும் உரிமையினை அவர்க்கு வழங்கலாம். மாநகர்கள் சட்டத்தின் 42ஆவது பிரிவின்கீழ் இத்தகைய நிவாரணம் கிடைக்குமென்று Rekabla Umar (A.I.R. 1940 Sindh 185) வழக்கில் கூறப் பட்டுள்ளது. அப்படி செய்யப்படின், அந்த வழக்குமன்றத்தின் உத்தரவிற்கிணங்க நொடிப்புநிலையர் மீண்டும் மனுச்செய்து கொள்ளும் உரிமைப்படைத்தவராகின்ருர். விடுப்பு உத்தரவு முழுமையாக மறுக்கப்பட்டால் மீண்டும் மனுச்செய்கின்ற இத் தகைய உரிமை கிடையாது என்பது தெளிவு.

**விடுப்பிற்குப்பின் கடனாளியின் கடமைகள்**

மாநகர்கள் சட்டத்தின்கீழ் விடுக்கப்பட்ட நொடிப்பு நிலையர், தம் விடுப்பிற்கான உத்தரவு இருந்தாலும் சொத்தாட்சி அதிகாரி வேண்டுகின்றபடி அன்னாரிடமுள்ள சொத்தின் விளைவு களைப் பெறுவதிலும், அவற்றைப் பகிர்ந்தளிப்பதிலும் வேண்டிய அளவு துணைபுரிதல்வேண்டும். அங்ஙனம் செய்யத் தவறின் நீதி மன்ற அவமதிப்புக் (Comtempt of Court) குற்றத்திற்குள்ளாக நேரிடும். நீதிமன்றமும் தக்கதென்று கருதினுல் அன்னாரின் விடுப்பினை மறித்தழிக்கலாம் (Revoke). விடுப்பிற்குப் பின்னரும் மறித்தழிப்பிற்கு முன்னருமான இடைக்காலத்தில் செய்யப் பட்ட விற்பனை, சொத்துமாற்றம் அல்லது பணம் செலுத்தியது முதலானவற்றிற்கு ஊறு விளைவிக்காத முறையில் அத்தகைய உத்தரவிருக்கும்.

**விடுப்பு உத்தரவு மறித்தழிப்பு (Revocation of order of discharge)**

கீழ்க்காணும் மூன்று நிலைகளில், விடுப்பு உத்தரவு மறித்தழிக் கப்படும் என்று மாநகர்கள் சட்டத்தில் சொல்லப்பட்டுள்ளது.

1. 43ஆவது பிரிவில் கூறப்பட்டுள்ளபடி, சொத்தின் விளைவுகளைப் பெற்றுப் பகிர்ந்தளிப்பதில் சொத்தாட்சி அதிகாரிக்கு, நொடிப்புநிலையர் துணைபுரியத் தவறினாலும் ;

2. பின்னர் தான் சேர்த்த (After Acquired Property) தன் சொத்துப்பற்றிய விவரங்களடங்கிய விவரப் பட்டியலைத் தாக்கல் செய்யவேண்டிய கடமையில் உள்ளபோது நொடிப்பு நிலையர் அத்தகைய பட்டியல்களைத் தாக்கல் செய்யத் தவறினாலும் ;

3. நொடிப்புநிலையருக் கெதிராகவும், சொத்தாட்சி அதிகாரியின் சார்பிலும் தீர்மானிக்கப்படுகின்ற தீர்ப்புக்கு இசைவினைத் தெரிவிக்கவேண்டும் என்ற நிபந்தனையுடன் விடுப்பு உத்தரவு வழங்கப்பட்டிருப்பின் நொடிப்புநிலையர் குறித்த கால வரையறைக்குள் தன் இசைவினைத் தரத் தவறினாலும் விடுப்பு உத்தரவு மறித்தழிக்கப்படும்.

இயல் 11

# கடன்கள் குறித்து எண்பித்தல்

## (Proof of debts)

நபர் ஒருவர் நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணைக்குள்ளானல், அன்னரின் சொத்து, சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநர்க்கு சட்டப்படி மாற்றம் ஆகிவிடுகிறது. நொடிப்புநிலையராக அன்னர் நீதித் தீர்ப்பாணைக்குள்ளாகும் முன்னர் அன்னரின் சொத்துக்கெதிராகக் கடனுளர்கள் கொண்டிருந்த தீர்வழிகள் (Remedies) அதற்கப்புறம் பயன்படா. மாருகக் கடனுளர்கள் நொடிப்புநிலையரின் சொத்திருப்புகளினின்றும் பகிர்ந்தளிப்பில் சரியளவிலும், விகிதாச்சார முறையிலும் பங்கு பெறும் உரிமையினை அடைகின்றனர். அவ்விதம் பங்கீட்டில் தம் பங்குபெற விழையும் கடனுளர்கள் சட்டங்களில் குறிப்பிடப்பட்டுள்ள முறையில் தம் கடனை எண்பிக்கவேண்டும். நொடிப்பு நிலையில் எண்பிக்கத் தக்கதாக அத்தகைய கடன்களும் கடப்பாடுகளும் அமையவேண்டும். சொத்திருப்பில் பகிர்ந்து கொள்ளும் உரிமை கொண்ட கடனுளர்களின் கடன்களும், கடன்பொறுப்புகளும் (Liabilities) நொடிப்புநிலையில் எண்பிக்கக்கூடிய கடன்களாகக் (Debts provable in insolvency) கூறப்படுகிறது. நொடிப்புநிலையில் எண்பிக்கக்கூடிய தம் கடன் அல்லது கடப்பாட்டை எண்பிக்கத்தவறிய கடனுளர் ஒருவர், நொடிப்புநிலையரின் விடுப்புக்குப் பின்னர் வழக்கிடல் இயலாது. விடுப்பு உத்தரவினுல் அத்தகைய கடன் காலாவதியாகி விடுகிறது. நொடிப்பு நிலையில் எண்பிக்க இயலாத கடன்களும், கடப்பாடுகளும் விடுப்பு உத்தரவினுல் பாதிக்கப்படுவதில்லை.

**நொடிப்புநிலையரின் எண்பிக்க இயலாத கடன்களும், கடப்பாடுகளும்**

**(Debts and liabilities which are not provable in insolvency)**

அவை மூன்று வகையாகும் ;

1. ஒப்பந்தம் அல்லது பொறுப்புரிமை மீறல் காரணமாக, அல்லாமல் எழுந்த அறுதியிடா இழப்பீடுகளின் (Unliquidated damages) வகையினைச் சேர்ந்த கடன்கள்.

2. நொடிப்புநிலை மனு ஒன்று கடனாளிக்கெதிராக அல்லது கடனாளியினால் சேர்ப்பிக்கப்பட்டதை அறிந்த பின்னரும், கடனாளியுடன் எந்த ஒருவராலும் ஒப்பந்தம்கொண்ட கடன்கள் அல்லது கடப்பாடுகள் (மாநிலச் சட்டத்தில் இதுபோன்ற வரையறை காணவில்லை. அதன் விளைவாக இத்தகைய கடன்கள் எண்பிக்கக் கூடியவையாக உள்ளன).

3. வழக்கு மன்றத்தின் எண்ணத்தில் மதிப்பீட்டினை நியாயமாகக் கணக்கிட இயலாத நிகழ்வுசார்ந்த கடன்கள் அல்லது கடப்பாடுகள். (Contingent Debts and Liabilities)

Hardy v. Forther Gile 13. A C. 351 வழக்கில் நிகழ்வு சார்ந்த கடனும் எண்பிக்க முடியும் என்று கூறப்பட்டிருக்கிறது.

மேற்கூறிய மூன்று வகைகளேயன்றிச் சட்டத்தின் பொதுக் கொள்கையின்படி எண்பிக்க இயலாத குறிப்பிடத்தக்க வேறு கடன்களும் உண்டு. சட்ட முரணான அல்லது ஒழுக்க முரணான மறுபயன்மீது அமைந்த கடன்; சூதாட்டக் கடன்கள்; கடனாளர்களை மோசடிசெய்யும் எண்ணத்தின் விளைவில் உண்டான உடன்பாடுகள் ஆகியன இத்தகையனவாகும்.

மேற்கூறிய நொடிப்புநிலையில் எண்பிக்கக்கூடிய கடன்களைத் தவிர்த்து, நீதித் தீர்ப்பாணை உத்தரவுநாளன்று கடனாளி ஆளான (Subject) அல்லது நீதித் தீர்ப்பாணை உத்தரவிற்கு முன்னர்ச் சட்டப்பிணைப்பினால் (Obligation) அன்னாரின் விடுப்பிற்கு முன்னர்க் கடனாளி ஆளாகக்கூடிய தற்கால அல்லது வருங்கால, நிர்ணயிக்கப்பட்ட அல்லது நிகழ்வுசார்ந்த (Contingent) அனைத்துக் கடன்களும், கடப்பாடுகளும் நொடிப்புநிலையில் எண்பிக்கக்கூடியவையே ஆகும். எடுத்துக்காட்டாகப் பணி அல்லது தொழில் ஒன்று புரிந்தமைக்கான சரியீடு அல்லது நிறையீடு (compensation) இவ்வகையினைச் சார்ந்ததாகும்.

மாநகர்கள் சட்டத்தின் 46ஆவது பிரிவின்கீழ் எண்பிக்கக் கூடிய, எண்பிக்கவியலாத கடன்களைப்பற்றி தெளிவுபடுத்தப் பட்டிருக்கின்றன.

பொறுப்பிணை குத்தகை (onerous lease)யின் மீது பாத்தியதை மறுக்கும் பொறுப்புரிமையர் (Trustee) ஒருவரால் உண்டாக்கப்பட்ட வருங்கால இழப்பீட்டினை (prospective damage)

நிலச் சொந்தக்காரர் எண்பிக்கலாம் என்று ஒரு வழக்கில் கூறப்பட்டுள்ளது. உயிர்ப்புள்ள குத்தகையினை பொருத்துள்ள எந்த ஒரு கடப்பாட்டினையும் அல்லது இழப்பினையும் குத்தகையாளர் எண்பிக்கலாம். Re Muslim Bank of India A.I.R. 1940 Lal. 304 வழக்கில் நொடிப்புநிலையரால் மேற்கொள்ளப்பட்ட பங்குகளில் கேட்கப்படாத நிலுவைப் (calls) பணம் நொடிப்புநிலையில் எண்பிக்கக்கூடிய கடனாகும் என்று தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. கலைப்புக்குள்ளாகும் நிலையிலுள்ள சங்கத்தின் (Society) சொத்திருப்புக்குப் பொறுப்பு ஏற்பதாகக் கூறிய உறுப்பினரின் பொறுப்பு நிலை (Liability) எண்பிக்கக்கூடிய கடனாகும் என்று Abdul Ghani v. Anjuman I. Imdad. A.I.R. 1942 L.A.H. 237 வழக்கில் கூறப்பட்டுள்ளது. விதியின்பாற் கூறப்பட்ட விலக்குகளில் ஒன்றாக இல்லாதபோது, மோசடியினால் ஏற்பட்ட இழப்பீடுகளுக்கான உரிமைகள் எண்பிக்க இயலாதவை என In re Giles. 6. Mor 158 வழக்கிலிருந்து தெளிவாகின்றது. போட்டியான வியாபாரம் நடத்தக்கூடாது என்பதற்கான ஒப்பந்தத்தைப் பொறுத்து ஏற்படும் உரிமைகள் எண்பிக்க இயலாதவையாகும். சட்ட முரணான கடன்களும், நொடிப்புநிலைச் சட்டத்தின் கொள்கைக்கு எதிரிடையான கடன்களும் நொடிப்புநிலையில் எண்பிக்க இயலாதவை என்று Naoroji v. Kazi Siddic 29. Bom. 636 வழக்கில் தெளிவாகியுள்ளது. மாநிலச் சட்டத்தின்கீழ், மனுவிற்குப்பின் உள்ள கடன்களையும் எண்பிக்கலாம்.

### இரட்டை எண்பித்தல் (Double proof)

Bயிடம் A தம் சொத்தினை அடைமானம் செய்தார். பின்னர் தம் மனைவிக்கு அடைமான மீட்புரிமையை(Equity of redemption) மாற்றம் செய்து அடைமானக் கடனை விடுவிக்க அவளுடன் வரைமொழி உடன்பாடு (covenants) செய்தார். அடைமானக் கடன் செலுத்தப்படவில்லை. A நொடிப்புநிலையரானார். அடைமானக் கடனை எண்பிக்கவேண்டியது அடைமானம் பெற்றவரின் கடமையாகும். மனைவி, வரைமுறை உடன்பாட்டின் அடிப்படையில் எண்பிக்கவியலாது. அவ்வாறு அனுமதித்தால் இரட்டை நிரூபணம் என்றுகூறப்படும்.

### கடன்கள் எண்பிக்கும்முறை (Mode of proving debts)

மாநகர்கள் நொடிப்புநிலைச் சட்டத்தின்கீழ் எந்த ஒரு கடனாளரும், நீதித் தீர்ப்பாணை உத்தரவு வழங்கியபின் மிக விரைவில் தம்முடைய எண்பித்தலைத் தாக்கல் செய்யவேண்டும். அத்தகைய எண்பித்தலை ஆணையுறுதிப் பத்திரம் (affidavit) ஒன்றின்

மூலம் மெய்ப்பித்து, பதிவு செய்யப்பட்ட அஞ்சல்வழியாகவோ, நேரிடையாகவோ சொத்தாட்சி அதிகாரியிடம் தாக்கல் செய்ய லாம். ஆணையுறுதிப் பத்திரம், கடனாளராலோ அன்னாரின் சார்பில் அங்கீகரிக்கப்பட்ட எந்த ஒரு நபராலோ தயாரிக்கப் பட்டிருக்கலாம். ஆணையுறுதிப் பத்திரமானது, கடனாளரைப் பிணையமுள்ளவரா' அல்லது பிணையமில்லாதவரா என்பதனைத் தெளிவாக்கவேண்டும். சொத்தாட்சி அதிகாரி எந்த ஒரு காலத் திலும் கடனின் சான்றாக உறுதிகூறு சீட்டுகளைக் (Vouchers) காண்பிக்கும்படி கேட்கலாம். மாநிலச் சட்டத்தின் 33, 34ஆவது பிரிவின்கீழ் ஆணையுறுதிப் பத்திரம்மூலம் மெய்ப்பிக்கப்பட்ட கடன்பற்றிய பதிவு அஞ்சல் அல்லது நேரிடையாக நீதிமன்றத் திடம் தாக்கல் செய்தல்வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. ஆணையுறுதிப் பத்திரம் கடன்களின் விவரம் காண்பிக்கும் கணக்குப் பற்றிய பட்டியலுடன் பின்னர் உறுதிப்படுத்தக்கூடிய சீட்டு களையும் குறிப்பிட்டுள்ளதாக இருக்கவேண்டும், அல்லது காண் பிக்கவேண்டும். உறுதிகூறு சீட்டுகளைக் (Vouchers) கொண்டு வந்து காண்பிக்கும்படி நீதிமன்றம் எந்தக் காலத்திலும் கேட்க லாம். இந்தச் சட்டத்தின்கீழ், நொடிப்புநிலையரின் கடனாளர்கள் என்று கோருகிறவர்களைத் தீர்மானித்துக் கடனாளர்களின் (Schedule) பட்டியலைத் தயாரிக்கவேண்டும். சொத்தாட்சிப் பேணுநர் மொத்தக் கடனாளர்களுக்கும் பொறுப்புரிமையராக (Trustee) உள்ளார். எனவே, கலாவதியான கடன்களைச் கடன்களைச் செலுத்தவோ, அங்கீகரிக்கவோ, தீர்த்துவைக்கவோ அதிகாரங்கொண்டவரல்லர் என்பது Venkata Subbamma v. Venugopal 1951, I. M. D. L. J. 468 வழக்கில் நிலைநிறுத்தப் பட்டுள்ளது.

**பிணையக் கடனாளர்களால் எண்பித்தல் (Proof by secured creditors)**

பொதுவாகக் கூறுமிடத்துப் பிணையக் கடனாளர், நொடிப்பு நிலைக்கு புறம்பாக இருக்கிறார். அன்னார் தம்முடைய பிணையங் களை ஆதரவாகக் கொள்கிறார் என்றும், அல்லது ''தம் பிணையங்களின்மீது அவர் அமர்ந்துள்ளார்'' என்றும் கூறப்படு கிறது. அவற்றை எண்பிக்கத் தேவையில்லை என்பது தெளிவு. நீதிமன்றத்தின் தலையீடு இல்லாமல் விற்கும் அதிகாரம் படைத்த அடைமானப் பத்திரம் ஒன்றினால், நொடிப்புநிலை பற்றி கவனி யாது தம்முடைய அதிகாரத்தைப் பயன்படுத்தி அதனை விற்று, அந்த நாளில் நிலுவையாக உள்ள அசல், அந்த நாள்வரை ஒத்துக்கொள்ளப்பட்ட வட்டி விகிதம், செலவினங்கள் முதலான வற்றைச் செலுத்தப் பயன்படுத்தலாம். எஞ்சுகின்ற எதுவும்,

சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணுநரைச் சாரும். தன் கடன் முழுமையாகச் செலுத்தப் போதுமான பிணையம் உள்ள பிணையக் கடனுளர் எவரும் தன் கடனை எண்பிக்க முன்வருவது சாதாரணமாக நடைபெறக்கூடிய ஒன்றாகாது. பிணையம் போது மானதாக இல்லாதபோதுதான் குறைபடுவதை (deficiency) எண் பிக்க நொடிப்பு நிலையின்கீழ் அன்னார் வருவர். கீழ்க்காணும் விதி முறைகளைக் கடைப்பிடித்தாலொழிய அன்னார் நொடிப்புநிலையின் கீழ் எந்த ஒரு பயனையும் அடைய முடியாது. மேலும் பங்காதா யங்களில் பங்கு பெறுவதிலிருந்து அவர் விலக்கப்படுவார்.

**கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகளாவன :**

1. பிணையம், தம் கடன்களை முழுமையாகச் செலுத்தப் போதுமானதாக இல்லையெனில் பிணையக் கடனுளர் பிணையத்தி னின்றும் பெற்ற பின்னர் மிகுதிக்கு எண்பிக்கலாம். பிணயத்தை விற்றுவந்த தொகையைக் கடனுளரின் அசல், ஏற்றுக்கொள்ளப் பட்ட வட்டி விகிதம் இரண்டினையுங் கூட்டிவந்த தொகையி னின்றும் கழித்தால் எஞ்சியுள்ளது மிகுதித் தொகையாகும். செலவினங்கள் கணக்கில் எடுப்பதில்லை. நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர் சேர்ந்துள்ள வட்டியினை எண்பிக்க முடியாது.

2. வரையுரிமை (Surrender)

பிணையக் கடனுளர்க்குக் கிடைத்திருக்கின்ற இரண்டாவது வழிமுறையாவது :

தம் பிணையத்தைக் கடனுளர்களின் நன்மைக்காக உரிமை விடுத்து அல்லது உரிமை துறந்து பயன்பெறுதலாகும். இந் நிலையில் அவர், முழுக்கடனுக்கும் எண்பிக்கலாம். உரிமை விடுதல் அல்லது துறத்தல் மூலம் பிணையக்கடனுளர் பிணையமில் லாத கடனுளரின் நிலையினை எய்துவர்.

Union Bank of Bijapur v. Bhimrao 31.Bom. L.R. 463 என்ற வழக்கில் இதுபற்றிய விளக்கம் கிடைத்துள்ளது.

3. 'பிணையக் கடனுளர், பிணையத்தினின்றும் தம் கடனைப் பெறுமலும், உரிமை துறக்காமலும் இருப்பின், பங்கு ஆதாயத்திற் காக நிற்கும் முன்னர் தம் நிருபணத்தில் தம் பிணைய விவரங்கள், எந்த நாளில் அவர்க்குக் கொடுக்கப்பட்டது, அவர் மதிப்பிடும் தொகை அளவு முதலானவற்றைத் தெரிவிக்கவேண்டும். பின்னர் அவரால் மதிப்பிட்ட தொகையினைக் கழித்து மிகுதியுள்ள வற்றைப் பொறுத்துப் பங்கு ஆதாயம் பெற உரிமை பெறுவார்.

**வருங்காலத்தில் செலுத்தக்கூடிய கடன்கள் (Debts payable at a future date)**

கடனுளர், தற்காலத்தில் செலுத்தவேண்டிய கடன்கள் மட்டுமன்றி வருங்காலத்தில் செலுத்தவேண்டிய கடன்களையும் நிகழ்காலத்தில் செலுத்தவேண்டிய கடன்களைப் போன்றே எண்பிக்கலாம். கடன் செலுத்தவேண்டிய காலத்திற்கும், பங்காதாயம் தீர்மானித்து அறிவிக்கப்பட்ட காலத்திற்கும் இடையிலுள்ள காலத்திற்கான ஏற்கப்பட்ட வட்டியின் 6 சதவிகிதம் தள்ளுபடி செய்து கழித்துக் கணக்கிட்டு மற்றக் கடனுளர்களுக்குச் சரியாகப் பங்கு ஆதாயங்களைக் கடனுளர் பெறலாம்.

**பரிமாறும் கணக்குகளும் எதிரிடை வாதமும் (Mutual dealings and set off)**

இரண்டு சட்டங்களிலும், நொடிப்பு நிலையர்க்கும் கடனுளர்க்குமிடையில் பரிமாறும் கணக்குகள் இருப்பின், அத்தகைய பரிமாறும் கணக்குகளின் வழியாக ஒவ்வொருவர்க்கும் சேரவேண்டிய தொகையினைக் கணக்கிட்டு எண்பிக்கவோ கடனென்றை எண்பிக்கும் உரிமையைக்கோரவோ வழிவகையுள்ளது. ஒருவர்க்குச் சேரவேண்டிய தொகை அடுத்தவர்க்குச் சேர வேண்டிய தொகைக்கு எதிரிடை கோரிக்கையாக வைக்கப்பட்டு, மிகுதியுள்ள தொகையினைத் தவிர அதிகப்படியாகக் கோருகின்ற உரிமையிலும் அல்லது செலுத்தவேண்டிய கடப்பாட்டிலும் இருவரும் இல்லை என்பது தெளிவாகும்.

நொடிப்புநிலையர்க்குச் சொந்தமான பொருள்கள் கடனுளர் ஒருவரின் பாதுகாப்பில் இருந்து, அன்னூர்க்கு நொடிப்பு நிலையர் கடன் பாக்கி வைத்திருந்ததன் காரணத்தினுல் பொருள் திருப்பிக்கோரும் உரிமைக்கு எதிரிடை கோரிக்கையாகப் பொருள்களை உரிமை கொண்டாட முடியாது. பொருளின் சொந்தக்காரர் பொருளினை முன்பிருந்தவாறே மீண்டும் பெற உரிமை படைத்தவராவார். அதுபோன்றே, குறிப்பிட்ட காரியத்திற்காகக் கொடுத்துவைக்கப்பட்ட பொருள்கள் அல்லது பணம், அக்காரியம் நிறைவேற்றப் படாததினுலோ, நிறைவேற்றப்பட்டதின் பின்னர் மிகுதியுள்ள பணத்தினைப் பொறுத்தோ எதிரிடை கோரிக்கை வைக்க எந்தவிதமான உரிமையும் கிடையாது.

**கடன்களின் முந்துரிமை (Priority of Debts)**

நொடிப்புநிலையில் சொத்து பகிர்ந்தளிக்கப்படும்போது குறிப்பிட்ட கடன்கள், தங்களுக்குள்ளாகச் சமநிலை கொண்டிருப்

பினும் நொடிப்புநிலையில் வேறு சில கடன்களின்மீது முந்துரிமை கொண்டது என்பது கீழ்வருவனவற்றால் அறியலாம் :

1. அரசு அல்லது எந்த ஓர் உள்ளாட்சி நிறுவனத்திற்குச் சேரவேண்டிய கடன்கள்.

2. நொடிப்புநிலை மனுக்கொடுக்கப்பட்ட நாள் முன்னதான 4 மாதங்களுக்குள் நொடிப்புநிலையருக்குப் பணி செய்ததன் காரணமாக எந்த ஓர் எழுத்தர், பணியாளர் அல்லது தொழிலாளர்க்கும் கிடைக்கக்கூடிய ஊதியத்தொகை அல்லது இது ஒவ்வோர் எழுத்தர்க்கும் உரூபா 300-க்கு மிகாமலும், பணியாளர் அல்லது தொழிலாளர் ஒவ்வொருவர்க்கும் உரூபா. 100-க்கு மிகாமலும் இருத்தல் ஆகும். மாநிலச்சட்டத்தின்கீழ், ஓர் எழுத்தர், பணியாளர் அல்லது தொழிலாளர்க்கும் கிடைக்கக்கூடிய ஊதியத்தொகை அல்லது கூலி ஒவ்வோர் எழுத்தர்க்கும் அல்லது பணியாளர்க்கும் மொத்தமாக அவர்கள் தொண்டிற்கென உரூபா. 20-க்கு மிகாமலும் இருத்தல் ஆகும்.

3. மாநகர்கள் சட்டத்தின்கீழ், நிலச்சொந்தக்காரருக்கு நொடிப்புநிலையரிடமிருந்து சேரவேண்டிய ஒருமாத குத்தகைக்கு மிகாமல் உள்ள குத்தகை பாக்கி கடன்களில் முந்துரிமைகொண்டவைகளில் ஒன்றாகும்.

மாநிலச் சட்டத்தின்கீழ் அதுபோன்று இல்லை. மேற் குறிப்பிட்ட கடன்கள் தங்களுக்குள் சரிவிழுக்காட்டில் கருதப்பட்டு முழுமையாகச் செலுத்தப்படவேண்டும். சொத்திருப்பு, முழுமையாகச் செலுத்த போதுமானதாக இல்லாமற்போனால் அவற்றிற்குள் விகிதாச்சாரப்படி செலுத்தப்படவேண்டும். மேற்கூறிய அனைத்து முந்துரிமைக் கடன்களும் செலுத்தப்பட்ட பின்னரே (அதற்கு முன்னதாக அன்று) பட்டியலில் (Schedule) காணப்படும் அனைத்துக் கடன்களும் எந்த ஒரு முந்துரிமையினையும் இல்லாது, விகிதாச்சாரப்படி செலுத்தப்படவேண்டும். மேற்சொன்ன கடன்கள் அனைத்தும் செலுத்திய பின்னரும் தொகை எஞ்சுமானால் நீதித் தீர்ப்பாணை உத்தரவு நாளிலிருந்து கடன்கள் தொகைக்கு 6 சதவிகித வட்டி செலுத்துவதற்குப் பயன்படுத்தப்படும். மேற்சொன்ன அனைத்து உரிமைகளும் செலுத்தப்பட்ட பின்னரும் ஏதேனும் தொகை எஞ்சுமானால் நொடிப்புநிலையர்க்குத் திருப்பிக் கொடுக்கப்படும்.

### கடனாளர்களிடையே பகிரமுடியாத சொத்து (Property not divisible among Creditors)

கடனாளர்களிடையே பகிர்ந்துகொள்ள முடியாத சொத்துகள் இருவகைப்படும்.

அவையாவன :

1. அடுத்தவருக்காகப் பொறுப்புரிமையின் அடிப்படையில் நொடிப்புநிலையர் வைத்திருக்கும் சொத்து.

**நொடிப்புநிலையர், பொறுப்புரிமையர் என்ற முறையில் வைத்துள்ள சொத்து**

மாநகர்கள் சட்டப் பிரிவு 52 (1) லும் மாநிலச் சட்டம் 28 (5) லும் இதனைப்பற்றி தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. நொடிப்புநிலையர், பிறருக்காக உள்ள பொறுப்புரிமை அமைப்பின் (Trust) காரணமாக, வைத்துள்ள சொத்தில் அவர் பயனுறும், நலன் (Beneficiary interest) எதுவும் இல்லை. ஆதலால், அச் சொத்து கடனுளர்களிடையே பிரிக்க இயலாததாகும். இங்கிலாந்திலும் இந்தியாவிலும் சட்டம் ஒன்றேபோல் உள்ளது. எங்ஙனம் சொத்து சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணுநர்க்குச் செல்லாதோ அஃதே போன்று நொடிப்புநிலையர் நம்பகத் தகுதியின் (Fiduciary capacity) காரணமாக அன்னுர் ஒப்படைபெறுபவராக (Bailee) தரகராக (Broker) ஏலம் விடுபவராக (Auctioneer) அடுத்தவருக்காகப் பொருள்கள் வாங்கி விற்பவராக (Factor) சட்ட முகவராக (Solicitor) இருந்து நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணைக்குள்ளானுல், அந்தச் சொத்துகள் சொத்தாட்சி அதிகாரியை உற்றடையாது. முதல் வரிடம் (Principal) உற்றடையும். முதல்வருக்காக முகவர் வசூலிக்கும் பணமும் இம் முறையிலேயே முதல்வரைச் சேரும்.

**குறித்தவகை ஒதுக்கீடு (Specific Appropriation)**

கடன், நீதி அல்லது பொருளை ஒரு குறிப்பிட்ட வகைக்காக ஒதுக்கீடு செய்யப்பட்டிருந்தால், அது நேர்மை நெறிவழி உரிமை மாற்றம் (Equitable Assignment) போன்று கொள்ளப்படும். அவ்வாறு செய்தவர் நொடிப்புநிலையரானுல், உரிமைமாற்றம் பெறுபவர் (Assignee) அம்மாதிரி மாற்றம் செய்யப்படும் பொருளிலிருந்து, தன் கோருரிமைக்குத் தீர்வு காணலாம். மாற்றம் செய்பவர், மாற்றம் பெறுபவரின் பொறுப்புரிமையராகக் கருதப்படுவார். இங்கிலாந்து சட்டத்திற்கும் இந்தியச் சட்டத்திற்குமிடையே ஒரே ஒரு வேறுபாடு உள்ளது. தொடர்தகு பத்தியம் (actionable claim) ஒன்றினை, இந்தியச் சட்டத்தில், எழுத்துமூலமாக உரிமை மாற்றம் செய்து, உரிமை மாற்றம் செய்பவரால் கையெழுத்திடப்படவேண்டும். நொடிப்புநிலைச் சட்டத்திற்கு மோசடியாக, நேர்மைநெறி உரிமைமாற்றம் இருக்கக் கூடாது.

**Ex Parte waring** விதி : நேர்மைநெறி உரிமை மாற்றம் ஏற்பட, உரிமை மாற்றம் செய்பவர், உரிமை மாற்றம் செய்பவரிடையே ஒப்பந்தத்தினுலோ முரண்தடையினுலோ (Estoppel) சார்புறவு (Privity) ஒன்றிருக்க வேண்டுவது அவசியமாகிறது. இதற்கு ஒரு விதிவிலக்கு (Ex Parte waring (1815) 19. *ves*. 345, **34 E.R. 545** வழக்கில் நிர்மாணிக்கப்பட்டது.

மாற்றுச்சீட்டு ஒன்றை ஏற்பவரிடம் (Acceptor Bill of Exchange) வரைபவரால் (drawer) பிணையம்ஒன்று வைக்கப்பட்டது. முதிர்வு காலத்தில் (Maturity) மாற்றுச் சீட்டின் பணம்செலுத்துபவர்களைக் குறித்த வகையில் ஒதுக்கீடு செய்யப்பட்டு இருவரிடையேயும் ஒப்பந்தம் மேற்கொள்ளப்பட்டது. ஏற்பவர், வரைபவர் இருவரும் நொடிப்புநிலைக்குள்ளானபோது, மாற்றுச் சீட்டுடையவர், (Holder of Bill) ஒப்பந்தத்தில் ஒரு நபராகவோ சார்புறவு உள்ளவராகவோ இல்லாமலிருந்தும், ஏற்பவரிடம் வைக்கப்பட்டுள்ள பிணையத்தினைப் பெற உரிமையுடையவராவார் என இந்த வழக்கில் தீர்மானிக்கப்பட்டது. மூன்றும் நபரின் நலனுக்கு இவ் விதி உதவுகிறது. இவ் விதியினைப் பொருத்திப் பார்க்க, இரட்டை நெடிப்புநிலை (double Insolvency) ஏற்பட்டிருக்க வேண்டும். ஏற்பவரும் வரைபவரும் நொடிப்புநிலையராக்கப்பட்டிருக்க வேண்டும். அன்னாரின் சொத்திருப்புகள் நியாயமன்றத்தின் அதிகாரத்தின் (Judicial Administration) கீழ் இருக்கவேண்டும். நியாயவழி நொடிப்புநிலைகள் ஏற்பட்டிருக்க வேண்டும் என்கிற அவசியமில்லை. மேலும் இரண்டு சொத்திருப்புகளுக்கும் எதிராக எண்பிக்க இரட்டை எண்பிக்கை செய்யும் உரிமை இருக்கவேண்டும். மாற்றுச் சீட்டினைச் சந்திக்க பிணையங்களில் குறித்தவகை ஒதுக்கீடு இருக்கவேண்டும். மேற்கூறிய நிபந்தனைகள் அனைத்தும் நிறைவாகிவிடின் மாற்றுச் சீட்டை உடையவர், மாற்றுச் சீட்டைப் பிணையங்களினின்றும் செலுத்த உரிமை பெற்றவராவார். குறித்த காரியத்திற்காக நொடிப்புநிலையரின் கைவசம் உள்ள சொத்து, நொடிப்பு நிலையின்போது சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநரிடம் செல்லாது; ஆனுல் பொறுப்புரிமை அமைப்பு ஒன்றில் வைக்கப்படும்.

வங்கியர் (Banker)

வாடிக்கையாளர் (customer) ஒருவரால் தம் வங்கியின் நடப்புக்கணக்கில் (Current Account) போடப்பட்ட பணமானது, வங்கியர்க்கு வாடிக்கையாளரால் கொடுக்கப்பட்ட கடனுகச் சாதாரணமாக எண்ணப்படுகிறது. அவர்களிடையேயுள்ள உறவானது கடனுளிக்கும் கடனுளருக்கும் இடையேயுள்ள உறவு

போன்றது. எனவே, இதனைப் பொறுத்து வங்கியர் பொறுப்புரிமையராகவோ, முகவராகவோ கருதப்படமாட்டார். வங்கியர் நொடிப்புநிலைக்குள்ளானல், வாடிக்கையாளர் நொடிப்பு நிலையில் எண்பித்து, ஏனைய கடனுளர்களுடன் விகிதாச்சாரத்தில் பங்காதாயம் பெறமுடியும் என்பதை (Ex Parte Lloyd (1904) 91 L.T. 665 வழக்கில் கூறப்பட்டுள்ளது. ஆனல், மாற்றுச் சீட்டுகள் அல்லது காசோலைகள் (Cheques) வங்கியர்க்கு அனுப்பப் படும்போது, அன்னர் அதனை வசூலிக்க, அல்லது பணம் செலுத்த முற்படும்போது முகவராகப் பணியாற்றுகின்ருர். அப்பொழுது ஒரு பொறுப்புரிமை அமைப்பு (Trust) தோன்றுகிறது. எனவே சொத்து வங்கியர் நொடிப்புநிலை எய்துகின்றபோது, சொத்தாட்சி அதிகாரியிடம் உற்றடையாது.

2. பகிர்ந்துகொள்ள இயலாத அடுத்த இளம் தொழில் சம்பந்தப்பட்ட கருவிகள், அணியும் உடைகள் மற்றுமுள்ள அவை போன்ற சொத்துகள் இரண்டு சட்டங்களிலும் இவற்றை கடனுளி வைத்துக்கொள்ள வழிவகைகள் செய்யப்பட்டுள்ளன.

மாநகர்கள் சட்டத்தில் அத்தகைய சொத்து என்பது, தொழிற் சம்பந்தப்பட்ட கருவிகள், அத்தியாவசியமான உடுக்கும் உடைகள், படுக்கை, சமையல் பாத்திரங்கள், தன்னுடைய, தன் மனைவி, தன் குழந்தைகளினுடைய மொத்தமாக ரூ. 30க்கு மிகாத மதிப்புடைய மரச்சாமான்களும் ஆகும்.

உரிமை இயல் சட்டத்தில் பற்றுகை செய்வதிலிருந்தும் (Attachment) விலக்களிக்கப்பட்டவை மாநிலச் சட்டத்திலும் விலக்களிக்கப்பட்டுள்ளன.

அந்தச் சட்டத்தின் 60ஆவது பிரிவில் விலக்களிக்கப்பட்டவை யாவன:

I. 1. இன்றியமையாத உடுக்கும் உடைகள்

2. சமையல் பாத்திரங்கள்

3. படுக்கைகள்

4. தீர்ப்புக் கடனுளியின், அன்னர் மனைவியின் குழந்தைகளின் படுக்கைகள்

5. வழக்கத்திலுள்ள மதச்சடங்கின் காரணமாக பெண் ஒருவரால் கழற்றக்கூடாத சொந்த அணிகலன்கள்.

II. கலை அல்லது தொழிலில் உள்ளவரின் கருவிகள். தீர்ப்புக் கடனுளி ஒரு உழவராக இருப்பின் அன்னரின் உழுகருவிகள் முதலானவை.

III விவசாயிக்குச் சொந்தமானதும் விவசாயத்திற்காகவும், நிலத்தைப் பயிரிடும் பொருட்டும் மேற்கொண்டுள்ள வீடு, மற்றும் கட்டடங்கள்.

சிறிதளவு நிலங்கொண்டு உழுது பயிரிட்டு வாழ்வதையே முக்கிய வழியாகக் கொண்டுள்ள உழவரே விவசாயியாகக் கருதப் படுவார்.

கடனாளர்களிடையே பகிர்ந்தளிக்கக்கூடிய சொத்து (Property Divisible Amongst Creditors)

I. நொடிப்புநிலைத் தொடக்கத்தில் அவர்க்குச் சொந்தமாயிருந்த சொத்து; மாநகர்கள் சட்டத்தின் 17ஆவது பிரிவில் சொத்தாட்சி அதிகாரியை அடைகின்ற சொத்துகளைப்பற்றிய விவரம் கொடுக்கப்பட்டுள்ளது.

(அ) Grey v. Walker. 40. Cal. 523 என்ற வழக்கில் நொடிப்புநிலையர் செய்த ஒப்பந்தம் ஒன்றின் நலன் அல்லது பொறுப்பு, சொத்தாட்சி அதிகாரியினை அடையும் என்றும், நியாய கால வரம்பினுக்குள், ஒப்பந்தத்தை ஏற்கின்றாரா? அல்லது நிராகரிக்கின்றாரா? என்பதனை அந்த அதிகாரி தேர்வு செய்ய வேண்டும் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

(ஆ) Wilson v. United Counties Bank (1920) A. C 102 வழக்கில் நபர் தீங்கு (Personal Injury) காரணமாக நொடிப்பு நிலையர் பாதிக்கப்பட்டு அதனால் கிடைக்கக்கூடிய இழப்பீடு, கடனாளர்களிடையே பங்கிடும் வண்ணம், சொத்தாட்சி அதிகாரியினைச் சேராது என்று கூறப்பட்டது.

(இ) Backham v. Drake (1849) 2 H.L.C. 579 வழக்கில் ஒப்பந்த முறிவினால், பாதிப்புக்குள்ளான நொடிப்புநிலையரின் நடவடிக்கை எடுக்கும் உரிமை (அத் தீங்கு அவருடைய உடலையோ, மனதையோ மட்டும் பற்றுவதாயிருந்தால்) சொத்தாட்சி அதிகாரிக்குக் கிடையாது என்பது வலியுறுத்தப்பட்டது. அந்த வழக்கிலேயே நொடிப்புநிலையரின் சொத்தினைப் பொறுத்து ஏற்படுகின்ற நேரடி நடவடிக்கை உரிமை சொத்தாட்சி அதிகாரிக்கு உண்டு என்றும் விளக்கப்பட்டது.

(ஈ) Re Bright's Settlement, (1880) 13 ch. D. 413 வழக்கில், நொடிப்புநிலையரைச் சார்ந்த எஞ்சுரிமை (Remainder) பின்னடைவுரிமை (Reversionary Interest) முதலானவை, நொடிப்புநிலையில் சொத்தாட்சி அதிகாரியை அடைகின்றன என்று எடுத்துக்காட்டப்பட்டது.

(உ) Shridhar v. Krishnaji 12 Bom. 272 வழக்கில் அடைமான மீட்புரிமையும் (Equity of Redemption) அவ்வாறே சொத்தாட்சி அதிகாரியைச் சேரும் என்று விவரிக்கப்பட்டது.

(ஊ) Penson v. Moon (1866) 15 L.T. 444 வழக்கில் நொடிப்புநிலையர்க்குச் சேரவேண்டிய ஏட்டு நிலுவைகள் (Book Deb s) சொத்தாட்சி பேணுநர்க்குச் செல்லும் என்று தீர்ப்புக் கூறப்பட்டது.

(எ) Re. stokes, (1919) 2 K.B. 256 வழக்கில் நொடிப்பு நிலையர் தம் ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தத்தினுல் பெறும் பயனும் சொத்தாட்சி அதிகாரியை அடைகின்றது என்று சொல்லப் பட்டது.

(ஏ) Hammond and Co v. Malcolm & Co. (1892) T. L. R. 124 வழக்கில் வாணிகக்குறி (Trade Mark) அல்லது ஆக்குப்பொருள் உரிமை (Patent) ஒன்றினுக்கு நொடிப்புநிலையர், பதிவுசெய்யப்பட்ட உரிமையாளராக இருப்பின், அத்தகைய உரிமைகளும் அன்னுரின் நொடிப்புநிலையின்போது சொத்தாட்சி அதிகாரியினை அடைகின்றது என்று தீர்ப்பாயிற்று.

(ஐ) சொத்துப் பேணுநர் (Receiver) ஒருவர் நொடிப்பு நிலைக்குள்ளானுல் அவரால் பிணையமாக வைக்கப்பட்ட பணத்தின் மீது (Security Deposit) சொத்தாட்சி அதிகாரிக்கு உரிமை இல்லை என்பதனை Chitrabari Ltd v. Keshar Acham 53 C.A.L. W. N. 832 வழக்கிலிருந்து அறியலாம்.

(ஒ) பணத் தீர்ப்பாணைக்கு (Money Decree) எதிராக மேன்முறையீடு செய்யும் உரிமை (Right of Appeal) சொத்துப் பேணுநரை அடையாது என்றும், அவ்வாறு செய்ய அவர் மறுத் தால் நொடிப்புநிலையர் Govindji v. Jadavji, A.I.R. (1953) SOUR 82 வழக்கில் தெளிவாக்கப்பட்டது.

(ஓ) ஆனுல், மோசடியின் காரணமாகப் பணத் தீர்ப்பாணையைத் தள்ளிவைக்க, நடவடிக்கை மேற்கொள்ளும் உரிமை சொத்தாட்சி அதிகாரியிடம் மாறும் என்று Rustomji v. Byramjee, 36 Bom. L.R. 76 வழக்கில் தீர்ப்பாயிற்று.

(ஔ) Morgan v. Grey 1933) I.ALL. E R. 213 வழக்கில் வாக்களிக்கும் உரிமை சொத்தாட்சி அதிகாரியினைச் சேராது என்று கூறப்பட்டது.

(ஃ) (Fool kumari) v. Khirod, (1927) CAL. 474 வழக்கில், கடனுளிக்காக, பெயரிரவலர் (Benamidar) ஒருவரால் ஏற்கப்பட்டிருக்கும் சொத்து சொத்தாட்சி அதிகாரியினைச் சேரும் என்று தீர்ப்பு நல்கப்பட்டது.

2. நீதித் தீர்ப்பாணை உத்தரவு நாளுக்குப் பின்னரும், அவருடைய விடுப்பிற்கு முன்னரும் அவரால் சேர்க்கப்பட்ட அல்லது அவர் கைவசத்திலான சொத்து.

3. நொடிப்புநிலை நடவடிக்கைகள் தொடக்கத்தின்போது அல்லது விடுப்பிற்கு முன்னர் அவருடைய நன்மையை உத்தேசித்து அவரால் அதிகாரம் செலுத்தக்கூடிய, அனைத்து அதிகாரங்கள் கூடியதுமான சொத்து. மாநில நொடிப்புச் சட்டத்தில் இது சேர்க்கப்படவில்லை.

4. நொடுப்புநிலையரின் உத்தரவுக்கடங்கிய அல்லது அவரால் உடைமை நீக்கம் செய்யக்கூடிய அல்லது அவர் கைவசம் கொண்டுள்ள பொருள்கள்.

### II. பின்னர்ச் சேர்த்த சொத்து (After Acquired Property)

நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னரும், விடுப்புக்கு முன்னரும் நொடிப்புநிலையர் சொத்துசேர்க்கலாம். நொடிப்புநிலைக்குப் பின்னர் வியாபாரம் நடத்தலாம். அதன் நடைமுறையில் பண மதிப்புள்ள உரிமைகள் (Pecuniary Rights) அல்லது சொத்துச் சேர்க்கலாம். மேலும் அவர் மரபுரிமைவழி (Inheritance) அல்லது நன்கொடை மூலமாக அல்லது அறுதியாவணத்தின் வழியாக (Settlement), அல்லது விருப்பாவணம் (will) ஒன்றினுல் சொத்துப் பெறலாம். அத்தகைய அனைத்துச் சொத்தும் கடனாளர்களிடையே பிரித்துக் கொடுக்கப்பட வேண்டி சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநரை உள்ளடைகின்றன.

### III சொந்தச் சம்பாத்தியங்கள் (Personal Earnings)

சொந்த உழைப்பு அல்லது தன்னை வருத்திக்கொண்டு நொடிப்பு நிலையர் சம்பாதிக்கின்ற கூலி மற்றப்பணம் முதலானவை அன்னுரின் சொந்தச் சம்பாத்தியங்களாகின்றன. இத்தகைய சம்பாத்தியங்கள், சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணுநரை அடையாது என முன்னர்க் கருதப்பட்டது. ஆனுல், இப்பொழுது தீர்மானமாக நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர் விடுப்புக்கு முன்னர் நொடிப்புநிலையர் சம்பாதிக்கும் சொந்தச் சம்பாத்தியங்கள் அனைத்தும் மற்றச் சொத்துகளைப் போலவே நொடிப்புநிலை பொறுப்புரிமையரிடம் (Trustee in bankruptcy) சேரும். நொடிப்புநிலையருடையதும் அன்னுரின் குடும்பத்தினரை பராமரிக்கத் தேவையான பகுதிபோக மீதியுள்ள அனைத்தும் அவ்வாறு சேரும் என்பது தெளிவு Re Roberts (1900 Q. B. D) வழக்கு இதனை நன்கு விளக்கியுள்ளது. நொடிப்புநிலையரின் குடும்ப பாரமரிப்புக்குப்போக எஞ்சியுள்ளதே சொத்தாட்சி அதிகாரியைச்

சேரும். எஞ்சியுள்ளது ஏதும் இல்லையெனின் சொத்தாட்சி அதிகாரியை எதுவும் சேராது. இதிலிருந்து நொடிப்புநிலையருடையதும், அன்னார் குடும்பத்தினரையும் பராமரித்ததுபோகப் போதுமான அளவு சம்பாத்தியம் இருக்கும்போதுதான் சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநர் தலையிட முடியும் என்பது வெள்ளிடைமலையாகும். அதே போன்று விடுவிக்கப்படாத சேமிக்கும் நொடிப்புநிலையரின் கைக்கு வருங்காலச் சேமிப்புப் பணம் (Provident fund) வந்ததும், அது நொடிப்புநிலையரின் சொத்தாகிச் சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணுநரிடம் உள்ளடையும். இதனை Walchand v. Williams 37, B.O. M.L.R. 494; Imperial Bank Co-op. Society v. Santosh Kumar 143 C.W.N. 1004. வழக்குகளில் விளக்கப்பட்டுள்ளது. அதனைப் பொருத்துத் தலையிட அவர்களால் முடியும். ஓய்வுபெற்ற (Retired) நொடிப்புநிலையரின் ஓய்வூதியமும் (Pension) திங்கள் தோறும் செலுத்துதலாகும்போது கடனாளர்களின் பயனுக்காகும் சொத்தாகின்றது.

### IV. நொடிப்புநிலையரின் ஏனைய வருமானம், ஊதியம், சம்பளம், (Salary, pay, and other income of Insolvent)

நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னரும் சொத்தாட்சி அதிகாரி, நீதிமன்றத்தின் அதிகாரம் பெறுமல் நொடிப்புநிலையரின் சம்பளம் அல்லது ஊதியத்தின் பகுதியினைப் பெற இயலாது. அத்தகைய உத்தரவு வழங்கப்படும் வரையில், சம்பளம் அல்லது ஊதியத்தின் பகுதியினைப் பெற இயலாது. அத்தகைய உத்தரவு வழங்கப்படும் வரையில், சம்பளம் அல்லது ஊதியத்தின் மொத்தத் தொகையும் நொடிப்பு நிலையரைச் சார்ந்ததாகும். தீர்ப்பாணை நிறைவேற்றத்தின் அடிப்படையில் நீதிமன்றம் எந்த அளவிற்கு உத்தரவிடுமோ, அந்த அளவினதான நொடிப்புநிலையரின் சொத்து அல்லது ஊதியம் மட்டுமே பற்றுகைக்கு உள்ளாகும் என்று மாநகர்கள் சட்டம் கூறுகின்றது. மேற்சொன்ன ஊதியம் அல்லது சம்பளத்தைத் தவிர்த்து, நொடிப்புநிலையர் பெறுகின்ற வருமானம் அல்லது சம்பளத்தைப் பொறுத்து நீதிமன்றம் அப்போதைக்கப் போது தக்கது என்று கருதுகின்ற அளவில் சொத்தாட்சி அதிகாரியிடம் செலுத்த ஆணையிடும். கடனாளர்களிடையே பங்கிட வேண்டி எந்த அளவுக்குத் தேவையோ அந்த அளவுக்குப் பற்றுகை செய்ய தீர்ப்பாணை நிறைவேற்றத்திற்கும் உத்தரவிடும். இதைப் போன்ற குறிப்பிடப்பட்டுள்ள கட்டுவாசகம் மாநிலச் சட்டத்தில் காணவில்லை. எனவே, அத்தகைய சம்பளம் அல்லது ஊதியம், சொத்துப்பேணுநரிடம் தீர்ப்பாணை நிறைவேற்றத்தில் பற்றுகை செய்யக்கூடிய அளவில் வந்தடையும் என்று தெரிகிறது.

எனவே, நொடிப்புநிலையரின் கடனுளர்களிடையே பங்கிடக் கூடிய சொத்தினைப் பொருத்து மூன்று விதமான வேறுபாடுகள் இரு சட்டங்களிலும் காணப்படுகின்றன. மாநகர்கள் சட்டத்தில் பின்னர்ச் சேர்க்கப்பட்ட சொத்து (After acquired property) நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர் நொடிப்புநிலையரால் சேர்க்கப் பட்ட அல்லது அன்னுரை உற்றடையும் சொத்து சொத்தாட்சி அதிகாரி தலையிட்டுக் கோருகின்றவரையில், அவரைச் சென்றடை யாது. மாநிலச் சட்டத்தில் அவ்விதம் சொத்து உள்ளடைகின்ற நாளிலிருந்து அல்லது நொடிப்பு நிலையரை அடைகின்ற நாளிலி லிருந்து சொத்துப் பேணுநரைச் சொத்து வந்தடையும் என்று கூறப்பட்டுள்ளது.

மாநகர்கள் சட்டத்தின்கீழ்ச் சொத்தாட்சி அதிகாரியின் உரிமை மூலம் (Title) முதலில் கிடைக்கக்கூடிய நொடிப்புநிலை ஆக்குவினைச்செயல் புரிந்த நாள் முதலாகப் பின் சென்றடையும். ஆனல், மாநிலச் சட்டத்தில் கோரிக்கை மனு கொடுக்கப்பட்ட நாள் வரையில் மட்டுமே உரிமை மூலம் பின் சென்றடைகின்றது. (Relates back to the date of presentation of petition) மாநகர்கள் சட்டத்தில் தோற்றச் சொத்துரிமையைப் (Reputed Ownership Clause) பற்றிய விதி பிணையக் கடனுளர்களுக்கும் பொருந்துகின்றது. ஆனல், மாநிலச் சட்டத்தில் பிணையக் கடனுளர்களுக்கு இது பொருந்தவில்லை என்பது தெளிவாகின்றது. முதலில் கூறப்பட்ட விதியானது ஆங்கிலச் சட்டத்தின்கீழ்த் தீர்மானிக்கப்பட்ட Cohen v. Mitchell 25 Q. B. D 262 வழக்கில் விதிக்கப்பட்ட விதியாக இருக்கின்றது. இந்த விதியின்படி நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர் நொடிப்புநிலையரால் சேர்க்கப்பட்ட சொத்தினைச் சொத்தாட்சி அதிகாரியே நேரிடை யாகத் தலையிட்டுப் பாத்தியதை கொள்ளுகின்றவரையில் அல்லது தானுகச் சொத்தாட்சி அதிகாரியை உற்றடையாது. மாநகர்கள் சட்டத்தில் இந்த விதி அனுமதிக்கப்பட்டுள்ளது. மாநிலச் சட்டத்தில் இத்தகைய விதி காணவில்லை என்பதனைப் பம்பாய் வழக்கான Giri Kant v. Vadi'al 38 Bom. L. R. 211-ல் கூறப்பட் டுள்ளது. ஆயினும் இந்த விதியின் செல்லுபடியும், எந்த அளவிற்கு அதனைப் பயன்படுத்தலாம் என்பதும், அண்மைக்காலத்தில் தீர்ப்புக்கூறப்பட்டுள்ள ஆங்கிலநாட்டு, இந்தியநாட்டு வழக்கு களிலும் சந்தேகத்திற்கிடமாக உள்ளது. பின்னர்ச் சேர்த்த அசையும் பொருள்கள் பொருத்தும், பின்னர்ச் சேர்த்த குத்தகை நிலையினைப் பொருத்தும், மொத்தத் தொகையாக மாற்றப்பட்ட ஓய்வூதியம் பொருத்தும் மேற்சொன்ன விதி பொருந்துகிறது. இங்கிலாந்தில் நிலச் சொத்துக்கும் இவ்விதி பொருந்துகிறது.

இந்தியாவில் அசையாச்சொத்துகளுக்கு இவ் விதியைப் பொருத்திப் பார்ப்பதில் மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. **Cohen v Mitchell** வழக்கின் விவரம் கீழ்க்கண்டவாறு உள்ளது.

விடுபடாத நொடிப்புநிலையர் ஒருவர், விவசாயப் பொறிகள், வாங்கி விற்கும் வியாபாரத்தை மேற்கொண்டிருந்தார். அன்னாரின் நொடிப்புநிலையை அறிந்திருந்த வாதியிடம் வியாபாரத்திற்காகப் பணம் கடன் வாங்கியிருந்தார். 'F' என்பவரால் பின்னர்ச் சிறிது காலத்திற்குள்ளாக அங்ஙனம் பெறப்பட்ட பொறிகள் கைப்பற்றப்பட்டன. நொடிப்புநிலையர் தம் பெயரிலேயே 'F'க்கு எதிராக வழக்குத் தொடர்ந்து இழப்பீடுகளையும் பெற்றார். அவ்வித நடவடிக்கை மேற்கொள்வதற்கான நிதியினைப்பெறத் தம்முடைய கோருபாத்தியதையை வாதியிடம் பிணையமாக உரிமைமாற்றுச் செய்திருந்தார். 'F'க்கு எதிராகத் தீர்ப்பு வழங்கப்பட்டதும், பணம் செலுத்துதலுக்கு முன்னதாக நொடிப்புநிலையின் பொறுப்புரிமையர் (Trustee in Bankruptcy) தலையிட்டு நொடிப்புநிலையரின் சொத்துரிமையின் சார்பில் பணத்திற்கு உரிமைமாற்றத்தின்கீழ்ப் பாத்தியதை கோரிய வாதிக்கு எதிராகப் பாத்தியதை கொண்டாடினார். இவ் வழக்கில், வழக்கின் நிலையை நோக்க வாதிக்கெதிராகப் பொறுப்புரிமையர் பணத்திற்குப் பாத்தியதை கொண்டாடமுடியாது என்று Esher, M.R.; Fry and Lopes. L.J. அடங்கிய வழக்குமன்றம் தீர்ப்பு வழங்கியது. இந்தியாவில் 1 பம்பாய் நீதிமன்றம் Ali Mohomad v. Wad lal 43 Bom. 890 வழக்கில் இத் தீர்ப்பை பின்பற்றியது. விடுக்கப்படாத நொடிப்புநிலையர், அசையாப் பொருள் ஒன்றினை வாங்கிப் பின்னர் இரு நபர்களுக்கு அடைமானம் (Mortgage) செய்தார். பிணையத்தினின்றும் தம் பணத்தைப் பெற அடைமானம் பெற்றவர் கொணர்ந்த வழக்கில், சொத்தாட்சி அதிகாரி ஒருவர் அடைமானம் செல்லாது என்றும், சொத்து, சொத்தாட்சி அதிகாரியிடம் உள்ளடைந்ததாகக் கருதப்பட வேண்டுமென்றும், மறுப்புத் தெரிவித்தார். இவ் வழக்கில், தெளிவாகச் சொத்தாட்சி அதிகாரி தலையிட்டுப் பாத்தியதை கொண்டாடும் முன்னர், நொடிப்பு நிலையர் சொத்தினை எவ்விதமும் கையாற்றப் பெறலாமாதால் அடைமானம் செய்தது செல்லத்தக்கது என்றும் விளக்கிக் கூறப்பட்டது.

இந்த விதியினைப் பொருத்த இரண்டு முக்கிய கூறுகளைக் கவனிக்க வேண்டும்.

1. நொடிப்பு நிலையருடன் தொடர்புகொள்ளும் நபர், நல்லெண்ணத்துடனும், பண மதிப்பிற்கும் பொருளைப் பெற்றிருக்க வேண்டும்.

2. பொறுப்புரிமையர் தலையிடும் முன்னர் நடைமுறை ஒப்பந்தம் ஏற்பட்டிருக்க வேண்டும். Mohanlal v. Harilal, 27 Bom. L. R. 419 வழக்கில் அத்தகைய நடைமுறை ஒப்பந்தம் நொடிப்புநிலைச் சட்டத்திற்கு மோசடியான ஒன்றானல் Cohen v. Mitchell விதி பயன்படாது என்று விளக்கப்பட்டது. Abdul Rahman v. Nihal Chand, (1 3 ). A L. J. 709 (F.B,) வழக்கில் நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர், நொடிப்பு நிலையர் ஒருவரால் கடனைத் தரப்பட்டு அதைச் செலுத்துதற்கான வழக்கினைத் தள்ளிவிடக்கூடாது என்றும் சொத்துப் பேணுநர் தலையிடாதிருப் பின் பணமானது நொடிப்புநிலையரின் தனிச் சொத்தாக வழக்கு மன்றம் கருதும் என்று கூறப்பட்டது.

Re Pasco, (1914) 1, CH 219 வழக்கில் மீண்டும் Cohen v. Mitchell விதி ஆராயப்பட்டது. அதில் இங்கிலாந்து நொடிப்பு நிலைச் சட்டத்தின் 47ஆவது பிரிவின் அடிப்படை நோக்கமே, மூன்றும் நபர்களுடன் விடுக்கப்படாத நொடிப்புநிலையர், தம்முடைய, பின்னர்ச் சேர்க்கப்பட்ட சொத்துப் பொருத்து மேற்கொள்ளும் நடைமுறை ஒப்பந்தங்களுக்குக் குறிப்பிட்ட பாது காப்புத் தரவேண்டும் என்பதாகும். ஆனல் பொறுப்புரிமையர், நொடிப்புநிலையர் இருவர்க்குமிடையில் பின்னர்ச் சேர்க்கப்பட்ட சொத்தானது, நொடப்புநிலைப் பொறுப்புரிமையர் (Trustee in Bankruptcy) கோருகின்றவரையில், நொடிப்புநிலையரைச் சார்ந்தது என்று நிர்ணயிக்கவில்லை. மேற்சொன்ன பிரிவு அத் தகைய சொத்தினைப் பொருத்து குறிப்பிடத்தக்க ஓர் உரிமையும் உரிமை மூலம் தருகின்ற ஓர் அதிகாரத்தினையே அளிக்கின்றது.

அதிகாரங்கள் (Powers)

இந்து தந்தையரின் நிலை (Case of Hindu Father) மாநகர்கள் சட்டப் பிரிவு 52 (2) நொடிப்புநிலையின் நடவடிக்கைகளில் ஒவ் வொரு சமயம் ஏற்படும் தனி நிலையினைப் பற்றி கூறுகிறது. தம் முடைய சொந்தப் பயனுக்காக வினியோகம் செய்யும் அதிகாரம் செலுத்தக்கூடிய சொத்தினைப் பொருத்து, நொடிப்பு நிலையரின் உரிமைகள் சொத்தாட்சி அதிகாரியினை அடையும் என்று மேற் சொன்ன விதியில் காண முடிகின்றது. Re Mathison (1926) W. N. 277 என்ற இங்கிலாந்து வழக்கில், நொடிப்புநிலைத் தகுதி யில் நொடிப்புநிலையினருடைய நியமிக்கும் பொது அதிகாரம், அந்தப் பொறுப்புரிமையரைச் சென்றடையும் என்று தீர்ப்புக் கூறப்பட்டது. இந்த விதியின்கீழ், இந்து கூட்டுக் குடும்பம் ஒன்றில், தந்தைக்கெதிராக நீதித் தீர்ப்பாணை வழங்கிடின் அச் சொத்தில் அவருடைய மகளின் அக்கறை எத்தகைய விளைவுக்

குள்ளாகும் என்பதனை ஆராயலாம். முதன் முதலில், இந்து தந்தை ஒருவரின் நொடிப்புநிலையினால், கூட்டுக் குடும்பச் சொத்தில், பங்கிட்டுக் கொள்ளாத அன்னாரின் ஆண் மக்களின் அக்கறை தந்தையின் கடனாளர்களிடையே பிரித்துக்கொடுக்க வேண்டி சொத்தாட்சி அதிகாரியின் கைக்கு மாறும். தந்தையின் கடன்களைச் செலுத்துவது மகன் தந்தைக்கு ஆற்றும் நெறிக்கடப்பாட்டின் அடிப்படையில் எழுந்தது. ஆயினும் இக்கொள்கை, Sat Narayan v. Beharilal, 27 Bom L. R. 135 பிரிவி கவுன்சில் வழக்கில் நிராகரிக்கப்பட்டது. மித்தாட்சர சட்டத்தில் (Mitakshara Law) ஆளுகைக்குட்பட்ட பிரிவினை உரிமையர்களில் (Co-Parceners) ஒருவர், நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணைக்குள்ளானால், பிரிக்கப்படாத சொத்தினில் அப் பிரிவினை உரிமையரின் மகனின் உரிமை அத்தகைய நீதித் தீர்ப்பாணையினால் பறிக்கப்படமாட்டாது என்று தெளிவாகக் கூறப்பட்டது. ஆயினும், தந்தை, தன் கடனுக்காக மகனின் சொத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரம், சொத்தாட்சி அதிகாரியிடம் அந்தப் பணம் தந்தை நொடிப்புநிலைக்கு ஆளாயிருந்தும் அத்தகைய மகன், ஆனால், வாங்கு முன்னுரிமை (Right of Preemption)யினைப் பயன்படுத்த முடியும். மேலும் நீதிபதிகள் கீழ்க் காணுமாறு வரையறுத்துத் தெளிவை ஏற்படுத்தினர். பிரிவு 52 (b)-ல் கூட்டுக் குடும்பச் சொத்தினைப் பிரிக்கும் உத்தரவு பெறுகின்ற தகுதியும் அதிகாரமும் சொத்தாட்சி அதிகாரியிடம் உள்ளடையும். அந்த அதிகாரத்தினை அன்னார் செலுத்துகின்றவரையில், கூட்டுக் குடும்பத்திற்கெதிராக, நொடிப்புநிலையர்க்கிருக்கும் அவருடைய பங்கினைவிடப் பெரியதொரு பங்கினைக் கோர முடியாது. தந்தையிருந்த இடத்தில் சொத்தாட்சி அதிகாரியினை வைக்கும் வினைவினைத்தான் நீதித் தீர்ப்பாணை உத்தரவு செய்ய முடியும்,

இவ்வழக்கினைத் தொடர்ந்து பம்பாய் மேன் முறையீட்டு வழக்கில், இந்து கூட்டுக் குடும்பத்தின் காப்பாளர் (Manager) ஒருவருடைய, முறையான காரியங்களுக்காகக் குடும்பச் சொத்தினைக் கட்டுப்படுத்துகின்ற அதிகாரமானது, அன்னாரின் நொடிப்புநிலையினால், சொத்தாட்சி அதிகாரியை வந்தடையாது என்று விளக்கப்பட்டது. Shripad v. Basapp, 27, Bom. L. R 935 வழக்கில் பிரிவினை உரிமைகொண்ட சொத்தில் மகனுடைய அக்கரையை கட்டுப்படுத்த அவரின் கடனாளர் ஒருவர், தான் பெற்றிருந்த தீர்ப்பாணையை நிறைவேற்ற முடியும் என்று சொல்லப்பட்டது.

எனினும், சென்னை உயர் நீதிமன்றம் மாறான கருத்தினைக் கொண்டது. Seetharama v. Official Receiver of Tanjore. 49

Mad. 849 வழக்கில் சென்னை உயர் நீதிமன்றத்தின் முழு ஆயம் (Full Bench) இந்து தந்தை ஒருவர் நொடிப்புநிலைக்குள்ளாவதனால், கூட்டுச் சொத்தில் மகனுடைய பங்கு சொத்துப் பேணுநரை வந்தடையாது எனினும், அத்தகைய பங்கினை விற்கும் தகுதியும், உரிமையும் சொத்தாட்சி அதிகாரியை வந்தடையும் என்று தீர்ப்புக் கூறப்பட்டது. இலாகூர், அலகாபாத் உயர் நீதிமன்றங்களும், Gori Shankar v. Official Receiver, 13. Lal. 464 Ananda Prakash v. Narayan Das, 53. All 239 வழக்குகளில் மேற்சொன்ன கருத்தையே கொண்டிருந்தன. மேலும் முன் சொன்ன சென்னை வழக்கில், இத்தகைய அதிகாரமானது, தந்தையின் இறப்பினால் முடிவுக்கு வராது என்றும், அன்னார் இறந்தபின்னரும், சொத்தாட்சி அதிகாரியினால் செலுத்தக் கூடியது என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது. ஆயினும் Re Balasami Ayyar, 51. Mad. 417 வழக்கில் பாகப்பிரிவினை வேண்டி தந்தைக்கு எதிராக மகன் உரிமையியல் வழக்கு ஒன்றைத் தொடர்ந்தபின்னர், சொத்தாட்சி அதிகாரிக்கு முன்னர்ச் சொன்ன உரிமை கிடையாது-என்றும் கூறப்பட்டது. இந்து தந்தையரின் கடன்களுக்காக, அவருடைய நொடிப்புநிலையில், பிள்ளைகளின் பொறுப்புகள் பற்றியும், சொத்தாட்சி அதிகாரிக்குள்ள இணையான உரிமைகள் பற்றியும் பிரிவி கவுன்சில் வழக்கான Sat Narayan v. Krishna 38. Bom. L.R. 1129-ல் ஆராயப்பட்டது. தீர்மானமாக, அவ் வழக்கில் கீழ்க்காணுமாறு கூறப்பட்டது. இந்து கூட்டுக் குடும்பத்தில், தந்தையானவர் நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணைக்குள்ளாகும் உத்தரவினால் குடும்பச் சொத்திலுள்ள மகனுடைய அக்கறை சொத்தாட்சி அதிகாரியைச் சேர்ந்தடையாது. ஆனால் மாநகர்கள் சட்டத்தின்கீழ், பிரிவு 52 (2) (b) தந்தையின், சட்டமுரண் அல்லது ஒழுக்க முரணால் ஏற்படுத்தப்படாத முன்கடன்களின் (Antecedent Debts) பொருட்டுக் கூட்டுக் குடும்பச் சொத்துகளை விற்கும் நொடிப்பு நிலையரின் அதிகாரத்தினைச் செலுத்தும் தகுதி சொத்தாட்சி அதிகாரியை வந்தடைகிறது. எனவே, கூட்டுக் குடும்பச் சொத்துகளைப் பாகப்பிரிவினை செய்ய வேண்டி பிள்ளைகளால் தொடரப்பட்ட வழக்கில், ஏற்கனவே சொத்தாட்சி அதிகாரியினால் விற்கப்பட்ட சொத்துகளைப் பொறுத்தவரையில் அவர்கள் தீர்ப்பாணை பெற அருகதையற்றவர்கள் என்று அவ்வழக்கில் தீர்ப்பாயிற்று.

Bishambar Nath v. Off. Receiver, 16. Pat. 60 (F B.) வழக்கில் பாட்னா உயர் நீதிமன்றம் மேற்சொன்னவாறே நீதி வழங்கிற்று.

**Indubala v Bakteshwar, 41, Cal. W. N. 1079** வழக்கில், கல்கத்தா உயர் நீதிமன்றம், இந்து கூட்டுக்குடும்ப நிறுமம் **(Joint Hindu Family Firm)** ஒன்றின் காப்பாளர், நொடிப்புநிலைக் காளானுல், நிறுமத்தின் கடன்களை விடுவிக்கும் பொருட்டு, கூட்டுக்குடும்பச் சொத்தினை விற்கும் அன்னுரின் உரிமை, சொத்துப் பேணுநர்க்கு மாறுவதாகவே கருதினுலும், நொடிப்புநிலைக்கு முன்னர் ஒரு கடனுளரால், கூட்டுக் குடும்பச் சொத்துப் பற்று கைக்கு உள்ளானுல், அத்தகைய உரிமை சொத்துப் பேணுநர்க்கு மாறமுடியாது என்று தீர்ப்பளித்துள்ளது.

மாநகர்கள் சட்டத்தின் பிரிவு 52 (2)-ல் கூறப்பட்டுள்ளதற்கு ஈடான கட்டுவாசகம் மாநிலச் சட்டத்தில் முதலில் இல்லை. இதன் மீது மாறுபட்ட கருத்துகள் நிலவின. புதிதாகப் புகுத்தப்பட்ட பிரிவு 27 (A)-ன் காரணமாக இதற்கு ஒரு முடிவு காணப்பட்டது. மகனுடைய பாகம் சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணுநரைச் சேர்ந்து அடையாததால், தந்தையின் நொடிப்பு நிலைக்குப் பின்னரும் தந்தை அல்லது மகனுக்கெதிராகப் பெறப் பட்ட தீர்ப்பாணை நிறைவேற்றம் செய்ய, பற்றுகை செய்ய முடியும். அந்தச் சொத்து விற்கப்பட்டால், சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணுநரின் உரிமை அழிக்கப் படுகிறது. அதேபோன்று மகன் ஒருவன் பாகப்பிரிவினைக்கு வழக்குத் தொடர்ந்தால், அன்னுரின் பாகத்தைச் சொத் தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநர் விற்கின்ற உரிமை முடிவுக்கு வருகின்றது. ஆனுல், தந்தையின் கடனுளர்களின் பாக்கியினை அடைக்க மகனுக்கெதிராகச் சொத்தாட்சி அதிகாரி வழக்கிடலாம். கூட்டுக் குடும்பச் சொத்தில் அந்தப் பிள்ளைகளின் பாகத்தை விற்கத் தீர்ப்பாணை ஒன்றினை அமுலாக்கலாம்.

சாதாரணமாக, எவர் ஒருவர் நொடிப்புநிலையர் ஆகிருரோ, அவருடைய சொத்துமட்டுமே, சொத்தாட்சி அதிகாரியிடம் உற்றடையும். ஆனுல் இந்துக் கூட்டுக்குடும்ப உறுப்பினர் ஒருவர் நொடிப்புநிலையர் ஆகிறபோது, வேறு சில மாற்றங்கள் ஏற்படு கின்றன. கூட்டுக் குடும்பத்தின் உறுப்பினர், வேறு அதிகார மின்றி, உறுப்பினராக மட்டும் இருந்தால் **(Junior members)** அவருடைய அக்கரை மட்டுமே, ஏனைய நொடிப்புநிலையரைப் போலவே, சொத்தாட்சி அதிகாரியிடம் உற்றடையும். ஆனுல் அத்தகையவர் குடும்பத்தின் கர்த்தா அல்லது காப்பாளராக **(Manager)** இருக்கலாம் அல்லது ஒரு தந்தையாக இருக்கலாம். இந்துச் சட்டத்தின்படி, இவ்விருவருக்கும், தங்கள் பங்குச்சொத்தை மாத்திரம் அல்லாமல், பொதுச் சொத்து முழுவதையுமே, சில

சந்தர்ப்பங்களில், வினியோகம் செய்யும் உரிமையுண்டு. குடும்ப நன்மைக்காக அல்லது இன்றியமையாதத் தேவைக்காகக், குடும்பக் காப்பாளர், சொத்து முழுவதையும் கட்டுப்படுத்தும் வகையில் கடன்கள் வாங்கலாம். மற்றைய கடன்களுக்காக சொத்தைப் பராதீனம் செய்யலாம். தந்தையானல், தன் சொந்த கடன்களுக்காக (அதாவது ஒழுங்கிற்கு புறம்பல்லாத கடன்கள்) அவ்விதம் கட்டுப்படுத்தலாம். மாநகர்ச் சட்டம், பிரிவு 52 (2) (b)ல் நொடிப்புநிலையரின் எவ்வகைச் சொத்து, சொத்தாட்சி அதிகாரியிடம் உற்றடைகிறது என்று விவரிப்பதில், அவர் தன் நலனுக்காக எந்தச் சொத்தின் மீது தன் அதிகாரம் பயன்படுத்த, நடவடிக்கைகள் எடுக்க முடியுமோ, அந்தத் திறன் (Capacity) சொத்தாட்சி அதிகாரியும் உற்றடையும் என்று கூறப் பட்டிருக்கிறது. இப் பிரிவின் மூலம், தந்தை நொடிப்புநிலைய ரானல், கூட்டுக் குடும்பத்தில் அவருக்குள்ள அக்கரையே சொத் தாட்சி அதிகாரியிடம் உற்றடையும் என்று சில நீதிமன்றங்கள் தீர்ப்பளித்தன. **Satnarayan v Biharilal of Lahore** 1, என்ற பிரிவி கவுன்சில் வழக்கில், இக்கருத்து சரியில்லையென்றும், பொதுக் குடும்பச் சொத்து முழுவதும், மகனின் அக்கரை உட்பட, தந்தையின் கடனுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும், சொத்தாட்சி அதிகாரியிடம் உற்றடைவது, மகனின் அக்கரையோ அல்லது பங்குரிமையோ அல்ல. அதைக் கட்டுப்படுத்தக்கூடிய அதிகாரம் மட்டுமே என்று திட்டவட்டமாக கொள்ளப்பட்டது. இந்த தீர்ப்பு மாநகர்ச் சட்டத்தின்கீழ் ஏற்பட்டது.

மாநிலச் சட்டம் சம்பந்தப்பட்டமட்டில், இம் மாதிரி வகையும் ஆதியில் அச் சட்டத்தில் இல்லை. ஆயினும் பிரிவு 28 (2) யும் 'சொத்து' என்பதை வரையறுக்கும் பிரிவு 2-யும் பார்க்கும் பொழுது, மாநிலச் சட்டத்திலும் இந்நிலை ஏற்படுகிறதென்று பல நீதிமன்றங்கள் தீர்ப்பளித்தன. சென்னை நீதிமன்றம் முழு ஆயம் (Full Bench)-ல் தீர்மானிக்கப்பட்ட Ramasastaralu v. Balakrishna 1942. 2 M L J 457-ல் இந்தக் கருத்து, பிரிவி கவுன்சில் வழக்கு, Satnaraian v. Sri. Krishna Das A I R 1936 P. C. 277-க்கு மாறுனதென்றும், மாநிலச் சட்டம், பிரிவு 2, அல்லது பிரிவு 28-ஐ மேவி, இக் கருத்துக் கொள்ளக் கூடாதென்றும் மாநகர்ச் சட்டம் பிரிவு 52 (2) (b)-க்கு நிகரான வகையம் மாநிலச் சட்டத்தில் இல்லாததால், மகனின் அக்கரை, சொத்தாட்சி அதிகாரியிடம் உற்றடையாது என்று தீர்ப்புக் கூறப்பட்டது. அதன்பயனுக, சட்டமன்றம் மாநிலச் சட்டத்தைத் திருத்தி பிரிவு 28-ஐ இயற்றியது.

மாநிலச் சட்டத்தின் திருத்தப்பட்ட பிரிவு, மாநகர்கள் சட்டத்தின் பிரிவு 52 (b) யுடன் ஒத்துள்ளது. இத்திருத்தத்தின் மூலம் Ramashastrulu *v*. Balakrishna (1942) 2. M. L. J. 457 வழக்கின் முடிவு இனி நிலவில் இல்லை என்பதனை Official Receiver of Ramnad *v*. Devanarayana Chettiar (1948) 1 Mad. L. J. 415; Ammanna *v*. Ramakrishna Rao, (1949) 1. Mad L. J. 249 வழக்குகளில் தெளிவாக்கப்பட்டது. அதுபோன்றே, உச்ச நீதிமன்றத்தின் வழக்கான **Nageshvar Swami *v*. Vishvasundara A I R 1953, Supreme Court** 370-ல் பிரிவு 28-A யினைமுன்-மேவு சட்டம் (Retrospective Law) என முடிவு கூறப்பட்டது.

## இயல் 12

# தோற்ற அளவு உடைமை

## (Reputed Ownership)

மாநகர்கள் சட்டப் பிரிவு 52 (3), ஒருவரின் கட்டளைக்கும், செலவிடும் அதிகாரத்திற்கும் உட்பட்ட பொருள்களைப் பற்றிய தாகும். அன்னாரின் ஆளுகைக்குட்பட்ட பொருள்களில், உண்மை யில் அவர்க்குச் சொத்துரிமை கிடையாது எனினும், அவருடைய உரிமையுள்ள சொத்துப் போன்றே தோற்றமளிக்கின்றது. இவ் விதியினுள் அடங்கும் அத்தகைய தோற்ற உரிமையாளரின் (Reputed Owner) பொருள்கள், அவருடைய நொடிப்புநிலையினால் சொத்தாட்சி அதிகாரியினை உற்றடையும். இந்த விதியினால், உண்மையில் நொடிப்புநிலையினருடையதல்லாத சொத்து, சில நிபந்தனைகள் பூர்த்தியாகுமானால் நொடிப்புநிலையரின் நிலச் சொத்தின் வரையறைக்குள் கொண்டுவரப்படும். அந்த நிபந்தனை களாவன :

1. சொத்து, சரக்குகளாயிருத்தல் வேண்டும்.
2. நொடிப்புநிலையரின், உடைமையாய், கட்டளைக்கு அல்லது ஆளுகைக்குட்பட்டதாக இருக்கவேண்டும்.
3. நொடிப்புநிலை தொடக்கத்தில் இருந்திருக்க வேண்டும்.
4. அன்னாரின் தொழில் அல்லது வியாபாரத்திற்காக வைத்திருக்க வேண்டும்.
5. உண்மையான சொத்துரிமையரின் இசைவுடன் வைத்திருக்க வேண்டும்.
6. சூழ்நிலைகளின்கீழ், அன்னார் தோற்ற உரிமையாளராக இருக்க வேண்டும்.

இந்த விதியின் முக்கிய நோக்கம், சரக்குகள் இருப்பது போன்ற மாற்றத்தை வைத்து போலியான நாணயம் பெறுவதிலிருந்து நொடிப்புநிலையர்களைத் தடுப்பதாகும். நொடிப்புநிலையின் சூழ்நிலைகளில் உள்ள ஒரு வணிகரிடம், சரக்குகளின் உடைமை கொண்டவர் விட்டுவைக்கக்கூடாது. நொடிப்புநிலைத் தொடக்கத்தில், அந்தச் சரக்குகள் நொடிப்புநிலையரின் உடைமையாக விட்டுவைத்திருப்பின், இந்த விதியின்கீழ் அவற்றை நொடிப்பு நிலையரின் சொத்தாக-சொத்தாட்சி அதிகாரி கொள்வதில் நியாயம் இருக்கிறது. இதே போன்று சரக்குகளை வாங்குவோர், பண நெருக்கடிக்குள்ளான விற்பவர்களிடம் அப்பொருள்களை விட்டுச் சென்றுள்ள நிலையில் அன்னவர் நொடிப்புநிலை எய்திடின், பொருள்களை வாங்கியவன், வாங்கியதன் பயனை இழக்கின்றார். சரக்குகள் சொத்தாட்சி அதிகாரியைச் சென்றடையும். இதுவே தோற்றச் சொத்துரிமை (Reputed Ownership) கோட்பாடாகும்.

மாநகர்கள் சட்டத்தில், நொடிப்புநிலைத் தொடக்கத்தில், கடனாளரிடமுள்ள எல்லாச் சரக்குகளும், அவற்றின் உண்மையான சொத்துரிமையரின் இசைவு பெற்றுக் கடனாளரின் வணிகத்தில் அல்லது தொழிலில், அக் கடனாளியின் கட்டளைக்கும், ஆளுகைக்கும், உடைமைக்கும் உட்பட்டதாக இருக்குமாயின், அத்தகைய சூழ்நிலைகளில், அக் கடனாளி தோற்றச் சொத்துரிமையராகக் (Reputed Owner) கருதப்படுகிறார், என்று கூறப்பட்டுள்ளது.

மாநிலச் சட்டத்தில் நொடிப்புநிலை கோரிக்கை மனுவினைச் சேர்ப்பித்த நாளிலிருந்து, கடனாளியிடம் அன்னாரின் வியாபாரத்தில் அல்லது வணிகத்தில் சரக்குகளின் உண்மையான சொத்துரிமையரின் இசைவுடன், கடனாளியின் கட்டளைக்கும், ஆளுகைக்கும், உடைமைக்கும் உட்பட்டுள்ள அனைத்துச் சரக்குகளுக்கும் அத்தகைய சூழ்நிலைகளில் அக் கடனாளி, தோற்றச் சொத்துரிமையராக எண்ணப்படுகிறார், என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

தோற்றச் சொத்துரிமை கோட்பாட்டின் முக்கியத்துவங்களாவன :

இக்கோட்பாடு சரக்குகளைப் பற்றியது. அசையாச் சொத்தினைக் கட்டுப்படுத்தாது. கட்டடங்களுக்கும் பொருந்தாது.

**Official Asst v. Valliappa Chetti 45. Mad. 238** வழக்கில் அடைமான மீட்புரிமை ஒன்றானது விதியின்கண் கூறப்பட்ட

சரக்குகளுக்குப் பொருந்தாது என்று கூறப்பட்டது. விற்ற பொருள்களின் விலை; தவணை முறை கிரயத்தின் அடிப்படையில் உள்ள வரவுகள் போன்ற வணிகக் கடன்கள் (Trade Debts) பிரிவில் கூறப்பட்டுள்ள சரக்குகள் பட்டியலில் அடங்கும்.

Co'onial Bank v Whinny, (1886) 11. A. C. 426 வழக்கில், பங்குகள், காப்பீட்டுப் பத்திரங்கள் கூட்டுறவின் பாகம் போன்ற வழக்கிடு (Things in Action) விதியில் கூறப்பட்டுள்ள "சரக்குகள்" என்பதனுள் அடக்கப்படவில்லை என்று விளக்கப்பட்டது. நொடிப்புநிலையரின் நேரடி உடைமையாக (Actual Possession) சரக்குகள் இருக்கத் தேவையில்லை. கொள்நிலை உடைமையாக (Construction Possession) இருந்தாலே போதும். சான்றாக முகவரிடம் (Agent) பணியாளரிடம் (Servant) சரக்கேற்றி (Carrier) யிடம் உள்ள உடைமைகள் போதுமானது என்று Exparte Bolland 24. L. T. 335 Harvey v. Liddiard, 1. Stark. 123 வழக்குகளினின்றும் அறிய முடிகின்றது.

Re Fox (1948) All. E. R. 849 வழக்கில் 'தொழிலில், அல்லது வியாபாரத்தில்', என்ற சொற்ப வியாபாரத்திற்காக, வியாபாரத்துடன் தொடர்பு கொண்ட அன்னாரின் வணிகம் அல்லது வியாபாரத்திலுள்ள சரக்குகள் என்று விவரிக்கப்பட்டது.

கட்டளைக்கும் ஆளுகைக்கும் உட்பட்டது என்று கூறியபோது, நொடிப்புநிலையரின் உடைமை பிரிக்க இயலாததாகவும், தனிப்பட்டதாகவும் (Exclusive) இருக்கவேண்டும். அன்னாருடன் கூட்டாளிகள் (Partners) இருந்து, உடைமை கூட்டாக இருந்திடின், பொருள்கள், அன்னாரின் நொடிப்புநிலையில் சொத்தாட்சி அதிகாரிக்கு மாறாது என்பதனை Exparte Dorman. (1872) L.R. 8. Ch. App 51 வழக்கில் தெளிவுபடுத்தப்பட்டது. நொடிப்புநிலையர் சரக்குகளை உடைமையாக வைத்திருந்தால் மட்டும் போதாது. அங்ஙனம் உடைமையாக வைத்திருப்பதானது அன்னாரைத் தோற்ற உரிமையாளராக்கவேண்டும்.

Exeparte Watkins, (1873) L.R. 8. Ch. App 520 வழக்கில் இதற்கான முந்தளிப்பு கூறப்பட்டுள்ளது. சரக்குகள் உள்ள சூழ்நிலையிலிருந்து, அந் நிலையினைப்பற்றி முழுவதும் தெரிந்த ஒருவர், நேரடி உடைமை கொண்டுள்ள நபரிடம் சொத்துரிமை இல்லாததை அறிந்துகொள்ள முடியுமானல், போதுமானது என்று சொல்லப்பட்டது. எனவே, கைக்கடிகாரங்கள் விற்பவர் ஒருவர், கைக்கடிகாரங்களைப் பழுது பார்க்கும் தொழிலையும் மேற்கொண்டிருந்தால், அவருடைய கடையிலுள்ள அனைத்துக் கைக்

கடிகாரங்களுக்கும் அவர் சொத்துரிமையர் என்று நியாயமாகக் கருதமுடியாது. அதனால் இந் நிலையில் தோற்றச் சொத்துரிமை கோட்பாடு அமுலாவது கடினமாக இருக்கும் என்று **Hamilton v. Bell** (1854) **10 Ex. 545** வழக்கில் விளக்கப்பட்டது.

நொடிப்புநிலையர் தம் தொழிலில் அல்லது வியாபாரத்தில் அவ்விதம் பொருள்களை உடைமையாக வைத்திருப்பது உண்மையான சொத்துரிமையரின் இசைவுடனிருக்க வேண்டும் என்பது கவனிக்கத்தக்கது.

**Lamb v. Wright & Co** (1924) 1. K. S. 857 வழக்கில், மோசடியாக அல்லது தவறுதலாகச் சரக்குகள் நொடிப்புநிலையரின் உடைமையாக இருப்பின் இந்த விதி பொருந்தாது என்று கூறப்பட்டது. இவ்விதம், சொத்து, சொத்தாட்சி அதிகாரியினைச் சேர்ந்தடைந்தால், உண்மைச் சொத்துரிமையர், நொடிப்புநிலையில், அதனுடைய மதிப்பினை எப்பொழுதும் எண்பிக்கலாம். சரக்குகள், கடனாளரின் உடைமையாக இருந்தாலும், அவ்விடத்தே உடைமைபெற அல்லது உடைமைபெற முயற்சி கொண்டாலும், நொடிப்புநிலையரின் ''தோற்றச் சொத்துரிமை''க்கு உறவு ஏற்பட்டுவிடும்;

**Smith v. Topping** (1833) 5. B. & Ad **674** வழக்கில் நொடிப்புநிலைக்கு முன்னர்க் கேட்டிருக்தால்கூட உடைமையினை உறவு செய்யப் போதுமானது என்றும், அத்தகைய வேண்டுகோள் மறுக்கப்பட்டிருந்தாலும்கூட அந்நிலை ஏற்படும் என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது. அத்தகைய வேண்டுகோள் அல்லது உடைமை மீட்டுக் கொள்ளுதலும், நொடிப்புநிலை கோரிக்கை மனு அளிக்கப்பட்டதை அறியாமலும், நல்லெண்ணத்துடனும், நீதித் தீர்ப்பாணை நாளுக்கு முன்னராகவும் இருக்கவேண்டும்.

இயல் 13

# முன்மேவு உரிமைக் கோட்பாடு

## (Doctrine of Relation Back)

நீதித் தீர்ப்பாணை உத்தரவு நாளிலிருந்துதான், நொடிப்பு நிலையரின் சொத்து, சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணுநரைச் உற்றடைவதனுல், அந்த நாளிலிருந்துதான் சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப் பேணுநரின் ''உரிமைமூலம்'' துவக்கவேண்டும், என்று தோன்றினுலும் நொடிப்புநிலைச் சட்டத்தின்படி மாருக வகையும் செய்யப்பட்டிருக்கிறது.

மாநகர்கள் சட்டப் பிரிவு 51–ன் கீழ், கடனுளரின் நொடிப்பு நிலையானது, கடனுளியின் கோரிக்கை மனுமீது ஏற்பட்டாலும் அல்லது கடனுளர் அல்லது கடனுளர்களின் கோரிக்கை மனுமீது ஏற்பட்டாலும்,

(அ) எந்த ஒரு நொடிப்புநிலை ஆக்குவினைச் செயலின் மீது நீதித் தீர்ப்பாணை வழங்கப்பட்டதோ, அந்த நொடிப்புநிலை ஆக்குவினைச் செயல், செய்யப்பட்ட சமயத்திலிருந்து, அல்லது

(ஆ) நொடிப்புநிலையர், ஒன்றுக்கு மேற்பட்ட நொடிப்பு நிலை ஆக்குவினைச் செயல் புரிந்ததாக எண்பிக்கப்பட்டால் நொடிப்புநிலை கோரிக்கை மனு அளிக்கப்பட்ட நாளுக்கு முன்னிருந்த மூன்று திங்களுக்குள்ளாக, செய்யப்பட்டதாக எண்பிக்கப்பட்ட முதல் ஆக்குவினைச் செயல் புரிந்த சமயத்திலிருந்து, முன்மேவுவதாகவும் (Relates back) தொடங்கப்படுவதாகவும் கருதப்படும். கோரிக்கைக் கடனுளரின் கடனுக்கு முன்னதாக ஏதேனும் நொடிப்புநிலை ஆக்குவினைச் செயல் புரிந்ததன் காரணமாக, நொடிப்புநிலை கோரிக்கை மனு அல்லது நீதித் தீர்ப்பாணை உத்தரவு செல்லா நிலையதாக்கப்படும்.

**கோட்பாட்டின் நோக்கம்**

மூன்றும் நபர்களிடமிருந்து நொடிப்புநிலே கடனுளிகளின் சொத்திருப்புகளேச் சேகரிக்கும் பொருட்டும், அதன் சம்பந்தமான பிரச்சினேகளேக் கட்டுப்படுத்தவும் இவ்விதி இயற்றப்பட்டது. மேலும் நொடிப்புநிலே வழக்குகளில் நபர் ஒருவரின் நொடிப்பு நிலேயும் அதனுல் சொத்தாட்சி அதிகாரியின் உரிமை மூலமும், நீதித் தீர்ப்பாணே உத்தரவு வழங்கப்பட்ட நேரத்திலிருந்தல்லாமல் முன்மேவுகிறது (Relates back). அஃதாவது நொடிப்புநிலே ஆக்குவினேச் செயல்களின்மீது கோரிக்கை மனு அமைக்கப்பட்ட நொடிப்புநிலே ஆக்குவினேச் செயல் செய்யப்பட்ட நாளிலிருந்து ஆரம்பமாகிறது. நொடிப்புநிலே தொடங்கப்படும் காலத்தை முன் தேதியிடலே (Ante date) இந்த விதியின் விளேவாகும். ஒன்றுக்கு மேற்பட்ட நொடிப்புநிலே ஆக்குவினேச் செயல்கள் செய்யப்பட்டிருப்பின் நொடிப்புநிலே கோரிக்கை மனுச்செய்து கொண்ட நாளுக்கு முன்பாக உள்ள மூன்று திங்களுக்குள் செய்யப் பட்ட முதல் ஆக்குவினேச் செயல்புரிந்த காலத்திற்கு நொடிப்பு நிலேத் தொடக்கம் முன்மேவுகின்றது. ஒரே நொடிப்புநிலே ஆக்குவினேச் செயல் செய்திருப்பின், அச்செயல் புரிந்த காலத் திற்கு நொடிப்புநிலேத் தொடக்கம் முன்மேவும். இதனுல், எந்த ஒரு நொடிப்புநிலே ஆக்குவினேச் செயலின் அடிப்படையில் கோரிக்கை மனு அளிக்கப்பட்டதோ, அந்தச் செயல்புரிந்த பின்னர், நொடிப்புநிலேயரால், சொத்து உடைமை விநியோ கங்கள் (dispositions of Property), அவை நீதித் தீர்ப்பாணேக்கு முன்னதாக இருந்திருப்பினுங்கூட, சொத்தாட்சி அதிகாரியினுல் மறுக்கக் கூடியதாகவும், அங்ஙனம் மறுத்திடின், அன்னுரால் ரத்து செய்யக்கூடியதாகும்.

நொடிப்புநிலேச் சட்டத்தின்கீழ், ஓரவஞ்சக முந்தளிப்பு (Fraudulent Preference) ஆக, நொடிப்புநிலேயரால் செய்யப் பட்ட சொத்துரிமை மாற்றமானது, அதன் காரணமாக எழுந்த நொடிப்புநிலே கோரிக்கை மனுவின்மீது பின்னர்க் கடனுளி நொடிப்புநிலேயர் என நீதித் தீர்ப்பாணேக்குள்ளானதும், சொத்தாட்சி அதிகாரியின் உரிமைமூலம், உரிமைமாற்றம்செய்த நாளுக்கு முன் மேவி, அத்தகைய உரிமை மாற்றம் நல்லெண்ணத் திலுல் செய்யப்படாததால் இல்லா நிலேயதாகும் (Null and Void) என்று In re Hirth (1899) 1. Q. B. 612 வழக்கில் தீர்ப்பளிக்கப் பட்டது.

பொதுவாகக் கூறுமிடத்து. இது விதிக்குள் அடங்கவில்லேயா யின், நொடிப்புநிலே தொடக்கத்தின் பின்னர், நொடிப்புநிலே

யரால் தம் சொத்தினைப் பொருத்து மேற்கொள்ளும் அனைத்து நடவடிக்கைகளும், நொடிப்புநிலையருடன் அல்லது அவர் சொத்துடன் வெளியார் மேற்கொள்ளும் அனைத்து நடவடிக்கைகளும் தவிர்க்கக் கூடியதாகவும் தள்ளிவைக்கக் கூடியதாகவும் இருக்கின்றன. எனவே, நொடிப்புநிலையர்க்கு அவரிடமிருந்து பெற்ற கடனைச் செலுத்தும் கடனாளி, மீண்டும் சொத்தாட்சி அதிகாரிக்கு அதனைச் செலுத்தவேண்டி நேரிடும். அதேபோன்று கடனாளியிடம் பணம் பெற்ற நபர் ஒருவர் சொத்தாட்சி அதிகாரியிடம் திருப்பவேண்டும். கடனாளியிடம் ஏதேனும் சொத்து வாங்கிடின், சொத்தாட்சி அதிகாரிக்கு எதிராக வாங்கியவர்க்கு உரிமை மூலம் கிடைக்காது In re Pollit. I. Q B. 457 வழக்கில் Esher. M. R. இதனை நன்கு விளக்கியுள்ளார், இக்கொள்கைகளை மேலும் ஆங்கில வழக்கு In re Gons Bourg. (192?) 2. K. B நன்கு கூறப்பட்டிருக்கிறது.

அவ் வழக்கில், கடனாளி ஒருவர், 1917ஆம் ஆண்டு செப்டம்பர் 20ஆம் நாள், கம்பெனி ஒன்றிற்குக் குறிப்பிட்ட மரச் சாமான்கள் உட்பட தம் சொத்திருப்புகளை உரிமை மாற்றம் செய்தார், செப்டம்பர் 27ஆம் நாள் நொடிப்புநிலை ஆக்குவினைச் செயல் ஒன்றினைச் செய்தார். அதன் மீது அக்டோபர் 24ஆம் நாள் சொத்துப் பேணும் உத்தரவு (Receiving Order) கொடுக்கப்பட்டு தொடர்ந்து டிசம்பர் 12ஆம் நாள் நீதித் தீர்ப்பாணை வழங்கப்பட்டது. பேணும் உத்தரவு நாளுக்குப் பின்னர், மரச் சாமான்களில் ஒரு பகுதி, கம்பெனியால் விற்கப்பட்டது. பணத்திற்காக. நல்லெண்ணத்தில் அதனை வாங்கியவர் இது பற்றி அறியாதிருந்தார். அதே நிலையில் இருந்த மற்றவர்க்கு வாங்கியவர் மீண்டும் அதனை விற்றார். 1910ஆம் ஆண்டு பிப்ரவரி 3ஆம் நாள் வழக்கு மன்றத்தால், 1917ஆம் ஆண்டு செப்டம்பர் 20ஆம் நாள் செய்த உரிமை மாற்றம் ஒரவஞ்சகமானது என்று தீர்மானிக்கப்பட்டு, ஒப்பந்தம் இல்லாநிலையதாக்கப்பட்டதுடன், நொடிப்புநிலை ஆக்குவினைச் செயல் என்று தீர்ப்புக் கூறப்பட்டது. எனவே 1917ஆம் ஆண்டு செப்டம்பர் திங்களுக்குப் பொறுப்புரிமையரின் (Trustee) உரிமைமூலம் முன்மேவிற்று. எனவே. அதன் பின்னர் உரிமைமாற்றம் பெறுபவர் (Transferee) எவரும், நொடிப்புநிலை பொறுப்புரிமையர்க்கு எதிராக உரிமை மூலம் எதனையும் நிலைநிறுத்த முடியாது என்று தீர்ப்பாயிற்று.

பிரிவு 57, நொடிப்புநிலை கோரிக்கை மனு அளிக்கப்பட்டதை அறியாமல், நீதித் தீர்ப்பாணைக்கு முன்னர், நபர் ஒருவரால் நல்லெண்ணத்துடன் மேற்கொள்ளப்பட்ட நடைமுறை ஒப்பந்தங்களைப் பாதுகாக்கின்றது. எனவே, நொடிப்புநிலை ஆக்குவினைச்

செயலை அறிந்திருப்பினும் பாதுகாப்புக்குத் தடையாக இல்லை என்பதுபோல் தோன்றுகிறது. ஆனால் இங்கிலாந்தில் வேறுபட்டுள்ளது. சொத்தாட்சி அதிகாரியின் உரிமைகள் நிறைவேற்றக் கடனாளர்களின் உரிமைகளுக்கு (Execution Creditor's) உட்பட்டே உள்ளது என்று மாநகர்கள் சட்டம் 53, 54ஆவது பிரிவுகளிலும், மாநிலச் சட்டம் 51ஆவது பிரிவிலும் கூறப்பட்டுள்ளது.

மாநிலச் சட்டத்தின் பிரிவு 28 C 1 (7)-ல் இக் கோட்பாட்டிற்கு ஈடான கட்டுவாசகங்கள் காணப்படுகின்றன. அதன்படி, நொடிப்புநிலை கோரிக்கைமனு கொடுக்கப்பட்ட நாளிலிருந்து, நீதித் தீர்ப்பாணை உத்தரவு முன்மேவுகிறது, என்பது தெளிவு. அந்தச் சட்டத்தில் 'முன்மேவு உரிமை கோட்பாட்டிற்கு'க் குறைந்த அளவே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.

**கோட்பாட்டிற்கான கட்டுதிட்டங்கள் (Limitations to The Doctrine)** நொடிப்புநிலையரின் நடைமுறை ஒப்பந்தங்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்படும்.

1. நொடிப்புநிலைத் தொடக்கத்திற்கு முன்பானவை முன்மேவு உரிமை கோட்பாட்டினால் பாதிக்கப்படா.

2. (அ) நொடிப்புநிலைத் தொடக்கத்திற்குப் பின்னரும், கோரிக்கை மனுவிற்கு முன்னருமான ஒப்பந்தங்கள்.

(ஆ) கோரிக்கை மனுவிற்குப் பின்னரும் நீதித் தீர்ப்பாணைக்கு முன்னருமான ஒப்பந்தங்கள்.

3. நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர் ஏற்பட்ட ஒப்பந்தங்கள் மூன்றும் வகை ஒப்பந்தங்களுக்கு எந்த வகையிலும் பாதுகாப்பளிக்க முடியாது. இரண்டாம்வகை ஒப்பந்தங்கள் மாநகர்கள் சட்டத்தின் 57-வது பிரிவின் கீழும், மாநிலச் சட்டத்தின் 55-வது பிரிவின் கீழும் உள்ள பாதுகாப்பு விதிகளினால், பாதுகாக்கப்படுகின்றன என்பதனை அறிகிறோம்.

இயல் 14

# நொடிப்புநிலையும், முன்நடவடிக்கைகளும்

## (Insolvency and Antecedent Transactions)

**தன்னிச்சையான உரிமை மாற்றங்கள்**

நொடிப்புநிலையர், நீதித் தீர்ப்பாணைக்குள்ளாகாமல் இருந்திருந்தால், சொத்துக்கு எந்தவகையான உரிமை மூலம் பெற்றிருப்பினும், சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்துப்பேணுநர், சில நிலைகளில், நீதித் தீர்ப்பாணையினால் மேற்சொன்ன நொடிப்பு நிலையரின் உரிமை மூலத்தினும் மேலான சிறந்த உரிமை மூலம் பெறுகின்றார் என்பதனை முன்னரே அறிந்துள்ளோம். அஃதாவது, நொடிப்புநிலையர் என அறிவிக்கப்படாதிருப்பினும், நொடிப்புநிலையரால் பெற இயலாத சொத்துகளைக் கடனாளர்களின் பயனுக்காகச் சொத்தாட்சி அதிகாரி அல்லது பேணுநர் உரிமைகோர முடியும்.

1. நொடிப்புநிலைத் தொடக்கத்திற்கும், நீதித் தீர்ப்பாணை நாளுக்கும் இடையே நொடிப்பு நிலையரால் உரிமைமாற்றம் செய்யப்பட்ட சொத்து ''முன்மேவு உரிமை கோட்பாட்டின்'' (Doctrine of Relation Back) நொடிப்பு நிலை வழக்கு மன்றத்தின் நியாய வரம்புக்குட்பட்டு வரும்;

2. தோற்ற உரிமையாளராக (Reputed Owner) உள்ள நொடிப்பு நிலையரின் உடைமையில் உள்ள சரக்குகள் நொடிப்பு நிலைச்சட்டத்தின் அமுலுக்கு அடங்கும்;

3. நொடிப்புநிலையின் இரண்டாண்டுக்குள்ளாக நன்னம்பிக்கையின்றியும், மறுபயனில்லாததுமான, உரிமை மாற்றங்கள் தன்னிச்சையான மாற்றங்களாக (Voluntary Transfers) அழைக்கப்படுகின்றன.

4. ஏனைய கடனாளர்களை விடுத்து கடனாளர்களில் ஒருவர் அல்லது பலருடைய பேரில், ஓரவஞ்சக முந்தளிப்பு (Fraudulent Preference) மூலமாகச் செய்யப்படுகின்ற உரிமை மாற்றங்கள்.

மேற்சொன்னவை நொடிப்புநிலையின் பொறுப்புரிமையர், நொடிப்புநிலையரினும் உயர்ந்த, சிறந்த உரிமை மூலம் கொள்கின்ற சில நடவடிக்கைகளாகும்.

மாநகர்கள் சட்டத்தின் 55-ஆவது பிரிவில் தன்னிச்சையான மாற்றங்கள் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

(அ) திருமணத்திற்கு மறுபயனாக அதற்கு முன்னரே செய்யப்பட்ட உரிமை மாற்றம்.

(ஆ) மதிப்புள்ள மறுபயனுக்காக (Valuable Consideration) நன்னம்பிக்கை கொண்ட வில்லங்கதாரர் (Incumbrencer) அல்லது வாங்குபவரின் (Purchaser) பெயருக்கு மாற்றப்பட்ட உரிமை மாற்றம்.

ஆன இவ் விரண்டு உரிமை மாற்றங்களையும் தவிர எந்த ஒரு சொத்துரிமை மாற்றமும், அத்தகைய உரிமை மாற்ற நாளுக்குப் பின்னர், இரண்டாண்டு காலத்திற்குள்ளாக உரிமைமாற்றம் செய்தவர் (Transferor) நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணைக் குள்ளானல்,

சொத்தாட்சி அதிகாரிக்கெதிராக இல்லா நிலையதாகும்.

மாநிலச் சட்டத்தின் 53ஆவது பிரிவில், அத்தகைய மாற்றங்கள் சொத்துப் பேணுநர்க்கெதிராகத் தவிர்தகு ஒப்பந்தங்களாகும் என்றும், நீதி மன்றத்தினல் இல்லாமலாக்கலாம் என்றுங் கூறப்பட்டுள்ளது. இதனல் எந்த வேறுபாடும் ஏற்படவில்லை, எனினும், திருத்தப்பட்ட முறையில் மாநிலச் சட்டத்தில், கோரிக்கை மனு அளிக்கப்பட்ட நாளிலிருந்து அந்தக் காலம் தொடக்கமாகின்றது என்பதைக் கவனித்தல் வேண்டும். மாநகர் சட்டத்தில், மனு போடுவதற்கு மூன்று மாதங்கள் முன்னிலிருந்து நொடிப்புநிலை தொடருகிறது. ஆயினும் மேற் குறிப்பிட்டபடி சில உரிமை மாற்றங்கள் பாதுகாக்கப்படுகின்றன. அவையாவன :

1. திருமணத்தின் மறுபயனாக மணத்திற்கு முந்திய (Ante-Nuptial) அறுதியாவணங்கள் (Settlements)

2. நல்லெண்ணத்துடனும் (Bonafide) மதிப்பிற்காகவும் For Value) நபர்களின் பெயர்க்குச் செய்யப்பட்ட உரிமை மாற்றங்கள்.

**Columbine v. Penhall (1853) 1. Smf Giff. 225** வழக்கில் நொடிப்புநிலைத் தருவாயில் (Eve) கடனுளர்களிடமிருந்து சொத்தினை அப்புறப்படுத்தும் நோக்கத்துடன் செய்யப்பட்ட திருமண அறுதியாவணத்தை அந்தச் சட்டப் பிரிவு பாதுகாக்காது என்று தெளிவாகச் சொல்லப்பட்டது.

தோற்றத்தில், மறுபயனுக்காக, உரிமை மாற்றம் செய்யப் பட்டு, உள்ளபடியே அந்த மறுபயன் பொய்யானதாக அல்லது பெயரளவில் (Illusory or Nominal) இருந்ததாகக் கண்டுபிடிக்கப் பட்டாலும், உரிமை மாற்றம் நல்லெண்ணத்திஞல் ஏற்படவில்லை என்ருலும், அனைத்து உரிமை மாற்றங்களும் இல்லா நிலையின வாகும். உரிமை மாற்றம் எந்த வகையினதாகவும் இருக்கலாம். விற்பனை, அடைமானம், பாகப்பிரிவினை பொறுப்பு நீக்கம் (Release) ஆக எதுவாயினும் உரிமை மாற்றம் இருக்கலாம்.

Isamoddin v. Ajmuddin, 38, Bom. L.R. 255 வழக்கில் இசைவு தீர்ப்பாணை (Consent decree) ஒன்றும் இப் பிரிவினில் அடங்கும் என்று சொல்லப்பட்டது.

இந்தியச் சட்டத்தின்கீழ், இத்தகைய நடவடிக்கைள் பொருத்து நொடிப்புநிலை வழக்குமன்றங்கள் தனிமுறை அதிகார வரம்பினை (Exclusive Jurisdiction) உடையதாக விளங்குகின்றன. எனவே, அத்தகைய வழக்குமன்றம் ஒன்றில், தன்னிச்சையான உரிமை மாற்றம் என்று ஒரு உரிமை மாற்றத்தினை இல்லாம லாக்கிய பின்னர்: உரிமையியல் வழக்குமன்றத்தில் (Civil Court) உரிமைமாற்றம் செல்லத்தக்கது என்று தீர்ப்பளிக்கக் கோரி தொடரப்படும் வழக்கில், முன் தீர்ப்பின் தடை (Res. Judicata) செயல்படும்.

இங்கிலாந்துச் சட்டம் சிறிது வேறுபடுகின்றது என்பதனை **Sharp v. Mc Henry (1887) 55 L. T. 747** வழக்கினின்றும் அறிய லாம்.

தங்களுடைய பிணையத்தினின்றும் பெறும் பிணையக் கடனுளர் களின் உரிமை இரண்டு சட்டங்களிலும் வெளிப்படையாகப் பாது காக்கப்பட்டுள்ளது.

தன்னிச்சையான உரிமை மாற்றங்களைத் தள்ளிவைக்க கோரும் மனு :

(அ) வாதுரை (Pleading) போன்றே, அனைத்துக் கருநிலை மெய்மைகளும் (Material facta) மனுவில் குறிப்பிடவேண்டும்.

(ஆ) சொத்தாட்சி அதிகாரி அல்லது சொத்து பேணுநர் மனுச் செய்யலாம். அவ்விதம் அவர்கள் மனுச் செய்யவேண்டிய போது, அவர்கள் செய்ய மறுத்தால், வழக்குமன்றத்தின் அனுமதி யுடன் கடனுளர் ஒருவர் மனுச் செய்யலாம்.

(இ) நொடிப்புநிலை நீதிமன்றம் ஒன்றே அந்த மனுவைத் தீர்மானிக்கும்.

(ஈ) இல்லாமலாக்கும் உத்தரவு சொத்தாட்சி அதிகாரிக்கு அத்தகைய நடவடிக்கைகளைத் தள்ளி வைக்கும் உரிமைக்கு உட்பட்டதாக இருந்தாலல்லாமல், நீதித் தீர்ப்பாணையினை இல்லாமலாக்கிய பின்னர் மனுச்செய்தல் முடியாது.

(உ) நொடிப்புநிலை நடவடிக்கைகள் வழக்கிடையில் இருக்கும்போதே மனுச்செய்திருக்க வேண்டும். விடுப்பிற்குப் பின்னரன்று என்பதனை நோக்கவேண்டும்.

**மறுபயனில்லா உரிமை மாற்றங்கள்**

(அ) நல்லெண்ணத்துடன் செய்யப்பட்ட குடும்ப அறுதி யாவணங்கள் செல்லத்தக்கன.

(ஆ) சொத்துரிமை மாற்றச் சட்டத்தின் (Transfer of Property Act) 53ஆவது பிரிவில் கடனுளர்களை ஏமாற்ற அல்லது தாமதிக்கச் செய்ய எண்ணும் எண்ணத்துடன் செய்யப்பட்டிருப் பின் தவிர்தகு ஒப்பந்தங்கள் ஆகலாம் என்று சொல்லப்பட்டுள்ளது.

(இ) பெயரிரவல் (Benami) புனையப்பட்ட (Fictitious) உரிமை மாற்றங்களாயின், உரிமை மாற்றம் பெறுபவர்க்கு எத் தகைய நலனையும் தருதல் ஆகாது.

**ஓரவஞ்சக முந்தளிப்பு தவிர்த்தல் (Avoidance of Fraudulent Preference)**

மாநகரச் சட்டம்-பிரிவு 56, மாநிலச் சட்டம் பிரிவு-54

ஓரவஞ்சக முந்தளிப்புக் கோட்பாடானது முதன் முதலில் நீதி முறையில் தோற்றுவிக்கப்பட்டது. Thompson v. Freeman (1786) I. T. R. 155, 99. E. R. 1026. வழக்கில் Mansfield பிரபு வினல் புகுத்தப்பட்டது. 'நொடிப்புநிலையில் இருக்கின்ற, நொடிப்புநிலையர் ஒருவர் தம்முடைய எந்த ஒரு கடனுளரையும் நம்மிச்சையான செயல் ஒன்றினுல், சலுகை காட்டக் கூடாது. அங்ஙனம் அவர் செய்வாரானுல் நொடிப்புநிலைச் சட்டங்களின் மீது செய்யப்படுகின்ற மோசடியாகக் கருதப்படும். அத்தகைய நடவடிக்கை ஓரவஞ்சக முந்தளிப்பு என்று அழைக்கப்படும்' என அந்த வழக்கில் கூறப்பட்டது. கீழ்க்காணும் ஐந்து நிபந்தனைகள்

பற்றிய மனநிறைவு எற்படுமானல், சொத்துரிமை ஒவ்வொன்றும், செலுத்தப்பட்ட செலுத்தல் ஒவ்வொன்றும், நிறைவேற்றப்பட்ட சட்டப் பிணைப்பு ஒவ்வொன்றும் எந்த நபராலும் எடுக்கப்பட்ட அல்லது பாதிக்கப்பட்ட நீதிமுறை நடவடிக்கைகள் ஒவ்வொன்றும் ஓரவஞ்சக முந்தளிப்பாகும்.

பணச் செலுத்தம் அல்லது உரிமை மாற்றம் நடைபெற்ற நாளில்,

1. கடனாளி, தன் கடன்களை அடைக்க வேண்டிய தேதியில், தன்னுடைய பணத்தினின்றும் செலுத்த இயலாதவனுயிருத்தல் வேண்டும்.

2. கடனாளர் ஒருவரின் சார்பில் அந்த உரிமை மாற்றம் அல்லது செலுத்தம் நடைபெற்றிருக்க வேண்டும்.

3. ஏனைய கடனாளர்களுக்கும் மேலாகக் கடனாளர் ஒருவரை, முந்தளிப்பு, உரிமை மாற்றம் அல்லது செலுத்தம் செய்திருக்க வேண்டும்.

4. ஏனைய கடனாளர்களுக்கும் மேலாக, அத்தகைய கடனாளர் ஒருவர்க்கு முன்னுரிமை தரும் எண்ணத்துடன் அந்த உரிமை மாற்றம் அல்லது செலுத்தம் செய்திருக்க வேண்டும்.

5. உரிமை மாற்றம் அல்லது செலுத்தம் செய்த நாளுக்குப் பின்னர் மூன்று திங்களுக்குள்ளாக அளிக்கப்பட்ட கோரிக்கை மனுவின் மீது, அந்தக் கடனாளியை நொடிப்புநிலையராக நீதித்தீர்ப்பாணை வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

அந்தக் கடனாளி நடவடிக்கைத் தேதியில் பண நெருக்கடிக்குள்ளானர் என்பதும், பிற்காலத்தில் தன் கடன்களைச் செலுத்த பணம் கிடைக்கும் என்பதும் கருதக்கூடியதல்ல. நொடிப்புநிலைத் தருவாயில் அத்தகைய முன்னுரிமை மாற்றம் அல்லது செலுத்தம் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பதும், அந்நடவடிக்கை ஏற்பட்ட நாளிலிருந்து மூன்று மாதங்களுக்குள் நொடிப்புநிலை எய்தினர் என்பதும் ஏற்பட்டிருக்க வேண்டும். நடவடிக்கை நாளன்று ஒப்பந்தக்காரர்களிடையே கடனாளி, கடனாளர் உறவு இருந்திருக்க வேண்டும். இந்த விதியில் கடனாளர் என்பவர், நொடிப்புநிலையில் எண்பிக்கும் தகுதி கொண்டவரும், நொடிப்புநிலையரின் சொத்திருப்பினின்றும் பகிர்ந்தளிப்பில் பங்கு கொண்டவருமாவார். இவை ஓரவஞ்சக முந்தளிப்பை உண்டாக்கப் போதுமானவை. ஏனைய கடனாளர்களுக்கு மேலாக, ஒரு கடனாளரைச் சார்ந்து உரிமை மாற்றம் அல்லது செலுத்தம் செய்தார் என்பது மட்டும் போதுமானதன்று. பணச் செலுத்தம் அல்லது உரிமை மாற்றம்'

செய்ததின் தலையாய நோக்கம் செலுத்தம் செய்யப்பட்ட கடனாளரை மற்றவர்களைவிட முன்னுரிமை கொண்டவராகச் செய்தது என்பதனையும் எண்பித்தல் அவசியமாகும். இக் கொள்கை Ex Parte Taylor (1886) 18 Q. B. D. 295 வழக்கில் Lopes. L. J-ஞல் விவரிக்கப்பட்டது. ஆனுல் அது ஒன்றே நோக்கமாக இருந்திருக்க வேண்டும் என்பதில்லை. ஓரவஞ்சக முந்தளிப்பு இருந்தது என்பதனை எண்பிக்கும் பொறுப்பு, சொத்தாட்சி அதிகாரி அல்லது பேணுநரைச் சார்ந்தது என்று Simc Carby & Co v. Off. Assignee 52 Col. W. N. 343, Ala. 1928 P. C. 77. வழக்கில் நீதி முறைக் குழு தீர்மானித்தது. முன்னுரிமைக் கடனாளரின் நன்னம்பிக்கை கருதக்கூடியதன்று. Adakam v. Off Assignee, 12 Rang. 482 வழக்கில், இந்த விதியினில் அடங்கும் முன்னுரிமையானது சுதந்தரமான எண்ணத்தின் விளைவான செயலாகக் கருதப்படுகிறது என்று சொல்லப்பட்டது வலுக்கட்டாயத்தினுல் செய்யப்பட்ட செயல் சுதந்திர எண்ணத்தினுல் விளைந்ததாகாது. எனவே, நொடிப்புநிலை தருவாயில், கடனாளர் ஒருவரின் தீவிர வேண்டுதலுக்கிணங்க கடனாளியால் செய்யப்பட்ட பணச் செலுத்தம் அல்லது கொடுக்கப்பட்ட பிணையமானது ஓரவஞ்சக முந்தளிப்பாகாது. ஏனெனில், கடனாளரின் வலுக்கட்டாயத்தினுல் செய்யப்பட்டதாகும். வலுக்கட்டாயம் முன்னுரிமையினை இல்லாமல் செய்துவிடுகின்றது. அதேபோன்று உரிமை மாற்றம் அல்லது பணச் செலுத்தம், உரிமையியல் அல்லது தீங்கியல் நடவடிக்கைகள் சட்டபூர்வமாக எடுக்கப்படும் என்ற அச்சத்தினுல் கடனாளியால் செய்யப்பட்டிருப்பின் ஓரவஞ்சக முந்தளிப்பாக அவற்றை எண்ணுவதற்கில்லை.

கடனாளியின் நலனை- இத்தகைய நடவடிக்கையில் தலையாய நோக்கமாக இருந்திருப்பின் இக்கோட்பாடு அமையாது. நிறைவேற்றக்கூடிய தீர்ப்பாணை ஒன்றை வைத்திருக்கும் கடனாளர் ஒருவர், தமக்குப் பிணையம் ஒன்றினைக் கடனாளி கொடுப்பதன் மறுபயனுக நிறைவேற்றத்தினைக் காலம் தாழ்த்துவதாக ஒப்பந்தம் செய்வாராஞல், அந் நடவடிக்கை ஓரவஞ்சக முந்தளிப்பாகாது என்று Re Hiralal Mondal, 40 C. W. N 1031 வழக்கில் தீர்ப்பாயிற்று. அதேபோன்று பணம் செலுத்துகின்ற சட்டப்பிணைப்பு உள்ளதாக எண்ணிக்கொண்டு கடனாளர் ஒருவர்க்குக் கடனாளி செலுத்துவாராஞல் ஓரவஞ்சக முந்தளிப்பாக அது அமையாது. ஓரவஞ்சக முந்தளிப்பு முறையில் செய்யப்படுகின்ற ஒரு உரிமை மாற்றம், நொடிப்புநிலை ஆக்கவினைச் செயலாகும். இது ஒரு தவிர்தகு ஒப்பந்தமாகும், இல்லா நிலையது அன்று என்பது கவனிக்கத்தகுந்தது. எனவே நொடிப்புநிலையினரின் கடனாளர் ஒருவரிட

மிருந்து பணத்திற்காக, நன்னம்பிக்கையுடன் உரிமை மூலம் பெறுகின்ற நபர் எவரும் பாதுகாக்கப்படுவார். அதனை எண்பிக்க வேண்டியது அன்னாரின் கடமையாகும். இந்த விதியின் கீழும், நொடிப்புநிலை நீதி மன்றங்கள், தனிமுறை அதிகார வரம்பினைக் கொண்டு விளங்குகின்றன. அதாவது நொடிப்புநிலையினால் பாதிக்கப்படுகிற முந்தைய சொத்து மாற்றங்களை, குறித்து தீர்வு கூறும் அதிகாரம் நொடிப்புநிலை நீதிமன்றத்திற்கே உரியது.

மாநிலச் சட்டத்தின் 54ஆவது பிரிவின் கட்டுவாசகங்களும் தலைநகர்கள் சட்டத்தின் 56ஆவது பிரிவைப்போன்றே உள்ளன. 54-A பிரிவில் உள்ள கூடுதலான கட்டுவாசகம், உரிமைமாற்றம் எதனையும் இல்லாமலாக்கிக்கோரும் மனுவைப் பேணுநர் அல்லது அவர் செய்யத்தவறிடின், நீதிமன்றம் அனுமதிபெற்ற எந்தக் கடனாளரும் அளிக்க வழிவகை செய்கின்றன.

In Re Bingraj Co. Cal. 1367 வழக்கில் மாநகர்கள் நொடிப்புநிலைச் சட்டத்திலும், முன்சொன்ன விதியினைக் கடைப்பிடித்துத் தீர்ப்புகள் வழங்கப்படுகின்றன என்பது தெளிவாயிற்று.

**நல்லெண்ணத்துடன் செய்யப்பட்ட நடவடிக்கைகளின் பாதுகாப்பு (Protection of Bonafide transactions)**

மாநகர்கள் சட்டத்தின் 57ஆவது பிரிவில் முன்னர்ச் சொன்ன நடவடிக்கைகள் தவிர்த்து ஏனைய, கீழ்க்காணும் நடவடிக்கைகள், நொடிப்புநிலையினால் செல்லாதாக்கப்படுவதில்லை.

1. அந்த நொடிப்புநிலையினரால் தம் கடனாளர்களில் யாருக்கேனும் செலுத்தப்பட்ட பணச்செலுத்தம் ;

2. நொடிப்புநிலையினர்க்குச் செலுத்தப்படுகின்ற செலுத்தம் அல்லது ஒப்படை (Delivery) ;

3. மதிப்புள்ள மறுபயனுக்காக நொடிப்புநிலையினரால் செய்யப்படுகின்ற உரிமைமாற்றம்;

4. நொடிப்புநிலையினரால் அல்லது நொடிப்புநிலையினருடன், மதிப்புள்ள மறுபயனுக்காகச் செய்யப்படுகின்ற ஒப்பந்தம் அல்லது வணிகத் தொடர்பு. அத்தகைய நடவடிக்கை நீதித் தீர்ப்பாணை உத்தரவிற்கு முன்னதாகவும், அத்தகைய நொடிப்புநிலையருடன் தொடர்பு கொள்பவர், நொடிப்புநிலையர்க்கெதிராக அல்லது அன்னாரால் நொடிப்புநிலை கோரிக்கைமனு அளித்ததை அறியாதிருக்கும் முன்னதாகவும், செய்திருக்க வேண்டும்.

மாநிலச் சட்டத்தின் 55வது பிரிவும் இதனை ஒத்தே உள்ளன.

மேற்சொன்ன நல்லெண்ண நடவடிக்கைகள் பாதுகாக்கப் படுகின்றன.

மாநகர்கள் சட்டத்தின் 57ஆவது பிரிவின்கீழ் ஏற்படும் பிரச்சனைகளுக்கு நொடிப்புநிலை வழக்குமன்றம் ஒன்றில்தான் தீர்வுகாண முடியும் என்றும், சாதாரண உரிமை இயல் வழக்கு மன்றத்தில் தீர்வுகாண இயலாது என்றும் கல்கத்தா வழக்கொன்றில் விளக்கம் தரப்பட்டது. இந்தப் பிரிவு நொடிப்புநிலையரின் பின்னர்ச் சேர்க்கும் சொத்துபற்றி நடவடிக்கை மேற்கொள்வதில்லை.

## நிறைவேற்றக் கடனுளர்கள் (Execution Creditors)

மாநகர்கள் சட்டம் பிரிவு 53-லும், மாநிலச் சட்டம் பிரிவு 51-லும், நிறைவேற்றக் கடனுளர்களின் உரிமைகள் மீதான தடைகள் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளன. மாநகர்கள் சட்டத்தில் நீதித் தீர்ப்பாணைக்கு முன்னரும், கடனுளிக்கு எதிராக அல்லது கடனுளியால் அளிக்கப்பட்ட நொடிப்புநிலை மனுவினைப்பற்றி நிறைவேற்றக் கடனுளர்கள் அறிந்து கொள்ளும் முன்பாகச் சொத்திருப்புகளை, நிறைவேற்றத்தின் பயனுக்காகப் பெறுவதற்கு நிறைவேற்றக் கடனுளர் (Execution creditor) தகுதி பெற்றவராவார் என்று கூறப்பட்டுள்ளது.

நொடிப்புநிலை அடைவதற்கு முன்பு அவ்வாறு அடையப் போகும் நிலையிலுள்ளவர்கள்மீது, தீர்ப்பாணைகள் ஏற்பட்டு அவற்றை நிறைவேற்றம் செய்திருக்கலாம். அதன் பயனாக, நீதி மன்றங்களிடம் பணம் வரவு வந்திருக்கலாம். கடனுளியின் சொத்துகள், நீதிமன்றத்தினால் ஏற்பட்ட ஏலங்களுக்கு உட்பட்டிருக்கலாம். அப்பொழுது ஒருவர் நொடிப்புநிலை எய்தினால் நிறைவேற்றத்தினால் வரும் பயன்களுக்கு, சொத்தாட்சி அதிகாரிக்கு எதிராக ஒருவரும் கோருரிமை கொள்ளமுடியாது. தீர்ப்பாணை தேதிக்கு முன்னதாகவோ நொடிப்புநிலை மனுவைப்பற்றி கடனுளருக்கு அறிவிப்பு ஏற்படுவதற்கு முன்னதாகவோ கிடைத்த பணம், சொத்துகள் இவற்றில் சொத்தாட்சி அதிகாரிக்கு உரிமை கிடையாது. இப்படி மாநகர் சட்டம் வகையம் செய்திருந்தது. மாநிலச் சட்டத்தில் மனுவை ஏற்கும் தேதிக்கு முன் கிடைத்த பணம், சொத்துகளில் மட்டும், சொத்து பேணுநருக்கு உரிமை கிடைக்காது என்று கூறப்படுகிறது. இப்பொழுது (அதாவது 1950-க்கு பிறகு) இரு சட்டங்களும் ஒன்றுபோல இருக்கின்றன. [மாநகர் சட்டம் பிரிவு-53 மாநிலச் சட்டம் பிரிவு-51]. பிணையத்தின் மீதான தீர்ப்பாணையின் நிறைவேற்றத்தினால் நொடிப்புநிலைப் பாதிக்கப்படாது.

இயல் 15

# சொத்துப்பெறுதலும் பகிர்ந்தளித்தலும்

## (Realisation and Distribution of Property)

மாநகர்கள் சட்டம் 58-59 பிரிவுகளில் நொடிப்புநிலையரின் சொத்துப் பெறுதலைப் பொருத்துக் குறித்த கட்டுவாசகங்கள் காணலாம்.

நொடிப்புநிலையரின் ஆவணங்கள், (documents) கணக்குப் புத்தகங்கள் (Books), பத்திரங்கள் (deeds) முதலானவற்றையும் பருவியல் வழி தரக்கூடிய (Carporeal delivery) அன்னூர்க்குச் சொந்தமான இதர சொத்துகளையும், கூடிய விரைவில் உடைமை யாக்கிக் கொள்ளவேண்டியது சொத்தாட்சி அதிகாரியின் கடமையாக இருக்கிறது. உரிமை இயல் சட்டத்தின் (Civil Procedure Code) 40-வது பிரிவின்கண் கூறப்பட்டுள்ள பேணு நரின் (Receiver) நிலையில் சொத்தாட்சி அதிகாரி உள்ளார்.

நொடிப்புநிலையரால் செய்யக்கூடிய அனைத்து உரிமை மாற் றங்களும் பங்குகள் முதலான சொத்துகளைப் பொருத்துச் சொத் தாட்சி அதிகாரி மாற்றம் செய்யலாம். வழக்கும் உரிமையுள்ள பொருள்களும் அவ்வாறே சொத்தாட்சி அதிகாரி மாற்றமான தாகக் கருதப்படும். எந்த ஒரு குறிப்பிட்ட அதிகாரிக்கும், நொடிப்புநிலையரின் அல்லது மூன்றும் நபரின் பாதுகாப்பிலுள்ள நொடிப்புநிலையரின் சொத்தின் எந்தப் பகுதியினையும் கைப்பற்றுவ தற்காக, நீதிமன்றம் பிடி ஆணை (warrant) ஒன்றினை வழங்கும். நொடிப்புநிலையரின் எந்த ஒரு சொத்தும் மறைக்கப்பட்டு விட்ட தாக நீதிமன்றம் நம்பும் காரணம் இருக்குமானல், 59-வது பிரிவில் கூறியுள்ளபடி, வழக்கு மன்றம் சோதனை ஆணை ஒன்றையும் வழங்க முடியும். நொடிப்பு நிலையர் இந்திய இராணுவ அல்லது

கப்பற்படை அதிகாரி அல்லது அரசின் நாட்டு நிர்வாகப்பணியில் (Civil Service) நியமிக்கப்பட்ட எழுத்தர் அல்லது அதிகாரி அல்லது வேறான முறையில் இருப்பின், நீதிமன்றம் பற்றுகை நிறைவேற்ற தீர்ப்பாணையில் (Attachment in execution) உத்தரவிடக்கூடிய அளவினதான அன்னாரின் ஊதியத்தைப் பகிர்ந்தளிப்பதற்காகச் சொத்தாட்சி அதிகாரி பெறுவார். பிரிவு 60-ல் நொடிப்புநிலையர் ஒருவர் முன்னர் சொன்னது போன்றதல்லாமல் சம்பளம் அல்லது வருமானம் (Salary or Income) பெறுபவராயின், நீதிமன்றம் அப்போதைக்கப்போது நியாயம் என்று கருதி உத்தரவிட்டுப் பற்றுகை செய்யக் கூடியதுமான சம்பள அல்லது வருமானத்தின் பகுதியைப் பகிர்ந்தளிக்க வேண்டி, சொத்தாட்சி அதிகாரி பெறுவார் என்று கண்டுள்ளது. பிரிவு 61-ல் நொடிப்புநிலையரின் சொத்து அடுத்தடுத்து உரிமை பெறுகின்ற சொத்தாட்சி அதிகாரியைச் சேர்ந்தடைந்து மாறும் என்று கூறுகிறது. இந்தப் பிரிவு பம்பாய் மாநிலத்தைப் பொருத்துச் சட்டநீக்கம் செய்யப்பட்டுவிட்டது.

பேணுநரின் அதிகாரத்தைப்பற்றி மாநிலச் சட்டத்தில், இத்தகைய விரிவான கட்டுவாசகங்கள் இல்லை. 56ஆவது பிரிவில், நீதித் தீர்ப்பாணையின்போது, அல்லது பின்னர் எப்பொழுதேனும், பேணுநர் ஒருவரை வழக்குமன்றம் நொடிப்பு நிலையினரின் சொத்துக்காக நியமிக்கலாம் என்றும் அதன் பின்னர் அத்தகை சொத்து, பேணுநரைச் சென்றடையும் என்றும் கூறப்பட்டுள்ளது. பிரிவு 57-ல் ஏற்கெனவே சொத்துப் பேணுநர் ஒருவர் இருப்பாரானால், அன்னார் அத்தகைய பேணுநராக நியமிக்கப் படுவார் என்று கூறப்பட்டுள்ளது. பிரிவு 58-ல் பேணுநர் ஒருவர் நியமிக்கப்படாவிடில், அத்தகைய பேணுநரின் உரிமைகளும் அதிகாரங்களும் நீதிமன்றம் உடையதாக இருக்கின்றது என்று சொல்லப்பட்டுள்ளது.

### பொறுப்பிணைச் சொத்து பாத்தியதை விட்டுவிடுதல் (Disclaimer of Onerous Property)

வினையெழு கடப்பாடுகளால் (Covenants) பொறுப்புகள் (burdened) மிகுந்த நிலச் சொத்து, விற்கமுடியாத, ஆனால் அதன் மீதுள்ள நிலுவைக்காகக் கேட்கும் அதிகாரம் படைத்த கம்பெனி பங்குகள் முதலான சட்டப்பிணைப்புகள் மிகுந்த சொத்தினைப் ‘பொறுப்பிணைச் சொத்து’ எனலாம். சட்டத்தின் கட்டுவாசகங்களுக்குட்பட்டு, சொத்தாட்சி அதிகாரி அவற்றின் பாத்தியதை ஏற்க மறுக்கலாம். மாநகர்கள் சட்டதின் 62ஆவது பிரிவில் உள்ள இந்த விதியின் நோக்கமானது, கடனாளர்களுக்கு நன்மை

பயப்பதற்குப் பதிலாக, இத்தகைய சொத்துகள் பொறுப்புகளைத் தந்து தொல்லைதரும் என்பதனால், அவற்றை விட்டுவிடலாம் என்பதாகும்.

1. அவற்றின்மீது சொத்துரிமை கொண்டாடி உடைமை ஆக்கிக்கொண்டிருப்பினும், சொத்தாட்சி அதிகாரி நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர் 12 மாதங்களில் அவற்றை எழுத்து மூலமாக மறுத்துக் கையொப்பமிடலாம் என்று விதி கூறுகின்றது.

2. நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர் ஒரு மாதத்திற் குள்ளாகச் சொத்தாட்சி அதிகாரிக்கு அத்தகைய சொத்து இருப்பது தெரியாமலிருந்தால், அதனை அறிந்த முதல் நாளி லிருந்து 12 மாதங்களுக்குள்ளாக அதனை அவர் விட்டுவிடலாம். அத்தகைய மறுப்புத் தெரிவித்த நாளிலிருந்து, அச்சொத்தின் மீது, நொடிப்புநிலையர்க்குள்ள, உரிமைகள், நலன்கள், பொறுப்புகள், அந்த மறுப்பினால், தீர்மானத்திற்குள்ளாகும். சொத்தாட்சி அதிகாரியிடம் சொத்துச் சேர்ந்தடைந்த நாளி லிருந்து, இத்தகைய மறுப்பினால், அன்னார் அனைத்துச் சொந்தப் பொறுப்புகளிலிருந்தும் விடுவிக்கப்படுகின்றார்.

3. சொத்தாட்சி அதிகாரியினையும் நொடிப்புநிலையரையும் பொறுப்புகளிலிருந்து விடுவிக்கத் தேவையான அளவுக்குத்தான் பயன்படுமே தவிர, வேறு எந்த ஒரு நபரின் உரிமைகள் அல்லது கடமைகளைப் பாதிக்காது.

4. ஆயினும், சொத்தாட்சி அதிகாரி, குத்தகையிருப் புகளை, வழக்கு மன்றத்தின் அனுமதியின்றி மறுக்கத் தகுதியற்ற வராக உள்ளார். பிரிவு 62இல் வழக்குமன்றம் அனுமதியினை வழங்கும் முன்னராக, அதில் நலன்கொண்ட நபர்களுக்கு அறிவிப்பு வழங்கக் கோரலாம்; வழக்கு மன்றத்திற்கு நியாயம் என்று தோன்றுகின்ற, நிபந்தனைகளை விதிக்கலாம். நிலக்குத்தகை யாளரால் செய்யப்பட்ட முன்னேற்றங்கள், (Improvements) கட்டடங்கள் முதலானவற்றைப் பொருத்து, தேவையான உத்தரவு வழங்கலாம் என்று கண்டிருக்கிறது.

5. எந்த ஒரு சொத்தின்மீதும் நலன்கொண்ட நபர் எவரும், சொத்தாட்சி அதிகாரிக்கு எந்த ஒரு சொத்தினையும் மறுக்க அல்லது மறுக்காதிருக்க முடிவுசெய்யுமாறு வேண்டுகோள் விடுத்தால், அவ்விதம் வேண்டுகோள் விடுத்த நாளிலிருந்து 28-நாட்களுக்குள்ளாக அல்லது வழக்குமன்றம் நீடிக்கின்ற கால வரையறைக்குள் சொத்தாட்சி அதிகாரி அவ்விதான மறுப்புப் பற்றிய அறிவிப்பினைச் செய்யத் தவறினும் அல்லது மறுத்தாலும், மேற்சொன்ன பிரிவு 62-ன்கீழ் சொத்தினை மறுக்க, அதன் பின்னர்

அவர் அருகதை அற்றவராகின்ருர். பிரிவு 64 ஒப்பந்தம் ஒன்றனேச் சொத்தாட்சி அதிகாரி அங்ஙனம் செய்யாதிருந்தால் அதனே ஏற்றதாகக் கருதப்படுவார் என்று கூறப்பட்டுள்ளது. பொறுப்பிணே உள்ள விளேயெழு கடப்பாடுகள் அல்லது ஒப்பந்தங் களின் பொறுப்புகளிலிருந்து தப்பிக்க, சொத்தாட்சி அதிகாரியின் மறுப்பு அத்தியாவசியமாகிறது.

**Krishna Chinoo** *v.* **Matubhai, 53, Bom.** 290 வழக்கில், அனுமதிக்கப்பட்ட காலவரையறைக்குள் சொத்தாட்சி அதிகாரி மறுப்புக் செய்யாமையினுல் அவற்றினே நிறைவேற்றும் சொந்தப் பொறுப்புக்குள்ளானுர் என்று முடிவாயிற்று.

இங்கிலாந்து நாட்டில் Re : Debtor, (1950) 1 Ch 423. வழக்கில் அந் நாட்டுச் சட்டத்தின் 54-வது பிரிவில் கொடுக்கப் பட்ட காலக்கெடுவுக்கு மேலாகக் கால அளவினே நீடிக்கச்செய்யும் அதிகாரம் நீதி மன்றத்திற்குக் கிடையாது என்று தீர்ப்பாயிற்று.

6. நொடிப்புநிலேயருடன் ஒப்பந்தம் செய்துள்ள நபர் ஒருவருடைய மனுவின்மீது வழக்கு மன்றம் நேர்மை நெறி என்று எண்ணுகின்ற இழப்பீடுகளே வரையறுத்து, ஒப்பந்தத்தை இறுத்தம் (Rescission) செய்து உத்தரவிடலாம். அவ்விதம், நபர் ஒருவர்க்குத் தீர்ப்பளிக்கப்பட்ட இழப்பீடுகளே, அன்னவர் நொடிப்புநிலேயில் எண்பிக்கலாம் என்று பிரிவு 65 சொல்கின்றது.

7. பிரிவு 66-ல் சொத்தாட்சி அதிகாரி, எந்த ஒரு சொத்தினேயும் மறுத்த பின்னர், அவ்விதம் மறுக்கப்பட்ட சொத் தினில் நலன்கொண்ட அல்லது பொறுப்புக்கொண்ட எந்த ஒரு நபரும் நீதி மன்றத்திடம் அதனுடைய உரிமைகோரி மனுச் செய்ததின்பேரில், அன்னவரைத் தேவையான அளவுக்கு விசாரித்து, அன்னுர்க்கு அல்லது நீதி மன்றத்திற்கு நியாயம் என்று தோன்றும் நபர் ஒருவருக்குச் சொத்தினே, அன்னுரின் முன் சொன்ன பொறுப்புக்கான சரியீடாக (Compensation) தந்துவிடு மாறும் சேர்ந்தடையுமாறும் தேவையான நிபந்தனேகளுடன் உத்தரவிடும்; பின்னர் அந்தச் சொத்து எந்தவிதமான உரிமை மாற்றத்திற்கும் அவசியமின்றி அன்னுரைச் சேர்ந்தடையும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

8. மறுக்கப்பட்ட சொத்து, குத்தகையிருப்புகளானுல், கீழ்க்குத்தகை எடுப்பவர் அல்லது அடைமானம் பெறுபவர் யாராயினும், அவருடைய பெயர்க்கு, வழக்கு மன்றம் சேர்ந் தடை உத்திரவினேச் சில நிபந்தனேகுட்படுத்தியே வழங்கும் என்பது தெளிவு. அன்னவர் நிபந்தனேகளே ஏற்க மறுத்திடின்,

சொத்தின், சொத்தின் மீதுள்ள பிணையம், நலனினின்றும் அவர் ஒதுக்கப்படுவார்.

9. பிரிவு 67, மறுப்பு ஒன்றினால் பாதிக்கப்பட்ட நபர்கள் நொடிப்புநிலையில் அந்தப் பாதிப்பினை எண்பிக்கலாம் என்று கூறுகிறது.

10. சில நிபந்தனைகட்குட்படுத்தி, நீதிமன்றத்தின் அனுமதியில்லாமலேயே, குத்தகையினை மறுக்கலாம் என்று பம்பாய் நொடிப்புநிலைச் சட்டம் 187-வது விதியில் சொல்லப்பட்டுள்ளது.

மாநகர்கள் சட்டத்தில் காணப்படுவது போன்ற, பொறுப் பிணைச் சொத்து மறுப்புக் கட்டுவாசகங்கள் மாநிலச் சட்டத்தில் இல்லை.

**பெறுவதைப் (Realisation) பொருத்துச் சொத்தாட்சி அதிகாரியின் அதிகாரங்கள்**

மாநகர்கள் சட்டம் 68-வது பிரிவில், வசதியான முறையில் பட்டுவாடா செய்வதற்காக நொடிப்புநிலையரின் சொத்தினைப் பெறுவதற்குச் சொத்தாட்சி அதிகாரிக்கு உரிமையுண்டு. அதன் பொருட்டு,

1. நொடிப்புநிலையரின் சொத்து முழுவதையும் அல்லது அதன் ஒரு பகுதியைச் சொத்தாட்சி அதிகாரி விற்கலாம்,

2. பெற்ற பணத்திற்கு இரசீது கொடுக்கலாம்.

3. வழக்கு மன்றத்தின் அனுமதியுடன், நொடிப்புநிலையரின் வியாபாரத்தைப் பயன்பெறும் வகையில் முடித்துக்கொள்ள வேண்டி, நடத்தலாம்.

4. நொடிப்புநிலையரின் சொத்தினைப் பொருத்த உரிமையியல் வழக்குகள், இதர நடவடிக்கைகள் மேற்கொள்ள, எதிர் வழக்கிடச் செய்யலாம்.

5. வழக்கு மன்றத்தால் வழங்கப்படுகின்ற எந்த ஒரு நடவடிக்கையினையும் செய்ய வழக்குரைஞர் ஒருவரை நியமிக்கலாம்.

6. நொடிப்புநிலையரின் எந்தச் சொத்தினையும் விற்பதற்கான மறுபயனாக, வழக்கு மன்றம் நியாயம் என்று எண்ணுகின்ற பிணையத்திற்கான நிபந்தனைகளுடன், வருங்காலத்தில் செலுத்தக் கூடிய பணங்களையோ, முழுமையாகப் பணம் செலுத்தப்பட்ட பங்குகளையோ, கடனீட்டுப் பத்திரங்களையோ ஏற்கலாம்.

7. நொடிப்புநிலையரின் கடன்களைச் செலுத்த அல்லது அவருடைய வியாபாரத்தை நடத்த, அவருடைய சொத்தின்

எந்த ஒரு பகுதியினையும் அடைமானம் அல்லது அடகு செய்ய லாம்.

8. உடன்பாடுகள் கொள்கின்ற நிபந்தனைகளின்மேல், எந்த ஒரு கடனை அல்லது பாத்தியதை பற்றிய பிரச்சினையை இசைவு தீர்ப்பு முறைக்கு (**Arbitration**) விட்டு ஒத்திசைவு (**Compromise**) செய்து கொள்ளலாம்.

9. பயனுள்ள முறையில் விற்கமுடியாத எந்தச் சொத்தினையும் உள்ளவாறே கடனுளர்களிடையே பிரிக்கலாம். வழக்குமன்றம் காட்டும்முறையில் அல்லது நிர்ணயிக்கின்ற வகையில், பிணையங்களைச் செலுத்தி விட்டும், நடவடிக்கை எடுத்தும், நீதிமன்றத்திற்குச் சொத்தாட்சி அதிகாரி, கணக்குக்காட்ட வேண்டும். விதியின்பாற் சொல்லப்பட்ட, சொத்தாட்சி அதிகாரிக்குக் கொடுக்கப்பட்டுள்ள, நீதிமன்றத்தின் அனுமதி பெற்றுச்செலுத்தக்கூடிய அதிகாரங்கள் முன் நிபந்தனையுடன் கூடியதன்று என்பது கவனிக்கத்தக்கது.

**சொத்துப் பேணுநரின் அதிகாரங்கள்**

மாநிலச்சட்டத்தின் 59ஆவது பிரிவு நொடிப்புநிலையரின் சொத்திருப்பைப் பெறுவதற்கான முன் சொன்னது போன்ற அதிகாரங்கள் நியமிக்கப்பட்ட பேணுநர்க்கு அளிக்கிறது. ஆனல், ஒரு வேறுபாடு உள்ளது. நொடிப்புநிலையரின் சொத்தினை விற்பதற்காக, மறுபயனுக நிறுமப் பங்குகள் முதலானவை பெறப் பேணுநர்க்கு அதிகாரம் அளிக்கப்படவில்லை. மேலும் நொடிப்பு நிலையரின் வியாபாரத்தை நடத்துவதற்காகக் கடன்பெறும் அதிகாரமும் கொடுக்கப்படவில்லை. விவசாய காரியங்களுக்காக வைத்துள்ள அல்லது குத்தகைக்கு விட்டுள்ள, அரசுக்கு வரி செலுத்தும் எந்த ஒரு அசையாச் சொத்தினையும், பேணுநர் விற்க முடியாது. ஆனல் ஏனைய சொத்துகளைப்பெற்ற பின்னர், சட்டத்தின்கீழ் எண்பிக்கக்கூடிய கடன் நிலுவைகளைத் தீர்க்கத் தேவையான தொகையினையும் விற்காத நொடிப்புநிலையரின் ஏனைய அசையாச் சொத்தினை அதன்மீதுள்ள வில்லங்கத்துடனும் அறுதியிடும். மாவட்ட ஆட்சியாளர்க்கு இதுபற்றி விவர அட்டவணை ஒன்று அனுப்பப்படும், அன்பர் பின்னர், அதன்மீது பணத்தைப் பெறுவதற்காக உரிமையியல் சட்டத்தின் 3ஆவது பின் இணைப்பில் பாரா 2-ல் இருந்து 10வரை சொல்லப்பட்டுள்ள முறையினைக் கடைப்பிடிப்பார், இவற்றை மாநிலச் சட்டத்தின் 60ஆவது பிரிவில் காணலாம். இதனை உரிமையியல் சட்டத்தின் 88ஆவது பிரிவின் கீழ்த் தீர்மானிக்கப்பட்டு நடைமுறையில் எந்த உள்ளிடத்தும் அமுல் செய்யலாம். மாவட்ட ஆட்சியாளர்,

அவ்விதம் வசூலிக்கப்பட்ட பணத்தினை, நொடிப்புநிலை வழக்கு மன்றம் செலவழிக்கவேண்டி வைத்திருப்பார்.

**சொத்துப் பிரித்தல் : பங்காதாயங்கள் (Dividends)**

மாநகர்கள் நொடிப்புநிலைச் சட்டத்தின் 69ஆவது பிரிவில்

1. நொடிப்புநிலையரின் சொத்தினைப் பெற்றபின்னர், சொத்தாட்சி அதிகாரி, கடன்களை எண்பித்த கடனாளர் களிடையே, முடிந்த அளவு வசதியுடன்கூடிய வேகத்தில் பங்கா தாயத்தை விளம்பியும், பங்கிட்டும் கொடுப்பார். மாநிலச் சட்டத்தின் 59ஆவது பிரிவில் இதேபோன்ற கடப்பாடு பேணு நர்க்கும் உண்டு என்று சொல்லப்பட்டுள்ளது.

2. நீதித் தீர்ப்பாணைக்குப் பின்னர் ஓராண்டு காலத்திற் குள்ளாக முதல் பங்காதாயம் சொல்லப்பட்டுப் பங்கிடப்படும். இல்லையெனில் பின்வரும் நாளுக்குக் காலம் தாழ்த்தினால் சொத்தாட்சி அதிகாரி, வழக்குமன்றம் மனநிறைவு கொள்ளத் தக்க தகுந்த போதுமான காரணத்தைக் கூறவேண்டும்.

3. மாறான காரணங்கள் இல்லாதவரையில், 6 மாத இடைவெளிக்கு மிகாமல், அடுத்துவரும் பங்காதாயங்கள், அறைவிக்கப்பட்டு செலுத்தப்படும்.

4. பங்காதாயங்களைச் அறைவிப்பதற்கு முன்பாகச் சொத் தாட்சி அதிகாரி குறிப்பிட்ட முறையில் தான் செய்ய எண்ணி யுள்ளதை வெளியிட்டு அறிவிப்புச்செய்தும், எண்பிக்காத பட்டி யலில் கூறப்பட்டுள்ள கடனாளர் ஒவ்வொருவர்க்கும் நியாயமான அறிவிப்பினையும் அனுப்பவேண்டும்.

5. பங்காதாயம் விளம்பிய பின்னர், எண்பித்த கடனாளர் ஒவ்வொருவர்க்கும், பங்காதாயத் தொகையினைக் காட்டியும், எவ்விதம் அதனைச் செலுத்துதல் நடைபெறும் என்பதனையும் விளக்கிச் சொத்தாட்சி அதிகாரி அறிவிப்பு ஒன்றினை அனுப்புவார்.

6. நிறுமத்தின் கூட்டாளி ஒருவர் நொடிப்புநிலையர் எனத் தீர்மானிக்கப்பட்டால், அவருடைய கூட்டுக் கடனாளர், நொடிப்பு நிலையரின் தனிச் சொத்தினின்றும் பங்காதாயம் பெற இயலாது. மாநிலச் சட்டத்தில் இதுபோன்ற விதி இல்லை

மாநிலச் சட்டத்தின்கீழ்க் காலவரையறை நிர்ணயம், விளம்பல், அறிவிப்பு முதலானவை தேவையில்லை

7. சொத்திருப்பு முழுவதும் பெற்றதும் அல்லது நொடிப்பு நிலை நடவடிக்கையினைத் தேவையின்றி நீடிக்கத் தேவையில்லை என்று சொத்தாட்சி அதிகாரி எண்ணும் அளவில் பெற்றதும்,

நீதிமன்றத்தின் அனுமதியுடன் இறுதிப் பங்காதாயத்தை விளம்ப லாம். எனினும் அவ்வாறு செய்யும் முன்னர், பாத்தியதை எண் பிக்காத கடனுளர்கட்குக் குறித்த காலத்திற்குள்ளாக அவர்கள் தங்களுடைய கடனை எண்பிக்காவிடில் இறுதிப் பங்காதாயம் விளம்பப்பட்டுவிடும் என்பதற்கான அறிவிப்பினைத் தருதல்வேண் டும். அவ்விதம் குறிப்பிடப்பட்ட காலக்கெடு தீர்ந்துவிடினும்! அல்லது வழக்குமன்றம் மேலும் அனுமதிக்கின்ற கால அளவிற்குப் பின்னர், பிரிவு 73-ல் கூறியுள்ளபடி அவர்களின் பாத்தியதையைக் கருத்தில் கொள்ளாது இறுதிப் பங்காதாயத்தைக் கொடுக்க முற் படவேண்டும்

8. பங்காதாயத்திற்காகச் சொத்தாட்சி அதிகாரிக்கு எதிராக உரிமையியல் வழக்கு இருக்க முடியாது. ஆனுல் எந்த ஒரு பங்காதாயத்தையும் தர மறுத்திடின், பாதிக்கப்பட்ட நபரின் மனுவின்மீது வழக்கு மன்றம் பங்காதாயத்தையும் அதற்கான 6 சத விகிதவட்டியினையும் செலவு தொகையினையும் செலுத்தும்படி உத்தரவிடலாம். Prout *v*. Gregory, (1889) 24 Q. B. D. 281 வழக்கில், பங்காதாயம் கடனுகாது என்றும், ஆதலால் பற்றுகை செய்வதற்குத் தக்கது அன்று என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது.

9. சட்டத்தில் வகுத்துள்ளபடி அனைத்துக் கடனுளர் கட்கும் முழுமையாகவும், வட்டியுடனும், நடவடிக்கைகளுக்கான செலவினங்களும் செலுத்திய பின்னர் எஞ்சியுள்ள மிகுதியினுக்கு நொடிப்புநிலையர் உரிமை படைத்தவராவார்.

## நொடிப்பு நிலையர்க்கான அனுமதி தொகை (Allowance to the Insolvent)

மாநகர்கள் சட்டத்தின் 75-வது பிரிவின்கீழ், சொத்தாட்சி அதிகாரி, நொடிப்புநிலையரின் வியாபாரத்தைக் கடனுளர்களின் பயனுக்காக நடத்த அல்லது அவருடைய சொத்தினை நிர்வகிக் கவும், பராமரிப்பை மேற்பார்வையிடவும், நொடிப்புநிலையினரை நியமிக்கலாம், என்று கூறப்படுகிறது. அவருடைய சொத்தி லிருந்து, அன்னாரின், குழந்தைகளையும், குடும்பத்தினரையும் (support) பராமரிக்கும் பொருட்டு அல்லது அவருடைய சொத் திருப்பினை திரட்டும் பணியில் நியமிக்கப்பட்டிருப்பின், அன்னாரின் சேவைகளின் மறுபயனுக நீதிமன்றம் ஏதேனும் அனுமதி தொகையினை (Allowance) வழங்கலாம். இந்த அனுமதி தொகையும் காலத்திற்கேற்ப நீதிமன்றத்தால் மாற்றப்படலாம்.

மாநகர்கள் சட்டத்தின் இந்த விதியினைப் போன்றே மாநிலச் சட்டத்தின் 66ஆவது பிரிவும் உள்ளது. விதியினில் பயன்படுத்தப் பட்ட 'பராமரிக்க' என்ற' சொல் விரிவாகப் பொருள் கொள்ளப்

பட்டு, Alagappa *v.* McIver, 59, Mad. 862 வழக்கில், தனக்கெதிராக உள்ள. தீங்கியல் குற்றச்சார்த்தினை (Criminal Charge) எதிர்த்து வழக்காடத் தேவையான அனுமதி தொகையினையும் உள்ளடக்கியதாகத் தீர்ப்பளிக்கப்பட்டது.

**கோரப்படாத பங்காதாயங்கள் (Unclaimed Dividends)**

15ஆண்டுகளுக்கு அல்லது நிர்ணயிக்கப்பட்ட குறைந்தகால அளவினுக்குப் பாத்தியதை கோராத பங்காதாயங்களைத் தன்னிடத்தில் வைத்துள்ள சொத்தாட்சி அதிகாரி, வழக்கு மன்றம் வேறாக உத்தரவிட்டாலொழிய இந்திய அரசின் கணக்கில் செலுத்தவேண்டும். பின்னர்க் கோருபவர், வழக்கு மன்றத்திடம் மனுச் செய்யவேண்டும். பி. 113இல் வழக்கு மன்றம், மனநிறைவு கொண்டால் பணம் செலுத்த உத்தரவிடும்.

## இயல் 16

# சொத்தாட்சி அதிகாரிகளும் பேணுநர்களும்

## (Official Assignees and Receivers)

சொத்தாட்சி அதிகாரி

பொதுவாக, அந்தந்த மாநில அரசு சொத்தாட்சி அதிகாரியினை நியமனம் செய்கிறது. பிரிவு 77-ல் குறிப்பிடுகின்ற பிணயத்தை ஒவ்வொரு சொத்தாட்சி அதிகாரியும் கொடுக்க வேண்டும், என்று கூறப்பட்டுள்ளது. பம்பாய் மாநிலத்தில் மட்டும் சொத்தாட்சி அதிகாரி கூட்டுருத் தனிமமாக (Corporation Sole) ஆக்கப்பட்டிருக்கிறார். பிரிவு 78, அவர், ஆணையுறுதி (Oaths) செய்து வைக்க அதிகாரம் கொண்டவர் என்று கூறுகிறது. விடுப்பு மனு ஒன்றின் மீது, நொடிப்புநிலையரின் விடுப்பைத் தகுதியுள்ளதாக்க அல்லது நிறுத்தி வைக்க அல்லது நிராகரிக்க, நீதிமன்றம் நியாயம் என்று தீர்மானிக்க வேண்டி, நொடிப்புநிலைச் சட்டத்தின்கீழ் எந்தக் குற்றத்தினையாவது, அல்லது வேறாக நொடிப்புநிலையர் புரிந்தாரா என்பதனைப் பொருத்து நொடிப்புநிலையரின் நடத்தையை ஆராய்ந்து நீதி மன்றத்திற்குத் தாக்கல் செய்யும் கடமை அவருடைய மற்றக் கடமைகளுடன் சேர்ந்ததாகும். மேலும், நீதிமன்றம் கட்டளையிடுகின்ற அல்லது நிர்ணயிக்கின்ற ஒரவஞ்சக நொடிப்புநிலையர்களின் குற்ற வழக்குத் தொடர்புகளில் சொத்தாட்சி அதிகாரி பங்கு கொள்ளவும் வேண்டும் என்று பிரிவு 79 கூறுகின்றது. பிரிவு 80-ல் தகுந்த கட்டணம் செலுத்தி எந்தக் கடனாளராவது, கடனாளர்களின் பட்டியல் தேவை என்று கோரினால், அதனைத் தந்துதவ வேண்டியது அன்னாரின் கடமையாகும் என்று சொல்லப்பட்டுள்ளது. பிரிவு 81, நிர்ணயிக்கப்பட்ட வெகுமதியினைத் தவிர வேறொன்றிற்கும் சொத்தாட்சி அதிகாரி தகுதிகொண்டவரல்லர் என்று விளக்குகின்றது. கணக்குகளில் அல்லது மற்றவற்றில்

தோன்றுகின்ற, எந்த ஒரு முறைப்பிழைக்கும் (Misfeasance) கவன மின்மை (Neglect) அலலது செய்யாமைக்கும் (Omission), நீதி மன்றம், சொத்தாட்சி அதிகாரியினைப் பொறுப்பாக்கலாம். மேலும், நொடிப்புநிலையரின் சொத்திருப்புக்கு அதனால் ஏற்பட்ட இழப்பிற்கு ஈடு செய்யக்கோரலாம் (பி. 82). ''நொடிப்புநிலையரின் சொத்துக்குச் சொத்தாட்சி அதிகாரி'' என்ற பெயரில் சொத்தாட்சி அதிகாரி வழக்கிடவும் அவர்க்கு எதிரான வழக்குத் தொடரவும் முடியும். அந்தப் பெயரினால் எந்தச் சொத்தினையும் வைத்திருக்கவும் ஒப்பந்தங்களில் பங்குகொள்ளவும் முடியும் (பி. 83). அந்தச் சொத்தாட்சி அதிகாரி நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணைக்குள்ளானால், அலுவல் நீக்கம் செய்யப்படுவார். (பி. 84) சட்டத்தின் கட்டுவாசகங்களுக்கும், வழக்கு மன்றத்தின் ஆணைகளுக்கும் உட்பட்டு, நொடிப்புநிலையரின் சொத்திருப்பினை நிர்வகிப்பதில், கடனாளர்களின் கூட்டம் ஒன்றில் நிறைவேற்றப் பட்ட தீர்மானத்தைச் சொத்தாட்சி அதிகாரி கவனம் கொள்ள வேண்டும். கடனாளர்களின் விருப்பங்களை அறுதியிடும் பொருட்டு அப்போதைக்கப்போது அவர்களின் கூட்டத்தைக் கூட்டவேண்டும். கடனாளர்கள் தீர்மானம் ஒன்றினால் அல்லது வழக்குமன்றம் அல்லது எண்பித்த கடனாளர்களில் நான்கில் ஒரு பகுதியினர், எழுத்துமூலமாக, ஒரு செயலைச்செய்ய வேண்டுமானால், அதனைச் செய்யவேண்டிய கடப்பாட்டில் சொத்தாட்சி அதிகாரி உள்ளார். மேற்சொன்னவற்றிற்கு உட்பட்டு, நொடிப்புநிலையரின் சொத்திருப்பைப் பராமரிக்கவும் பகிர்ந்தளிக்கவும் தன்னுடைய உளத்தேர்வினை (discretion) பயன்படுத்தலாம் (பி. 85).

(Ex. Parte Lloyd. 1882) 47 L.T. 64 வழக்கில் ''பகுத்தறிவுகொண்ட மனிதன் ஒருவனும் அவ்விதம் செய்யமாட்டான். அறிவற்ற காரியத்தைச் சொத்தாட்சி அதிகாரி செய்தாலொழிய அன்னாரின் உளத்தேர்வில் வழக்குமன்றம் தலையிடாது என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

சொத்தாட்சி அதிகாரியின் எந்த ஒரு செயலாலும் அல்லது முடிவினாலும் பாதிக்கப்பட்ட எந்த ஒரு நபரும் அல்லது கடனாளரும் அல்லது நொடிப்புநிலையரும், நீதிமன்றத்திற்கு மேன்முறையீடு (appeal) செய்து கொள்ளலாம். நீதிமன்றம், நியாயம் என்று எண்ணுகின்ற முறையில், குறையீடு (Complaint) செய்யப்பட்ட அத்தகைய செயலை அல்லது முடிவினை உறுதிசெய்தோ, பின்னடைய அல்லது மாற்றம் செய்தோ தகுந்த உத்தரவு பிறப்பிக்கலாம். சொத்தாட்சி அதிகாரியின் புத்தகங்கள், உறுதிசெய் இரசீதுகள் (Vouchers) முதலானவற்றைப் புலன்விசாரணை செய்ய ஆணையிடலாம் என்று பி.87 கூறுகின்றது.

(Indian Sugars Ltd. v. M. Pillai (1950) 1. Mad L.J. 117 வழக்கில். சொத்திருப்பின் பயனுக்காக, நொடிப்புநிலையர்க்கு வழக்கொன்றுட நிதி உதவி செய்து, சொத்தாட்சி அதிகாரி தலை யிடுவாராளுல் அவரால் வைத்திருக்கப்படும் சொத்திருப்புகளி னின்றும், வழக்கின் செலவினங்களைப் பெற உத்தரவிட முடியும் என்பது தெரிகிறது.

Currimbhai v. Ahmadali, 35. Bom. L.R. 13. வழக்கில், கடன் ஒப்புதல் (Acknowledgement of Debt) செய்ய சொத் தாட்சி அதிகாரி, நொடிப்புநிலையரின் முகவர் (agent) அல்லர் என்று தீர்ப்பாயிற்று.

பேணுநர்கள் (Receiver) : வழக்குறு சொத்துப் பேணுநர்கள் சொத்தாட்சி அதிகாரிகள் பற்றிய கட்டுவாசகங்கள் மாநிலச் சட்டத்தின் 50-60 பிரிவுகளில் காணப்படுகின்றன.

நீதித் தீர்ப்பாணை உத்தரவு வழங்கும்போது அல்லது பின்னர் ஒரு காலத்தில், நீதி மன்றம், நொடிப்புநிலையரின் சொத்துக்கு ஒரு பேணுநரை நியமிக்கும். அதன் பின்னர் அந்தச் சொத்து அன்னவரைச் சென்றடையும். நிர்ணயிக்கப்படுகின்ற நிபந்தனை களுக்குட்பட்டு, அவரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட சொத்திற் காகப் பிணையம் ஒன்றினைப் பேணுநரிடமிருந்து நீதிமன்றம் கோரலாம். நொடிப்புநிலையரின் சொத்திருப்புகளினின்றும், வெகுமதி ஒன்றினைச் செலுத்த தொகையினை நிர்ணயிக்கும். வழக்கு மன்றம் பேணுநர் ஒருவரை நியமித்தும், நொடிப்பு நிலையர்க்குச் சொந்தமான சொத்து ஒன்றினை உடைமையாக உள்ளவரை வழக்கு மன்றம் நீக்கலாம். நிர்ணயிக்கப்படுகின்ற காலங்களில் கணக்குகளை அளிக்கத் தவறினாலும் வழக்கு மன்றம் ஆணையிடுகின்ற நிலுவைகளைச் செலுத்தத் தவறினாலும், அன்னாரின் வேண்டுமென்றே செய்தக்க செய்யாமை (wilful default) அல்லது முழு கவனமின்மை (Gross negligence) யினாலும் சொத்துக்கு இழப்பினை உண்டாக்கினாலும், நியமிக்கப்பட்ட பேணுநரின் சொத்தினைப் பற்றுகை செய்து, விற்று, அவரால் உண்டான இழப்பிற்கு அல்லது அவரிடமிருந்து வரவேண்டிய நிலுவையினுக்கு ஈடு செய்யும்படி நீதி மன்றம் ஆணையிடலாம் (பி. 56). மேற்சொன்ன கட்டுவாசகங்கள் இடைக்காலப் பேணுநர்க்கும் பொருந்தும். மாநிலச் சட்டத்தின்கீழ், நிர்ண யிக்கப்பட்டுள்ள வரம்பினுக்குள் செயல்புரிய, தகுதியானவர் என்று கருதுகின்ற நபர்களை, உள்ளாட்சி, (Local Government) சொத்தாட்சி அதிகாரிகளாக நியமிக்கலாம். அவ்விதமாகச் சொத்தாட்சி அதிகாரி நியமிக்கப்படாவிடில், சொத்தாட்சி

அதிகாரியின் அனைத்து அதிகாரங்களையும் உடையதாகவும், செலுத்துவதாகவும் வழக்கு மன்றம் இருக்கும் என்று பிரிவு 58 கூறுகின்றது.

Mathu Kompayu v. Pothapur Pillai, (1949) 1. Mad. L.J. 660 வழக்கில் மாநில நொடிப்புநிலைச் சட்டத்தின் கீழ் நொடிப்புநிலையரின் சொத்தினை விற்பதில், சொத்தாட்சி அதிகாரி, முழுமையான, கட்டுப்படுத்தப்படாத அதிகாரங்கள் உடையவர் என்றும், அதில் நொடிப்புநிலை வழக்கு மன்றத்தின் எந்த நிர்வாக ஆணைகளும் அன்னாரின் அத்தகைய அதிகாரத்தைக் கட்டுப்படுத்தாது என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது.

### ஆய்வுக்குழு (Committee of Inspection)

சொத்தாட்சி அதிகாரி அல்லது பேணுநரால் நொடிப்பு நிலையரின் சொத்தினைக் கண்காணித்து நிர்வகிக்கும் பொருட்டு, எண்பித்த கடனூர்களிலிருந்தும் அல்லது அத்தகைய கடனாளர்களிலிருந்தும் அல்லது அத்தகைய கடனாளர்களிடம் பகர அதிகாரப் பத்திரம் (Power of Attorney) பெற்று வைத்திருக்கும் நபர்களிலிருந்தும், ஆய்வுக்குழு ஒன்றினை, நீதி மன்றம் தகுதியானது என்று எண்ணினால் நியமிக்கலாம் என்பதனை மாநகர்கள் சட்டம் 88-89ஆவது பிரிவில் காணமுடிகின்றது. நிர்ணயிக்கப்படும் அளவில், சொத்தாட்சி அதிகாரியின் நடவடிக்கைகளின் மீது கட்டுப்பாடு செய்யும் அதிகாரங்கள் குழுவுக்கிருக்கும். பம்பாய் நொடிப்புநிலைச் சட்டத்தில் மேலும் சில விதிகள் உள்ளன.

மூன்று நபருக்குக் குறையாமலும் ஐந்து நபருக்கு மிகாமலும் அக்குழு தீர்மானிக்கின்ற இடத்தில், காலப்பொழுதில் அல்லது திங்களுக்கு ஒருமுறையாவது குழு கூடும். சரியானது என்று எண்ணுகின்றபோது, சொத்தாட்சி அதிகாரி அல்லது குழுவின் எந்த ஒரு உறுப்பினரும் கூட்டத்தைக் கூட்டலாம். கூட்டத்திற்கு வந்துள்ள உறுப்பினர்களின் பெரும்பான்மைக்கிணங்க குழு செயல்புரியும். ஆனால் அச் செயல்புரிய குழுவின் உறுப்பினர்களில் பெரும்பான்மையினர் கூட்டத்திற்கு வந்திருக்க வேண்டும். சொத்தாட்சி அதிகாரிக்கு எழுத்து மூலம் அறிவிப்பினைத் தந்து எந்த உறுப்பினரும் தம் பதவியினை இராஜினாமா செய்யலாம். உறுப்பினர் ஒருவர் நொடிப்புநிலையினர் எனினும் அல்லது தொடர்ந்து ஐந்து கூட்டங்களுக்கு வரவில்லையெனினும் அவருடைய பதவி அதன் பின்னர் வெற்றிடமாகும் (Vacant).

கடனாளர்களின் கூட்டம் ஒன்றில் செய்யப்படும் தீர்மானம் மூலமும் உறுப்பினரை நீக்கலாம். குழுவின் அவ்விதம் வெறுமை

யான (Vacant) இடத்திற்குச் சொத்தாட்சி அதிகாரியால் கூட்டப் பட்ட கடனுளர்களால் தீர்மானம் ஒன்று நிறைவேற்றி, புது உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கலாம். குழுவினில் இடம் வெறுமை யான பின்னரும், தொடர்ந்திருக்கும் உறுப்பினர்களின் எண் ணிக்கை இரண்டிற்குக் குறையாதிருக்கும்வரையில் செயற்பட லாம். குழு ஒன்று நியமிக்கப்பட்டவுடன், நொடிப்புநிலையரின் சொத்திருப்பினை நிர்வகிக்கும் சொத்தாட்சி அதிகாரி, குழுவின் ஆணைகளைக் கவனத்தில் கொண்டு செயல் புரிதல் வேண்டும். சட் டத்தின் 68ஆவது பிரிவின் கீழ் வழக்கு மன்றத்தின் அனுமதியினைக் கோரும் முன்னர் சொத்தாட்சி அதிகாரி குழுவின் இசைவினைப் பெறுதல் வேண்டும்

ஆய்வுக் குழுவினைப் பற்றி, மாநிலச் சட்டத்தில் முதன் முதலில் எந்தவிதமான கட்டுவாசகமும் இல்லை. 1926ஆம் ஆண்டு திருத்தப்பட்ட 39ஆவது சட்டம் 67A என்னும் புதுப் பிரிவினைச் சேர்த்துள்ளது. இவ்விதி மாநில வழக்கு மன்றங்களுக்கும் ஆய்வுக் குழு நியமிக்கும் அதிகாரத்தினை அளித்துள்ளது.

## இயல் 17

# வழக்கு நடைமுறை பற்றிய விதிகள்

## (Rules as regards Procedure)

மாநகர்கள் சட்டத்தின்கீழ்ப் பொதுவாக நோக்குமிடத்து, நடவடிக்கைகள் அனைத்திலும், சாதாரண உரிமையியல் முதலேற்பு அதிகார வரம்பினில் செலுத்துகின்ற அதிகாரங்களை, அந்த நீதி மன்றம் கொண்டவையாகவும் அதிலுள்ள நடைமுறையினைப் பின்பற்றுவதாகவும் உள்ளது. ஆயினும் சட்டத்தின் 90ஆவது பிரிவில் உள்ள, அதிகார வரம்பினை எல்லைக்குள் நிறுத்தாது, மாவட்ட நீதி மன்றங்களுக்கு இதனை ஒத்த அதிகாரங்களை, மாநிலச் சட்டம் 5ஆவது பிரிவு கொடுத்துள்ளது. நீதி மன்றம், எந்த ஒரு நேரத்திலும் அதன்முன் உள்ள நடவடிக்கைகளை ஒத்திவைக்க, வழக்கு மன்றத்தின் எழுத்து மூலக்கட்டளை (Process) யினைத் திருத்தம் செய்ய, எந்தச் செயலையும் செய்ய, நிர்ணயிக்கப்பட்ட காலக்கெடுவிற்கு முன்னதாக அல்லது பின்னதாக, நியாயம் என்று தன்னால் கருதப்படுகின்ற நிபந்தனைகளின் மீது கால அளவினை நீட்டிக்க நீதி மன்றத்திற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. வெளி நீதி மன்றங்களில் நடவடிக்கை மேற்கொள்ளவும், கடனாளர் ஒருவரைத் தடைசெய்து உறுத்துக் கட்டளைப் பிறப்பிக்கும் அதிகாரம் படைத்ததாகவும் நீதி மன்றம் உள்ளது. 91-93 விதிகளில் கோரிக்கைகளைச் சேர்க்க, கோரிக்கைகளை எடுத்துச் செல்லும் செயலை மாற்ற, நொடிப்புநிலையர் இறந்த பின்னர் நடவடிக்கைகளைத் தொடர வழக்கு மன்றத்திற்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. நடவடிக்கைகளுக்கு அத்தியாவசியமான, வழக்குச் செலவு (Costs) சட்டத்தின் கட்டு வாசகங்கள், விதிகளுக்கு உட்பட்டு; வழக்கு மன்றத்தின் உளத் தீர்ப்பின் (Discretion)பாற்பட்டது. மாநகர்கள் சட்டத்தின் 94ஆவது பிரிவில் வழக்கு மன்றத்தின் முன்னதாக உள்ள எந்த ஒரு

# இயல் 18

# நொடிப்புநிலைக் குற்றங்கள்

## (Insolvency Offences)

நொடிப்புநிலையர் செய்யக்கூடிய குற்றங்கள் இரண்டு வகை யாகப் பிரிக்கப்படும்.

1. நொடிப்புநிலையரால் மட்டும் செய்யக்கூடிய குற்றங் களை, நொடிப்புநிலைச் சட்டத்தின் கீழ்தான் தண்டிக்க முடியும். விடுப்புப் பெற்றிடினும். இல்லையெனினும் இரண்டு சட்டங் களிலும் கூறப்படுகின்ற முறையில், நொடிப்புநிலையர் என நீதித் தீர்ப்பாணைக்குள்ளான நபர் ஒருவர் செய்யும் குற்றங்களாக அவை கருதப்படும்.

2. நொடிப்புநிலையர் ஒருவர் அல்லது வேறொரு நபர் எவராலும் செய்யக்கூடிய குற்றங்கள் இரண்டாவது வகையாகும்.

இந்தியன் பினல்கோடு சட்டத்தின் 421-424 பிரிவுகளில் அவை குறிப்பிடப்பட்டுள்ளன.

நொடிப்புநிலையர் செய்கின்ற குற்றங்களவன

கீழ்க் காண்பவற்றைச் செய்கின்றபோது, நொடிப்புநிலையர் என்று நீதித் தீர்ப்பாணையால் அறிவிக்கப்பட்ட நபர், குற்றம் புரிந்தவராகின்றார்.

சட்டங்களின் நோக்கங்களைத் தோற்கடிக்க அல்லது தம் முடைய நடவடிக்கைகளின் நிலையினை மறைக்கும் எண்ணத்துடன், நொடிப்புநிலையர் மோசடியாக,

(அ) சட்டங்களின்கீழ்ப் புலன் விசாரணைக்குட்படும் அன்னாரின் நடவடிக்கைகளைப் பொருத்துள்ள எந்தப் புத்தகங்

களையும், காகிதங்கள் அல்லது எழுத்து மூலங்களையும் அழித்திடின் அல்லது வேருக வேண்டுமென்றே கிடைப்பதால் தடுத்திடின் அல்லது,

(ஆ) பொய் கணக்குகளை வைத்தாலும் அல்லது வைத் திருக்கக் காரணமாயிருந்திடினும் (அல்லது),

(இ) சட்டங்களின்கீழ்ப் புலன் விசாரணைக்குட்படும் அவருடைய நடவடிக்கைகளைப் பொருத்த எழுத்து மூலங்களில், காகிதங்களில், கணக்குப் புத்தகங்களில் தவருன பதிவுகள் செய் திடின் அல்லது செய்ய வேண்டிய பதிவுகளைச் செய்யாமல் விட்டி ருப்பினும், அல்லது,

(ஈ) தம் கடனுளர்களிடையே பிரிக்கப்படும் தொகை யினைக் குறைக்கும் அல்லது மேற்சொன்ன கடனுளர்களில் எவ ரேனும் ஒருவர்க்குத் தகா முன்னுரிமை (Undue Preference) அளிப்பதற்கு எண்ணத்துடன்,

நொடிப்புநிலையர் மோசடியாக

1. அவர்க்குச் சேரவேண்டிய கடன் ஒன்றினை விடுத் திடினும் அல்லது மறைத்திடினும்; (அல்லது),

2. எந்தவிதமான அன்னவரின் சொத்தின் எந்த ஒரு பாகத் தினையும் மறைத்திடினும் அல்லது அடைமானம் செய்திடினும், பற்றுப் பொறுப்புச் செய்திடினும் (Charged) செலவழித்திடினும், குற்றம் புரிந்தவராகின்ருர். மேற்சொன்ன எந்தவகையான குற்றங்களையும் நொடிப்புநிலையர் செய்திடின், மாநகர்கள் நொடிப்புநிலைச் சட்டத்தின் 103ஆவது பிரிவின்கீழ், இரண் டாண்டுகள் நீடிக்கும் சிறைவைப்புத் தண்டனைக்குள்ளாவார் என்றும் மாநில நொடிப்புநிலைச் சட்டத்தின் 69ஆவது பிரிவின் கீழ் ஓராண்டு நீடிக்கும் சிறைவைப்புத் தண்டனைக்குள்ளாவார் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. மீண்டும் இரண்டு சட்டங்களின் கீழும், விடுப்புப் பெருத நொடிப்புநிலையர் ஒருவர், தாம் விதிக்கப் படாத நொடிப்புநிலையர் என்பதனை அறிவிக்காமல் எவரிடத்தி லிருந்தாவது ரூ.50-ம், அதற்கு மேலாகவும் கடன் பெற்ருராளுல், குற்றத்துறை நீதிபதி (Magistrate) ஒருவரால் குற்றத் தீர்ப்புக் குள்ளாளுல், 6 மாதங்கள்வரை நீடிக்கக்கூடிய சிறைவைப்பு அல்லது அபராதம் கட்டல் அல்லது இரண்டினையும் சேர்த்துத் தண்டனைக்குள்ளாவார். மேற்சொன்ன விதிகளின்கீழ்த் தண் டனைக்குள்ளாக நபரின், அவற்றில் குறிப்பிட்டுள்ளபடி எண்ணத் தினை நிருபிக்க வேண்டும். வழக்கின் சூழ்நிலைகளுக்கேற்ப இது இருக்கும்.

### விருப்புக்கு அல்லது கடன் தீர்வு உடன்பாட்டிற்குப் பின்னர் குற்றப் பொதுப்புநிலை (Criminal Liabiity After Discharge or Composition)

சட்டங்களில் கூறியுள்ள அளவிற்கு, விடுப்பு உத்தரவு ஒன்று, உரிமையியல் பொறுப்புநிலையினின்றும் நொடிப்புநிலையினரை விடுவிக்கும். எனினும், நொடிப்புநிலை அன்னவரைக் குற்றங்களி னின்றும் குற்றப் பொறுப்புநிலையிலிருந்து, அவ்வுத்தரவு விடுவிக் காது. மாநகர்கள் சட்டத்தின்கீழ், அவருடைய விடுப்பிற்குப் பின்னரும், பிரிவு 102, 103களில் சொல்லப்பட்ட குற்றங்களுக்கு, நொடிப்புநிலையர் பொறுப்பாவார். மாநிலச் சட்டத்தின்கீழ், '9ஆவது பிரிவினிற் சொல்லப்பட்ட குற்றங்களுக்கு அவர் பொறுப்பாவார்.

### நொடிப்புநிலையரின் தகுதியிழப்பு (Disqualification of an Insolvent)

நொடிப்புநிலையர் என ஒருவர் நீதித் தீர்ப்பாணைக்குள்ளாயின், சட்டங்களிலுள்ள கட்டுவாசகங்களுக்குட்பட்டு,

1. குற்றத்துறை நீதிபதியாகச் (Magistrate) செயற்பட அல்லது, நியமிக்கப்பட;

2. உள்ளாட்சித் துறையிலுள்ள, சம்பளமில்லாத அல்லது தேர்ந்தெடுக்கப்படவேண்டிய ஒரு பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட;

3. உள்ளாட்சித்துறை ஒன்றின் உறுப்பினராகத் தேர்ந் தெடுக்கப்பட, அல்லது கூட்டத்தில் இருந்திட (Sitting) அல்லது வாக்களித்திட; தகுதியற்றவராகின்றார். இத்தகைய தகுதி யிழப்பினை நீக்க, கீழ்க் காண்பவை நடைபெற வேண்டும்.

(அ) அவர் நொடிப்புநிலையராக, நீதித் தீர்ப்பாணைக்குள் ளாகி இருக்கக்கூடாது என்றிருந்தாலும் அல்லது அவருடைய கடன்கள் முழுமையாகச் செலுத்தப்பட்டுவிட்டது என்பதனாலும், அந்த நீதித் தீர்ப்பாணை உத்தரவு இல்லாமல் ஆக்கப்பட வேண்டும். (அல்லது)

(ஆ) நொடிப்புநிலை, அவருடைய எந்த ஒரு தவறான நடத்தையினாலும் ஏற்படாது வாய்ப்புக் கேடாக (Misfortune) ஏற்பட்டிருக்கிறது என்ற சான்றிதழுடன், முழுமையான அல்லது நிபந்தனைகொண்ட விடுப்பு உத்தரவினை வழக்கு மன்றத்தித மிருந்து நொடிப்புநிலையர் பெற்றிருக்கவேண்டும்.

இயல் 19

# சிறிய நொடிப்புநிலைகள்

## (Small Insolvencies)

மாநகர்கள் நொடிப்புநிலைச் சட்டத்தின்கீழ், நொடிப்பு நிலையரின் சொத்து மதிப்பு ரூ. 3000-க்கு அல்லது நிர்ணயிக்கப் படுகின்ற எந்த ஒரு குறைந்த தொகையினை மிகாது என்றிருப் பினும், மாநில நொடிப்புநிலைச் சட்டத்தின்கீழ் ரூ. 500-க்கு மிகாது இருந்திடினும், நீதிமன்றம், அந்த நொடிப்புநிலையினரின் சொத்திருப்பினைக் குறு நடைமுறையில் (Summary Manner) நிர்வகிக்கப்பட, உத்தரவிடும். அத்தகைய உத்தரவு வழங்கப் பட்டதன்மீது;

1. நீதிமன்றத்தின் உத்தரவு ஒன்றுக்கு, அம் மன்றத்தின் அனுமதியில்லாமல், மேன் முறையீடு கிடையாது.

2. கடனுளர் ஒருவர் அல்லது சொத்தாட்சி அதிகாரியின் மனுமீதன்றி, நொடிப்புநிலை விசாரணை நடத்தமுடியாது.

3. முடியுமானல், சொத்திருப்பினை, ஒரே பங்காதாயத் தில் பகிர்ந்தளிக்கப்படவேண்டும்.

4. செலவினத்தைக் குறைக்கும், நடைமுறையினை எளிமைப்படுத்தும் நோக்குடன், நிர்ணயிக்கப்படும் எந்தவித மான வேருன மாற்றங்களும் மேற்கொள்ளப்படும். மாநகர்கள் நொடிப்புநிலைச் சட்டத்தின் ஆளுகைக்கு உட்பட்ட வழக்குகளில், மேற்கண்ட மாற்றங்களுடன் சட்டத்தின் கட்டுவாசகங்கள் செலுத்தப்படும். மாநிலச் சட்டத்தின் ஆளுகைக்குட்பட்ட வழக்குகளில், கீழ்க்காணும் மாற்றங்களுக்குட்பட்டு அந்தச் சட்டத்தின் கட்டுவாசகங்கள் செலுத்தப்படும்.

(1) நீதிமன்றம் வேருக ஆணையிட்டாலொழிய, சட்டத் தின்கீழ்த் தேவைப்படுகின்ற வெளிப்படுத்தப்படும் எந்த

அறிவிப்பினையும், உள்நாட்டு அரசிதழ்களில் (Local Official Gazette) வெளிப்படுத்த தேவையில்லை.

(2) கடனாளியின் கோரிக்கை மனு அனுமதிக்கப்பட்டவுடன், கடனாளியின் சொத்தானது, பேணுநரிடம் சேர்ந்தடைவது போல், வழக்கு மன்றத்தினை அடையும்.

(3) கோரிக்கை மனுவின் விசாரணையில், வழக்கு மன்றம், கடனாளியின் சொத்திருப்புகள், கடன்களைப்பற்றி விசாரித்து, எழுத்து மூல உத்தரவினால் நிர்ணயிக்க வேண்டும். பட்டியல் ஒன்றைத் தயாரிக்கத் தேவையில்லை.

(4) கடனாளியின் நியாயகால வேகத்தில் சொத்தினைப் பெற்று, முடிந்த காலத்தில் ஒரே பங்காதாயத்தில் பகிர்ந்தளிக்க வேண்டும்.

(5) நீதித்தீர்ப்பாணை நாளிலிருந்து 6 மாதத்திற்குள்ளாகக் கடனாளி அவருடைய விடுப்பிற்கு மனுச் செய்ய வேண்டும்.

(6) செலவினங்களைக் குறைக்கும் நடைமுறையினை எளிமைப்படுத்தும் நோக்கத்துடன் நிர்ணயிக்கப்படுகின்ற தேவையான மாற்றங்களைச் செய்யவேண்டும். இரண்டு சட்டங்களின் கீழும், குறு நிர்வாகற்திற்கான (Summary Administration) உத்தரவு வழங்குவதற்கு முன்பாக, வழக்கு மன்றம் மனநிறைவு கொள்ளுமாறு கடனாளியின் சொத்து மதிப்பானது நிர்ணயிக்கப்பட்ட அளவை மிக வழியில்லை என்று ஆணையுறுதிப் (Affidavit) பத்திரம் மூலம் அல்லது வேறாக அல்லது சொத்தாட்சி அதிகாரி நீதி மன்றத்திடம் தாக்கல் செய்தும் நீதி மன்றத்தை அணுக வேண்டும்.

## இறந்துபோன நொடிப்பு நிலையர்களின் சொத்திருப்புகள் நிர்வாகம் (Administration of Estates of Deceased Insolvents)

மாநகர்கள் சட்டத்தின் 108ஆவது பிரிவில் உள்ள கட்டு வாசகங்கள், இது பற்றிய விளக்கத்தினைத் தருகின்றது. ஆனால் இதுபோன்ற வரையறைகள் மாநில நொடிப்புநிலைச் சட்டத்தில் இல்லை.

கடனாளி உயிருடனிருந்தால் கடனாளிக்கு எதிரான நொடிப்பு நிலை கோரிக்கை ஒன்றினைத் தாங்கத் தேவையான கடன் நிலுவையிலிருக்கும் கடனாளர் எவரேனும், கடனாளி இறப்பதற்கு உடனடியான முன் 6 மாதங்களில், கடனாளி வாழ்ந்திருந்த அல்லது வியாபாரத்தினை நடத்திவந்த எல்லைக்குட்பட்ட வழக்கு மன்றத்திடம், சட்டத்தின்கீழ், இறந்துபோன நொடிப்புநிலையரின் சொத்திருப்

பினை நிர்வகிக்க கோரிக்கை மனு ஒன்றினை அளிக்கலாம். இறந்து போன கடனாளியின் சட்டப் பிரதிநிதிகளுக்குக் குறிப்பிட்டுள்ள அறிவிப்பு கொடுத்த பின்னர்க் கோரிக்கை கடனாளரின் கடன் பற்றிய நிருபணத்தின் மீதும், அனைத்துக் கடன்களையும் தீர்க்க சொத்திருப்புப் போதுமானது என்று மனநிறை கொள்ளவில்லை என்றாலும், நீதி மன்றம் நொடிப்புநிலையில் உள்ள கடனாளியின் சொத்திருப்பினை நிர்வகிக்க உத்தரவு ஒன்றினை வழங்கலாம். தக்க காரணம் காண்பித்ததன் பேரில் வழக்கு மன்றம் அந்த மனுவை தள்ளுபடியும் செய்யலாம். அந்தக் கோரிக்கை மனு நிர்ணயிக்கப் பட்ட முறையில் இருக்கவேண்டும். நீதி மன்றத்தின் இத்தகைய உத்தரவு நீதித் தீர்ப்பாணை உத்தரவாகாது, நொடிப்புநிலையில் அவருடைய சொத்திருப்பினை நிர்வகிக்க வேண்டி செய்யப்படும் உத்தரவாகும். எனவே சட்டத்தின் அனைத்துக் கட்டுவாசகங் களும் நொடிப்புநிலையில் வழங்கப்படும் நிர்வாக உத்தரவு ஒன்றிற்கு, நீடிக்கப்படவில்லை. இதனால், சொத்திருப்பின் இரண்டு கடனாளர்களிடையில் முந்துரிமையைத் (Priority) தீர் மானிக்க அந்த வழக்குமன்றத்திற்கு அதிகாரம் கிடையாது. அதே போன்று நொடிப்புநிலையரின் சொத்தினைக் கண்டுபிடிக்கும் சட்டத்தின் 36 ஆவது பிரிவின் கட்டுவாசகங்களும் நிர்வாக உத்தரவுக்குப் பொருந்தி வராது. முன்மேவு உரிமைக்கோட்பாடு, தன்னிச்சையான உரிமை மாற்றங்கள் பற்றிய கட்டுவாசகங்களும் இவ்வுத்தரவிற்குப் பொருந்துவதில்லை.

இயல் 20

# மேன்முறையீடுகள், சீராய்வு, மறு ஆய்வு
## (Appeals, Revision, and Review)

**மறுஆய்வும், மீள் விசாரணையும் (Review and Rehearing)**

மாநகர்கள் சட்டத்தின் 8ஆவது பிரிவில், நீதிமன்றம் ஒன்று தன்னுடைய நொடிப்புநிலை அதிகார வரம்பின்கீழ் அளித்த எந்த ஒரு உத்தரவினையும் மறுஆய்வு (Review) இறுத்தல் (Rescind) அல்லது மாற்றுதல் செய்யலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. நொடிப்புநிலை சம்பந்தப்பட்டவைகளில் வழங்கப்பட்ட உத்தரவுகள், பாதிக்கப்பட்ட எந்த ஒரு நபரின் முயற்சியாலும் மேன்முறையீட்டுக் குட்பட்டதாகும்.

Re Tobias & Co, (1891) 1 Q.B. 463 வழக்கில் மேற்சொன்ன விதியின்கீழ் நீதிமன்றத்தினுக்கு அளிக்கப்பட்ட, நொடிப்புநிலையில் தன்னால் வழங்கப்பட்ட உத்தரவுகளை மறு ஆய்வு செய்யும். அதிகாரங்களைப் பற்றிய குறிப்புள்ளது. மீண்டும் விசாரணை செய்வதற்கான மனுவை, உத்தரவளிக்கப்பட்ட நடவடிக்கையினில், நபராக இருந்த ஒருவரால் தான் செய்யமுடியும் என்று விதியில் கூறப்பட்டுள்ளது. நொடிப்புநிலையில் மேன்முறையீடு செய்யும் உரிமையினைவிட மீண்டும் விசாரணை கோரும் உரிமை கட்டுப்பாட்டினுக்குள் இருக்கின்றது. மேன்முறையீடு உரிமை, பாதிக்கப்பட்ட எந்த ஒரு நபருக்கும் உண்டு என்பதிலிருந்து இதனை அறியலாம். மீண்டும் விசாரணை கோரும் பொழுது, புது மெய்ம்மை (New Fact) அல்லது சில தவறு நிரூபிக்கப்பட வேண்டும். நொடிப்புநிலை அதிகார வரம்பினைச் செலுத்தி உத்தரவிட்ட நீதிபதியினால்தான் மறு ஆய்வு செய்யப்படும் அல்லது அவருடைய இடத்திலிருந்து அந்த அதிகார வரம்பினைச் செலுத்தும். பிற நீதிபதியினால்தான் மறுஆய்வு செய்யமுடியும்.

அப்போதைய காலவரையறைச் சட்டத்தின் (Limitation Act) 181ஆவது பிரிவில் நிர்ணயிக்கப்பட்டுள்ள கால அளவினில் மனுச் செய்து கொள்ளவேண்டும் என்பதனை,

Re Nesse, 7. Rang 201 வழக்கினுல் அறியலாம். ஆயினும் இந்த நிலை ஐயத்திற்கிடமாக உள்ளது. தலைநகர்கள் சட்டத்தில் மறு விசாரணைகோரும் மனுவையளிக்க காலவரையறை எதுவும் குறிப்பிட்டிருக்கவில்லை. ஆயினும் மேன்முறையீடு காலக்கெடு முடிந்ததும் இதனை அனுமதிப்பதில்லை.

1. மாநகர்கள் சட்டம் விதி 6-ன்கீழ் வழங்கப்பட்ட அதிகாரமுடைய நீதிமன்றத்தின் அலுவலாளர் ஒருவரால் வழங்கப்பட்ட உத்தரவிலிருந்து, நொடிப்புநிலை அதிகார வரம் பினைச் செலுத்தும் நீதிபதியிடம் மேன்முறையீடு உள்ளது. மேலும், மேன்முறையீடு கிடையாது.

2. பிரிவு 8 (2) (b) நொடிப்புநிலை நீதிபதியினுல் வழங்கப்பட்ட நொடிப்புநிலையின் உத்தரவுகள் மேன்முறையீடு தகுதி பெற்றவை. இரண்டாவது மேன்முறையீடு, சாதாரண, முதலேற்பு உரிமையியல் அதிகார வரம்பு (Ord nary Origi al Civil Juristiction) கீழ் நீதிமன்றம் ஒன்றினுல் அளிக்கப்பட்ட உத்தரவுகள் போன்றே, அதே நிபந்தனைகளுக்குட்பட்டு, அதே முறையில் அமையும்.

Mahomed v. Shaik Abdul, 40. Bom. 461 வழக்கில் காப்பு உத்தரவு வழங்கப்பட்ட (order granting protection) தன்மீது மேன்முறையீடு உண்டு என்று சொல்லப்பட்டது நொடிப்புநிலைச் சட்டத்தின் தனிச்சிறப்பு என்னவெனில், உத்தரவு ஒன்றின் நபராக இருந்த ஒருவர் மட்டுமின்றி, உத்தரவின் தரப்பினரா யில்லாதிருப்பதாலும், அந்த உத்தரவினுல் பாதிக்கப்பட்ட நபரா யிருப்பின் (aggrieved person) உத்தரவின்மீது மேன்முறையீடு செய்து கொள்ளும் தகுதியுடையவராக உள்ளார். இதன் காரணம் என்ன வெனில், நொடிப்புநிலை நடவடிக்கைகள் அதனுடைய நபர்களைமட்டுமின்றி, ஏனையோர்களையும் பாதிக் கின்றன. 'பாதிக்கப்பட்ட நபர்' (Person aggrieved) என்ற சொல்லானது, சட்டப்படியான (legal grievance) கொடுமையை அனுபவித்தவரையும், அன்னுர்க்கு எதிராக முடிவு ஒன்று சொல்லப்பட்டும் உள்ள ஒருவரைக் குறிப்பதாக அமைந்துள்ளது. Ex. parte Off. Receives (1887) 19. Q. B. D. 174 வழக்கில் இது விளக்கப்பட்டுள்ளது.

**மாநில நொடிப்புச் சட்டத்தின்கீழ்**

**(i) கீழ் வழக்கு மன்றங்களின் உத்தரவு மீதான மேன் முறையீடு (Appeals from orders of Subordinate Courts)**

மாவட்ட நீதி மன்றத்திற்குக் கீழுள்ள நீதி மன்றம் ஒன்று, தன்னுடைய நொடிப்புநிலை அதிகார வரம்பினைச் செலுத்தி வழங்கப்பட்ட உத்தரவு ஒன்றின்மீது, அந்தக் கடனாளி, அந்தக் கடனாளர், அந்தச் சொத்தாட்சிப் பேணுநர் அல்லது வழக்கின் முடிவினால் பாதிக்கப்பட்ட எந்த ஒரு நபரும், மாவட்ட வழக்கு மன்றத்திற்கு மேன்முறையீடு செய்து கொள்ளலாம். அத்தகைய மேன்முறையீட்டின் மீது உத்தரவு பிறப்பிக்கும் மாவட்ட மன்றத்தின் முடிவு இறுதியானதாகும். ஆயினும், உயர்நீதி மன்றம் மேன்முறையீட்டின் மீது மாவட்டமன்றத்தினால் வழங்கப் பட்ட முடிவு சட்டமுறையானதுதான் என்பதற்கான தன்மன நிறைவு கொள்ளும் பொருட்டு, அந்த வழக்கினைத் தன்னிடம் கேட்டுப் பெற்றுத் தனக்குத் தகுதியானது என்று எண்ணுகின்ற முறையிலான உத்தரவினை வழங்கும்.

**(ii) மாவட்ட நீதிமன்றத்தின் உத்தரவு மீதான மேன் முறையீடு (Appeal from original order of District Court)**

சட்டத்தின் பின் இணைப்பு I-ல் குறிப்பிடப்பட்டுள்ள, மாவட்ட வழக்குமன்றத்தின் உத்தரவுகள் அல்லது முடிவுகளும் அதன் கீழுள்ள வழக்குமன்றத்தின் உத்தரவுகள் மீதான மேன் முறையீடுகள் அல்லாதனவுமான அவற்றின்மீது பாதிக்கப்பட்ட நபர் ஒருவரின் முயற்சியினால் உயர்நீதிமன்றத்திற்கு மேன் முறையீடு இருக்கும் என்று மாநில நொடிப்புநிலைச் சட்டத்தின் 75ஆவது பிரிவில் விளக்கப்பட்டுள்ளது. நொடிப்புநிலையர்க்குச் சொந்தமானது என்று சொத்து ஒன்றினைப் பேணுநர் பற்றுகை செய்தால் மூன்றும் நபர் அச்சொத்திற்குச் சொந்தம்கொண்டாடி மாவட்ட நீதிமன்றத்திற்கு மனுச்செய்திடின், அந்த வழக்கு மன்றம் அன்னாரின் பாத்தியதையை ஏற்றாலும் அல்லது ஏற்க மறுத்தாலும், அதனின் முடிவுமீது, உயர்நீதிமன்றத்திற்கு மேன்முறையீட்டினைச் செய்ய அன்னவர் உரிமை கொண்டாட லாம். மேற்கூறியாங்கு மேன்முறையீட்டினை உரிமையாகப் பெற இயலாவிடின், மாவட்ட நீதிமன்றத்தின் முதல் கட்டளை யினால் (Original order) பாதிக்கப்பட்ட நபர், உயர்நீதி மன்றத் திற்கு மேன்முறையீடு செய்யலாம். மாவட்ட நீதிமன்றத்திடம் முதலில் அனுமதிபெற்றுத்தான் மேன்முறையீடு செய்யவேண்டும்

என்ற கட்டுப்பாட்டினில் அவர் இல்லை. உயர்நீதிமன்றத்திற்கு நேரடியாக மனுச்செய்யலாம்.

காலவரையறை (Limitation)

மாநில நொடிப்புநிலைச் சட்டத்தின்கீழ், (1) கீழ்வழக்கு மன்றத்திலிருந்து, மாவட்ட வழக்கு மன்றத்திற்கு மேன்முறையீடு செய்து கொள்ளும் கால வரம்பு 30 நாள்கள் என்றும்,

(2) உயர்நீதிமன்றத்திற்கு 90 நாள்கள் என்றும் சொல்லப் பட்டுள்ளது. பேணுநரின் செயல் அல்லது உத்தரவின் மீது மேன்முறையீடு செய்ய, செயல் அல்லது உத்தரவு நாளிலிருந்து 21 நாள்கள் வரை கால அளவு உள்ளது.

மாநகர்கள் நொடிப்புநிலைச் சட்டத்தின்கீழ், சொத்தாட்சி அதிகாரியின் செயல் அல்லது முடிவின் மீதான மேன்முறையீடு செய்துகொள்ள உள்ள காலவரையறை 30 நாள்கள் என்று சொல்லப்பட்டுள்ளது.

# பயன்படுத்தப்பட்ட வழக்குகளின் பட்டியல்

Abdul Ghani *v.* Anjuman, 85
Abdul Kadar *v.* Off. Assg., 17
Abdul Rahman *v.* Nihal Chand, 99
Abdul Sattar, Abdul Aziz *v.* E.A.R.M. Chettyar, 29
Adakam *v.* Off. Assg., 118
Alagappa *v.* Off. Assg., 129
Ali Mahomad *v.* Wadilal, 98
Ammanna *v.* Ramakrishna Rao, 104
Ananda Prakash *v.* Narayan Das, 101
Anupama *v.* Gurudas, 27
Arjundas *v.* Marachia Telini, 80
Backham *v.* Drake, 93
Bishambar Nath *v.* Off. Recr., 101
Challapa *v.* Off. Assg., 36
Chettyar *v.* Chettyar, 24
Chitrabari Ltd., *v.* Keshar Acham, 94
Cohen *v.* Mitchell, 97, 98
Colonial Bank v. Whimy, 107
Columbise *v.* Pen Hall, 115
Currimbhoy *v.* Ahmadali, 132
Ex-parte Bolland, 107
Ex-parte Dorman, 107
Ex-parte Lloyd, 92, 131
Ex-parte Norris, 35
Ex-parte Off. Recr, 144
Ex-parte Taylor, 118

Ex-parte Waring, 91
Ex-parte Watkins, 107
Fool Kumari *v*. Khirod, 94
Giri Khant *v*. Vadilal, 97
Gnanendra Baladevi *v*. Off. Assg., 16, 18, 58
Gori Shankar *v*. Off. Recr., 101
Goswami Shri Girdhar Lalji, 34
Govindji *v*. Jadavji, 94
Grey *v*. Walker, 93
Haji Abdul Latiff *v*. Off. Assg., 15
Hamilton *v*. Bell, 108
Hammond and Co., *v*. Malcolm, 94
Hardy v. Forther Gile, 84
Harvey *v*. Liddiard, 107
Indian Sugars Ltd., *v*. M. Pillai, 132
Indu Bala *v*. Bakteshwar, 102
In Re Bing Raj, 119
In Re Gans Bourg, 111
In Re Giles, 85
In Re Hirth, 110
In Re Hyder Bhai Hussein Bai, 27
In Re Mahomad Hasam and Co., 26
In Re Momet, 34
In Re Pollit, 111
Imperial Bank Co-op. Society *v*. Santhosh Kumar, 96
Isamoddin *v*. Ajmuddin, 115
Jivraj *v*. Gaanmal, 43
Jubilee Bank *v*. Santi Moyee Delu, 51
Karuppiah Nadar *v*. Veera Bhadran Chettiar, 24
Kastoor Chand *v*. Dhanpur Singh, 32
Krishna Chinoo *v*. Motibai, 51, 124
Krishnaswami *v*. Palani Ammal, 62
Lakshmi Ram *v*. Poonam Chand, 81
Lamb *v*. Wright and Co., 108
Maharana Kumar *v*. David, 22
Mahomed *v*. Shaik Abdul, 144
Mathukom Payu *v*. Pothapur Pillai, 133
Mohanlal *v*. Harilal, 99
Morgan *v*. Grey, 94
Md. Siddiq *v*. Off. Assg., 19

Muniswami *v*. Rangachari, 28
Murugappa *v*. Gallara, 24
Murugesa *v*. Annamalai, 36
Muthu Chettiyar *v*. Nagindas, 24, 28
Nageshwar Swami *v*. Vishvasundara, 104
Narayan Sing *v*. Guru Baksha Sing, 42
Naoroji *v*. Kazi Siddiq, 85
Off. Assgn. *v*. Valliappa Chetti, 106
Off. Assgn. *v*. Suryakanthammal, 62
Off. Assgn. *v*. Regr. of Small Causes, 50
Off. Assgn. *v*. Narasimha, 19
Off. Recr. *v*. Deva Narayana Chettiyar, 104
Penson *v*. Moon, 94
Prout *v*. Gregory, 128
Rama Shastrulu *v*. Bala Krishna Rao, 103
Ramesh Charu Chandra, 42
Re Ahmed, 29
Re Arnold Gautzer, 35
Re Balaswami Aiyyar, 101
Re Benode Behari Saha, 35
Re Bright's Settlement, 93
Re Debtor, 124
Re Fox, 107
Re Hamilton, 78
Re Hiralal Mondal, 118
Re Kab a Umar, 81
Re Matheisan, 99
Re Muslim Bank of India, 85
Re Nesse, 1 4
Re Paget, 58
Re Pasco, 99
Re Roberts, 95
Re Stokes, 94
Re Tobias & Co., 143
Rustomji *v*. Byramjee, 94
Rustomji *v*. Madhavji, 44
Satnarayan *v*. Behari Lal, 100
Satnarayan *v*. Krishna, 10:
Seetharama *v*. Off Recr, 100
Sharp *v*. Mc Henry, 115

Shridhar *v*. Krishnaji, 94
Shripad *v*. Basappa, 100
Sime Darby & Co. *v*. Off. Assg., 118
Smith *v*. Topping, 108
Sulaiman Hajee Md Bros *v*. Hajee Ahmed, 26
Theophile *v*. Sol. Gen., 36
Thompson *v*. Freeman, 116
Uderaj *v*. Hall, 36
Union Bank of Bijapur *v*. Bhim Rao, 87
V.A.V.S. Firm *v*. Maragantha Chetty, 41
Venkata Subbamma *v*. Venugopal, 86
Viswanath *v*. Off. Ass., 35
Walchand *v*. Williams, 96.
Walton *v*. Cook., 74
Wilson *v*. United Countees Bank, 93
Worlee Lone & Co., *v*. Chettyar, 27
Yokahama Specie Bank *v*. Curlenders & Co., 50

# மேற்கோள் நூற்பட்டியல்
(Bibliography)

Presidency Towns Insolvency Act - 1909
Provincial Insolvency Act - 1920
Williams on Bankruptcy
The Law of Insolvency in India - '*By*' D.F. Mulla
Principles of insolvency Law '*By*' R.H. Pandia
Law of Insolvency in India - '*By*' J.D. Gangal

# சட்டச்சொல் அகராதி

## A

| | | |
|---|---|---|
| Ab initio | — | அடிமுதலே |
| Abandon | — | கைவிடு |
| Absolute | — | முழுமையான, நிபந்தனையற்ற |
| Absolute Liability | — | முழுப் பொறுப்புக் கடன், கடும் பொறுப்புக் கடன் |
| Acceptance | — | ஏற்பு |
| Access | — | அணுகும் வாய்ப்பு |
| According to Law | — | சட்டமுறைப்படி |
| Account | — | பற்றுவரவுக் கணக்கு |
| Account, Current | — | நடப்புக் கணக்கு |
| Account, Deposit | — | வைப்புக் கணக்கு, டெபாசிட் கணக்கு |
| Account Settled | — | கட்டிய கணக்கு, ஒப்பிய கணக்கு |
| Accusation | — | குற்றச்சாட்டு |
| Acknowledgement of Debt | — | கடனொப்புதல் |
| Acquiescence | — | குறிப்பிசைவு |
| Acquisition (of Land) | — | நில எடுப்பு |
| Acquittal | — | குற்றவிடுதலை, விடுதலைத் தீர்ப்பு |
| Act | — | செயல் இயற்றிய சட்டம் |
| Act of Insolvency | — | நொடிப்புநிலை தருவினை |
| Action, Civil | — | உரிமை வழக்கு |
| Action Criminal | — | குற்ற வழக்கு |
| Adjournment of Case | — | வழக்கு ஒத்திவைப்பு |

| | | |
|---|---|---|
| Adjudication | — | நீதித் தீர்ப்பு |
| Admission | — | ஒத்தேற்பு |
| Affidavit | — | ஆணையுறுதிப் பத்திரம்; பிரமாணப் பத்திரம் |
| Affirmation | — | மெய்யுறுதி |
| Agent | — | முகவர், ஏஜெண்ட் |
| Aggrieved | — | குறையுற்றவர், தீங்குற்றவர் |
| Agreement | — | உடன்பாடு |
| Alien Enemy | — | பகை நாட்டவர் |
| Alienation | — | மாற்றுக்கம், பராதீனம் |
| Allegation | — | சாட்டுரை, சார்த்துரை |
| Allegiance | — | அரசுப் பற்றிணைப்பு |
| Amendment | — | திருத்தம் |
| Annuity | — | ஆண்டுப் பணம் |
| Antecedent | — | முன் கடன் |
| Ante-Date | — | முன் தேதியிடல் |
| Ante-Nuptial | — | மணத்திற்கு முந்திய |
| Appeal | — | மேன் முறையீடு |
| Argument | — | வாதம், வாதுரை |
| Arrears | — | நிலுவை |
| Arrest | — | கைது |
| Ascertained | — | அறுதி செய்யப்பெற்ற |
| Assent | — | இசைவு, இசைவளிப்பு |
| Assets | — | சொத்திருப்பு |
| Assign | — | உரிமை மாற்று |
| Assignee | — | உரிமை மாற்றம் பெறுபவர் |
| Assignor | — | உரிமை மாற்றம் செய்பவர் |
| Attestation | — | சான்றுக் கையொப்பம், சான்றொப்பம் |
| Authority | — | பெற்ற அதிகாரம், சட்ட ஆதாரம் |
| Averment | — | உறுதிக் கூற்று |

## B

| | | |
|---|---|---|
| Bad debt | — | வாராக் கடன் |
| Balance Sheet | — | ஐந்தொகை |
| Banker | — | வங்கியர், பாங்கர் |
| Bankrupt | — | நொடிப்புநிலையர், இன்சால்வென்ட் |
| Belief in Good Faith | — | நல்லெண்ண நம்பிக்கை |

**Bench, Full** — (மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட நீதிபதிகள் கொண்ட) முழு ஆயம்
**Beneficial Interest** — பயன் பெறும் பாத்தியதை
**Beneficiary** — பயனுளி
**Bid** — ஏலம் கேட்டல்
**Bill of Exchange** — மாற்றுச் சீட்டு
**Bonafide** — நல்லெண்ணத்தில்
**Book Debts** — ஏட்டு நிலுவைகள்
**Breach of Covenant or Contract** — ஒப்பந்த மீறுகை
**Burden** — பொறுப்புச் சுமை, சுமைக் கடன்
**Burden of Proof** — மெய்ப்பிக்கும் பொறுப்பு

## C

**Carrier** — சரக்கேற்றி
**Cause List** — வழக்குப் பட்டியல்
**Cause of Action** — வழக்கு மூலம்
**Caveat Emptor** — வாங்குபவனே விழித்திரு
**Certificate** — சான்றிதழ், சர்ட்டிபிகேட்
**Cestui Que Trust** — பொறுப்புரிமைப் பயனுளி, டிரஸ்ட் பயனுளி
**Champerty and Maintenance** — பங்குவிழை வழக்குதவி, சாம்பர்ட்டி
**Charge** — குற்றச் சார்த்து
**Chose in Action** — வழக்குரிமைப் பொருள்
**Chose in Possession** — கையுரிமைப் பொருள்
**Civil Jurisdiction** — உரிமையியல் அதிகாரம்
**Civil Remedy** — உரிமைமுறைத் தீர்வழி
**Civil Service** — நாட்டு நிர்வாகப் பணி
**Claim** — பாத்தியதை, கோருரிமை
**Client** — கட்சிக்காரர்
**Code of Civil Procedure** — உரிமையியல் நடைமுறைச் சட்டம்
**Code of Criminal Procedure** — குற்ற இயல் நடைமுறைச் சட்டம்
**Coercion** — வலுக்கட்டாயம்
**Collateral Security** — துணைப் பிணையம்
**Committal** — மேல் விசாரணைக்கனுப்புதல், சிறைக்கனுப்புதல்

Common Law — இயற்றுச் சட்டம், செய்யாச் சட்டம்
Common Seal — முத்திரைச் சின்னம்
Company — பங்கமைப்பு, நிறுமம், கம்பெனி
Compensation — நிறையீடு, சரியீடு
Competent — தகுதி வாய்ந்த
Composition — கடன் தீர்வு உடன்பாடு
Compounding (of a Crime) — குற்ற வழக்கு நிறுத்தசைவு
Compromise — ஒத்திசைவு
Concealment — மறைவடக்கம்
Conciliation — இசைவிணக்கம், சமரசம்
Conclusive Evidence — அறுதிச் சான்று
Condition — நிபந்தனை, கட்டுவரம்பு
Condition, Precedent — முன் நிபந்தனை
Condition, Subsequent — பின் நிபந்தனை
Confirmation — உறுதியாக்கம், ஊர்ஜிதம்
Confiscation — பறிமுதல்
Consensus — கருத்தொற்றுமை
Consensus Ad Idem — கருத்தொருமை
Consent — சம்மதம், இசைவு
Consideration — மறுபயன், பிரதிபலன்
Contempt of Court — நீதிமன்ற அவமதிப்பு
Contingent — நிகழ்வடைவான
Contract — ஒப்பந்தம்
Contribution (to Mortgage Debt) — அடைமான விகிதப் பொறுப்பு
Conveyance — மாற்றளிப்பு, மாற்றளிப்பாவணம்
Convict — தீர்ப்புக் குற்றவாளி
Conviction — குற்றத்தீர்ப்பு, தண்டனைத் தீர்ப்பு
Corporation — கூட்டுரு, கார்ப்பொரேஷன்
Corporation Sole — கூட்டுருத் தனிமம்
Corporeal — பருவியலான
Corruption — ஊழல்
Costs — வழக்குச் செலவு, செலவுத் தொகை
Counter-Affidavit — எதிர் ஆணையுறுதிப் பத்திரம்
Counter-Claim — எதிர் பாத்தியம்

| | |
|---|---|
| Court of Record | — மதிப்புறுத்து நீதிமன்றம் |
| Covenant | — வரைமொழி உடன்பாடு, வினையெழு கடப்பாடு |
| Criminal Jurisdiction | — குற்ற விசாரணை அதிகாரம் |
| Custom | — வழக்கம் |

## D

| | |
|---|---|
| Damage | — சேதம், இழப்பு, கேடு |
| De Facto | — நிகழ்வு நிலை |
| De Jure | — சட்ட நிலை |
| Debt | — கடன் |
| Debtor | — கடன் வாங்கியவர், கடனாளி |
| Decree | — தீர்ப்பாணை |
| Decree Holder | — தீர்ப்பாணை பெற்றவர் |
| Deed | — ஒப்பாவணம் |
| Defect, Latent | — உட்கிடைக் குறைபாடு |
| Defect, Patent | — வெளிப்படைக் குறைபாடு |
| Defendant | — எதிர் வாதி |
| Delivery | — உடைமை ஒப்படைப்பு |
| Deposit | — தொகை வைப்பு, வைப்புத் தொகை |
| Discharge | — விடுவிப்பு, தீர்த்தல் |
| Discretion | — உளத்தேர்வு |
| Dissolution | — கலைப்பு |
| Doctrine (Legal) | — (சட்டக்) கோட்பாடு |
| Document | — ஆவணம் |
| Donee | — கொடை பெறுபவர் |
| Donor | — கொடை அளிப்பவர், கொடையாளி |
| Doubt. Benefit of | — ஐயத்தாலுறு நலன், சந்தேகத்தின் பலன் |
| Dower | — மணக்கொடை |
| Drawee | — பெயரவர் |
| Drawer | — வரைபவர் |
| Due | — உரியது |
| Duress | — உடற்கட்டாயம் |

## E

| | |
|---|---|
| Easement | — வசதியுரிமை |
| Embezzlement | — கையாடல் |

Enabiing Statute — இயல்விக்கும் சட்டம்
Enactment — செய்சட்டம், இயற்றிய சட்டம்
Encroachment — உரிமை மீறுகை, ஆக்கிரமிப்பு
Encumbrance — வில்லங்கம்
Endorsee — மேலெழுத்துப் பெறுபவர்
Endorser — மேலெழுதுபவர்
Enquiry — விசாரணை
Envoy — தூதுவர்
Equity — நேர்மைநெறி
Equity of Redemption — அடைமான மீட்புரிமை
Estate — செல்வம், நிலச்சொத்து
Estoppel — முரண்தடை
Eviction — வெளியேற்றம்
Evidence — சான்று, சாட்சியம்
Ex-parte — மறுதரப்பிலா, ஒரு தரப்பு நிலையில்
Exchange — பரிமாற்றம், பரிவர்த்தனை
Execution — நிறைவேற்றம்
Executor — நிறைவேற்றுளர்
Exemption — விலக்களிப்பு
Exercise — ஆற்றுமுறை
Exhibit — சான்றுவணம்
Exoneration — பொறுப்பு நீக்கம்
Express — வெளிப்படை
Expropriation — சொத்தெடுப்பு
Extortion — அச்சுறுத்திப் பறித்தல்
Extradition — அயல்நாட்டிடம் ஒப்புவிப்பு
Extra-Territorial Jurisdiction — புற நிலவரை அதிகார வரம்பு

## F

Fact — பொருண்மை
Falsification of Accounts — பொய்க்கணக்குப் புனைதல்
Family Arrangement — குடும்ப ஏற்பாடு
Fiction of Law — சட்டங்கொள் புனைவு
Fiduciary Relationship — நம்பக உறவு
Fine — தண்டப் பணம், அபராதம்
Firm — நிறுமம்
Floating Charge — இழைவுறு பற்றுப் பொறுப்பு

| | | |
|---|---|---|
| **Force** | — | வன் தாக்கு |
| **Foreclosure** | — | மீட்புரிமை அடைப்பு |
| **Foreign Jurisdiction** | — | நாடிகந்த அதிகார வரம்பு |
| **Fraud** | — | மோசடி |
| **Fraudulent Preference** | — | ஓரவஞ்சக் கடனடைப்பு |
| **Fundamental Rights** | — | அடிப்படை உரிமைகள் |

## G

| | | |
|---|---|---|
| Gambling | — | சூதாட்டம் |
| Garnishee | — | பற்றுகைப் பொருள் வைத்திருப்பவர் |
| Gazette | — | அரசிதழ் |
| General Assignment | — | (கடனடைப்பிற்கான) முழுச் சொத்து மாற்றம் |
| Gift | — | கொடை |
| Good Faith | — | நல்லெண்ணம் |
| Good Will | — | வாணிக நற்பெயர் |
| Guarantee | — | பொறுப்புறுதி, உத்திரவாதம் |
| Guardian | — | காப்பாளர், கார்டியன் |
| Guilty Mind | — | குற்ற மனம் |

## H

| | | |
|---|---|---|
| Heir | — | வாரிசு |
| Hereditary | — | மரபு வழியான, பரம்பரையான |
| High Court | — | உயர்நீதிமன்றம், ஹைகோர்ட் |
| Hire Purchase System | — | தவணைமுறைக் கிரயம் |
| Holder | — | உடையவர் |
| Holder in due Course | — | முறைப்படி உடையவர் |

## I

| | | |
|---|---|---|
| Identification | — | அடையாளங் காட்டல் |
| Illegal | — | சட்டமுரணான |
| Immovable Property | — | நிலையியல் சொத்து, தாவரச் சொத்து |
| Impossibility of Performance | — | நிறைவேற்ற இயலாமை |
| In Personam | — | நபர் சுட்டிய |
| In Rem | — | பொருள் சுட்டிய |

Incorporeal — நுண்பொருளியலான, நுண்ணியலான
Indemnity — ஈட்டுறுதி செய்
Injunction — உறுத்துக் கட்டளை
Innuendo — மறைமுக அவதூறு
Insurance — காப்பீடு, இன்சூரன்ஸ்
Interest, Vested — சேர்ந்தடை உரிமை
Investigation — புலன் விசாரணை, புலன் ஆய்வு
Ipso Facto — அது காரணமாகவே

## J

Joint Family, Hindu — இந்துக் கூட்டுக் குடும்பம்
Judge — நீதிபதி, நடுவர்
Judgement Debtor — தீர்ப்புக் கடனாளி
Jurisdiction — அதிகார வரம்பு
Jurisdiction, Original — முதலேற்பு அதிகார வரம்பு

## L

Law — சட்டம்
Lawyer — வழக்கறிஞர்
Letters Patent — முத்திரைப் பத்திரம்
Liability — (சட்டப்படி) பொறுப்புநிலை, உள்ளாதல் நிலை
Licensee — உரிமை பெறுநர்
Lien — பற்றுரிமை
Life interest — ஆயுள் பாத்தியம்
Limited Owner — வரையுடை உரிமையாளர்
Liquidated — அறுதியிட்ட
Liquidator — கலைப்பதிகாரி

## M

Magistrate — குற்றத்துறை நீதிபதி, மாஜிஸ்ட்ரேட்
Maintenance — வாழ்க்கைப் பொருளுதவி, ஜீவனாம்சம்
Major — உரிமை வயது வந்தவர், உரிமை வயதினர்
Marriage Settlement — திருமணச் சொத்தளிப்பு

| | |
|---|---|
| Marshalling Securities | — அடைமானச் சொத்தின் வரிசை உரிமை, மார்ஷலிங் உரிமை |
| Mesne Profits | — இடைக்கால வருமானம் |
| Misfeasance | — (சட்ட) முறைப்பிழை |
| Mistake | — தவற்றுக்கோள், தவறு |
| Mortgage | — அடைமானம் |
| Motion | — இடைக் கோரிக்கை |
| Movable Property | — சங்கம சொத்து, அசைவியல் சொத்து |

## N

| | |
|---|---|
| Nationality | — நாட்டுரிமை நலம் |
| Natural Justice | — இயற்கை நீதி, அறம் |
| Negligence | — கருதாபிழை, கவனமின்மை |
| Negotiable Instrument | — மாற்று முறையாவணம் |
| Non Est Factum, Plea of | — ஆவணப்பிழை வாதம் |
| Non-Feasance | — செய்யாப் பிழை |
| Notice (Knowledge or Cognizance) | — அறிவிக்கை, நோட்டீஸ் |
| Null and Void | — இல்லா நிலையது |

## O

| | |
|---|---|
| Obiter Dictum | — தீர்ப்பின் புறவுரை |
| Obligation (Legal) | — சட்டப்பிணைப்பு |
| Official Assignee | — (தலைநகரில்) நொடிப்பு நிலையர் சொத்தாட்சி அதிகாரி, அபிஷியல் அசைனி |
| Official Liquidator | — கம்பெனி கலைப்பு அதிகாரி, அபிஷியல் லிக்விடேட்டர் |
| Official Receiver | — (நொடிப்புநிலையர்) சொத்தாட்சி அதிகாரி, அபிஷியல் ரிசீவர் |
| Onerous Gift | — பொறுப்பிணை கொடை |
| Ownership | — சொத்துரிமை |

## P

| | |
|---|---|
| Parties | — சாரார், தரப்பினர், வழக்காடிகள் |
| Partition | — பாகப்பிரிவினை, பிரிவினை |

Partners — கூட்டாளிகள்
Patent — புனைபொருள் உரிமை; ஆக்குப் பொருள் உரிமை
Payment — செலுத்தம்
Penalty, Penal sum — தண்டப்பணம்; முறிவு ஈட்டுப் பணம்
Performance — (ஒப்பந்த) நிறைவேற்றம்
Person — நபர்
Personal Action — ஆள் எதிர் வழக்கு
Petitioning Creditor — (நொடிப்புநிலை) கோரும் கடனாளர்
Petitioning Debtor — (நொடிப்புநிலை) கோரும் கடனாளி
Plaint — வழக்குரை
Plea — எதிர் உரை, எதிர்வாதம்
Plead — வாதிடு
Possession — உடைமை
Power — சட்டத்திறன், அதிகாரம்
Power of Attorney — பகர அதிகாரப் பத்திரம், பவர் பத்திரம்
Precedent — முன் தீர்ப்பு முறை, முந்து முறை
Pre-emption — வாங்கு முன்னுரிமை
Presumption — துணிபு
Principal — கடன் முதல்
Principal Debtor — தலைக்கடனாளி
Privity of Contract — ஒப்பந்தச் சார்புறவு
Procedure — (வழக்கு) நடைமுறை
Proceeding — (நீதிமன்ற) நடவடிக்கை
Process — (நீதிமுறைக்) கட்டளை
Proclaimed Offender — சாற்றாணைக் குற்றவாளி
Proof — சான்றுறுதி
Property — சொத்து, சொத்துரிமை
Proposal — புரிவுரை
Prosecution — குற்ற வழக்குத் தொடர்வு, சட்ட நடவடிக்கைத் தொடர்வு
Proviso — கட்டுவாசகம்
public Documents — பொது ஆவணங்கள்

## R

Ratification — ஏற்புறுதி
Receiver — (வழக்குறு சொத்துப்) பேணுநர், ரிசீவர்
Rectification — (முறையாவணத்) திருத்தமைப்பு
Re examination — சாட்சி மறு விசாரணை
Regulations — (வழிசட்ட) ஒழுங்குமுறை
Release — பொறுப்பு நீக்கம்
Relief — மாற்றீடு, பரிகாரம்
Remission — தள்ளுபடி
Repeal — சட்ட நீக்கம், சட்ட ரத்து
Reprieve — தண்டனை நிறுத்திவைப்பு
Repugnant — முரணுன
Res-Judicata — முன்தீர்ப்பின் தடை, மறு தீர்ப்புத் தடை
Rescission — (ஒப்பந்த) இறுத்தம்
Restitution — மீட்டடைப்பு
Retrospective Law — முன்மேவு சட்டம்
Reversionary Right — பின்னடைவுரிமை
Review — மறு ஆய்வு
Revision — சீராய்வு
Revocation — பின்னழிவு, மறித்தழிப்பு
Right — உரிமை
Right in Personam — நபர் கட்டிய உரிமை
Right in Rem — மன்று சுட்டிய உரிமை
Ru e — விதி

## S

Salary — சம்பளம், உழைப்பீடு
Satisfaction — தீரடைவு, தீர்த்தல், மன நிறைவு
Schedule — பின் இணைவு, பின்னிணைப்புப் பட்டி
Scheme — ஏற்பாட்டாவணம்
Search Warrant — சோதனை ஆணை
Secured Creditor — பிணைக் கடனுளர்
Security — பிணையம்
Seizure — கைப்பற்றுகை

| | | |
|---|---|---|
| Set-Off (Plea of) | — | எதிரிடை வாதம் |
| Settlement (Deed) | — | அறுதியாவணம் |
| Settlement of Accounts | — | கணக்கு நிலை ஒய்வு, கட்டிய கணக்கு ஒப்பு |
| Share | — | பங்கு |
| Small Cause Court | — | சிறு வழக்கு நீதிமன்றம் |
| Solicitor | — | சட்டமுகவர், சொலிசிட்டர் |
| Solvency | — | செல்நிலை, நொடிப்பிலா நிலை |
| Specific Performance, Doctrine | — | 'ஏற்றது ஆற்றுக' எனும் கொள்கை |
| Specific Relief | — | குறித்த வகை மாற்றீடு |
| Status | — | தகுநிலை |
| Status Quo | — | உள்ள நிலை |
| Succession | — | உரிமை இறக்கம் |
| Sue | — | வழக்கிடல் |
| Suit | — | உரிமை இயல் வழக்கு |
| Summary Procedure | — | குறுகு நடைமுறை |
| Surety | — | பிணையாள் |

## T

| | | |
|---|---|---|
| Tenant | — | நிலக் குத்தகையாளர் |
| Tender | — | அளிப்பு முனைவு |
| Testamentary | — | விருப்புறுதிபற்றிய, உயில் பற்றிய |
| Third Party | — | மூன்றுமவர் |
| Title | — | உரிமை மூலம் |
| Title Deeds | — | உரிமை மூல ஆவணங்கள் |
| Tort | — | உரிமைத் தீங்கு, தீங்கு |
| Transfer | — | உரிமை மாற்றம் |
| Trespass | — | அத்து மீறுதல் |
| Trial | — | வழக்கு விசாரணை |
| Trust | — | பொறுப்புரிமை அமைப்பு |

## U

| | | |
|---|---|---|
| Undivided Family | — | கூட்டுக் குடும்பம், அவிபக்த குடும்பம் |
| Unjust Enrichment | — | முறையிகந்த ஆதாயம் |
| Unlawful | — | சட்டம் ஒவ்வாத |
| Usage | — | வழக்காறு |

Usury — வரம்பிகந்த வட்டி, அநியாய வட்டி

## V

Valid — செல்லுநிலையது, (சட்டச்) செல்லுடைமை
Value — மதிப்பு
Verdict — தீர்ப்பாய முடிவு
Verification — உண்மையுறுதி வரைவு
Void — இல்லா நிலையது
Voidable — தவிர்தகு
Vote — தன்னிச்சையாக

## W

Wager — பகடைப் பிணையம்
Waiver — உரிமை விடுப்பு
Warrant — பிடியாணை
Will — விருப்புறுதி, உயில்
Writ — நீதிப் பேராணை, ரிட்

# தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

சென்னை-600031



தமிழில் பயில்பவர்க்குக் கல்லூரிப் பாடநூல்கள்

(**Tamil Medium Books for Colleges**)

1975 ஏப்ரல் வரை 650 நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன



**மேலும், விரைவில் வெளிவருபவை**

| | | | |
|---|---|---|---|
| பொறியியல் | — | 39 | நூல்கள் |
| சட்டம் | — | 17 | ,, |
| மருத்துவம் | — | 18 | ,, |
| இயற்பியல் | — | 23 | ,, |
| வேதியியல் | — | 20 | ,, |
| தாவரவியல் | — | 13 | ,, |
| விலங்கியல் | — | 14 | ,, |
| கணிதம் | — | 17 | ,, |
| வணிகவியல் | — | 37 | ,, |
| பொருளாதாரம் | — | 21 | ,, |
| புவியியல் | — | 11 | ,, |
| வரலாறு | — | 29 | ,, |
| மனையியல் | — | 1 | ,, |
| தத்துவம் | — | 4 | ,, |
| உளவியல் | — | 8 | ,, |
| புள்ளியியல் | — | 8 | ,, |
| கல்வி | — | 14 | ,, |
| நிலப்பொதியியல் | — | 6 | ,, |
| அரசியல் | — | 19 | ,, |

கிடைக்குமிடம் :

**தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனக் கிடங்கு**

(கல்லூரிக் கல்வி இயக்குநர் அலுவலகச் சுற்றுக்குள்)

கல்லூரிச் சாலை, நுங்கம்பாக்கம்

சென்னை-600006

கல்லூரிப் பாடநூல்களுக்கு 20% கழிவு வழங்கப்படும்